# சங்கத் தமிழ் 3

பதிற்றுப் பத்து

பரி பாடல்

கலித்தொகை

முனைவர் ச. அகத்தியலிங்கம்

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# சங்கத் தமிழ்

# 3

## வினையியல்

[படர்க்கை விகுதிகள்]

டாக்டர் ச. அகத்தியலிங்கம்

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Institute of Tamil Studies
இரண்டாவது முதன்மைச் சாலை, மையத் தொழில்
நுட்பப்பயிலக வளாகம், தரமணி, சென்னை-600113

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | Cankat Tamil̲ - 3 |
| Author | : | Dr.S.Agathiyalingom (Late)<br>Former Director<br>Centre of Advanced Study in Linguistics<br>Annamalai University |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus<br>Chennai-600 113<br>Ph: 22542992 |
| Publication No. | : | 657 |
| Language | : | Tamil |
| Edition | : | Second, First 1984 |
| Year of Publication | : | 2010 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Point |
| No. of Pages | : | 266 |
| No. of Copies | : | 1000 |
| Price | : | Rs.115/-(Rupees One hundred and fifteen only) |
| Printed by | : | Bharathi Printers<br>Triplicane, Chennai-5 |
| Subject | : | The Language of Sangam Literature |

பேரா. முனைவர் கரு. அழ. குணசேகரன்
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113

## அணிந்துரை

பேராசிரியரும் தமிழறிஞரும் ஆன அகத்தியலிங்கனார் அவர்களுடைய **சங்கத்தமிழ்** வரிசையில் மூன்றாவது நூல் இது.

முதல் நூல் : பழந்தமிழ் நூல்களின் பல்வேறு பொதுப் பண்புகளை மொழியியல் கண்ணோட்டத்தில் ஆராய்வது

இரண்டாம் நூல்: பழந்தமிழ் நூல்களில் காணப்படும் வினை முற்றுகளில் காணக்கிடக்கும் தன்மை, முன்னிலை விகுதிகளைப் பற்றிப் பரக்க ஆராய்வது

இம்மூன்றாம் நூல் பழந்தமிழ் நூல்களில் காணப்படும் படர்க்கை விகுதிகள் பற்றிப் பரக்கப் பேசுவதாகும்.

இந்நூல் ஆண், பெண், பலர்பால் விகுதிகள், அஃறிணை ஒருமை, பன்மை விகுதிகள் ஆகியவற்றை விளக்கமாக மொழியியல் அடிப்படையில் ஆராய்கிறது.

ஏழு இயல்களைக் கொண்டுள்ள இதில் முதல் இயல் இடம், திணை, எண், பால் பகுப்பு பற்றி விளக்குகிறது. மூவிடப் பதிலீடு பெயர்கள் எனத் தன்மைப் பதிலீடு பெயர்கள் எனத் தன்வினையைத் தானே உரைப்பது.

**யான் வந்தேன்**

**யாம் வந்தோம்**

**நாம் வந்தோம்**

முன்னிலைப் பதிலீடு பெயர்கள்

**நீ வந்தனை**

**நீர் வந்தனை**

**நீயிர் வந்தனிர்**

படர்க்கை: தன்மையும் முன்னிலையும் அல்லாதன படர்க்கை எனப்படும்.

இவ்விகுதி பற்றிப் பேசவந்த தொல்காப்பியர்,

**பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை**
**அவ்வயின் மூன்றும் நிகழும் காலத்துச்**
**செய்யும் என்னும் கிளவியொடு கொள்ளா**

என்னும் சூத்திரத்தின் மூலம் உம் விகுதி பல்லோர் படர்க்கையிலும், முன்னிலையிலும், தன்மையிலும் முற்றுச் சொல்லுடன் வாராது எனக் கூறிச் செல்கிறார்.

***உரையாசிரியர்கள்:*** இச்சூத்திரத்திற்கு உரை எழுத வந்த இளம்பூரணர் (சூத். 222, தெய்வச்சிலையார் (சூத். 221), கல்லாடனார் (சூத். 229) ஆகிய உரையாசிரியர்கள் கீழ்க்கண்ட எடுத்துக்காட்டுகளைத் தந்து நிற்பர்.

**அவன் உண்ணும் அவள் உண்ணும்**
**அது உண்ணும் அவை உண்ணும்**

உம் விகுதி படர்க்கைக்குப் பொதுவான (பல்லோர் படர்க்கை நீங்கலாக) ஒரு விகுதியாக வருவதாலும், இவ்விகுதி எடுத்துவரும் வினைமுற்றுகள் அனைத்திலும் இறப்பில் காலத்தையே காட்டி நிற்பதாலும், இதனை ஒரு பால் காட்டும் விகுதியாகக் கொள்ளாது, காலங்காட்டும் இடை நிலையாகவே கொள்ள வேண்டும் எனச் சிலர் (இசரயேல் 1973: 193) கருதுவர். எனவே உம் காலம் காட்டும் இடைநிலை என்றும் இதையடுத்து -Ø- நின்று ஆண்பால் காட்டும் எனவும் கருதலாம் எனுமாறு பல எடுத்துக்காட்டுக்களை எல்லாம் முன்வைத்து விளக்கிச் செல்லும்முறை இந்நூலில் தொடர்ந்து அமைகிறது.

இலக்கணம் குறித்து மொழியியல் நோக்கில் கற்பிக்கும் இந்த நூல் மிகுந்த ஈடுபாட்டினைப் பயில்வோர் கொள்ளப் பல ஏதுக்களைக் கொண்டமைகின்றது. தமிழ் ஆய்வுலகில் இந்த நூல் வரிசைகளைத் தொடர்ந்து வெளியிடும் முயற்சியில் எம் நிறுவனம் ஈடுபட்டுள்ளது. தமிழ் ஆய்வுலகம் வரவேற்கும் எனும் நம்பிக்கை எமக்கு என்றுமுண்டு.

இந்நூலாக்கத்திற்குத் துணை நிற்கும் நல்ல உள்ளங்களை நன்றியுடன் இங்கு நினைவுகூர்கிறோம்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையைக் காட்டிவரும்

**சுட்டுப் பதிலீடு பெயர்:** அவன் வந்தனன், அவள் வந்தனள், அவர் வந்தனர்.

**சுட்டல்லாப் பதிலீடு பெயர்:** தான், தாம் ஆகிய பதிலீடு பெயர்களே படர்க்கைப் பதிலீடு பெயர்களாக இருந்தன என்பர். தொல்திராவிட மொழியிலேயே சுட்டுப் பெயர்கள் படர்க்கைப் பதிலீடு பெயர்களாகப் பயன்பட்டன என்று விளக்கி, தான், தாம் ஆகியவை எந்த விதமான பால் வேறுபாட்டையும் காட்டுவதில்லை; மிகப் பழங்காலத்தில் பதிலீடு பெயர்கள் அனைத்தும் எண் வேற்றுமை காட்டி நின்றன எனக் கருத இடம் உள்ளது.

தன்மையின் முக்கியத்துவம் குறித்துப் பின்வருமாறு தரப்படுகிறது.

யாம், நாம், யாங்கள் ஆகிய பதிலீடு பெயர்களும் தன்மையை மட்டுமின்றித் தன்மை, முன்னிலை, படர்க்கை ஆகியவற்றை உள்ளடக்கி நிற்கின்றன. இந்நிலை பிற பதிலீடு பெயர்களுக்கு இல்லை.

**முன்னிலையின் இடம்**

தன்மைக்கு அடுத்து இதுவே முக்கியத்துவம் வாய்ந்தது.

**நீயும் அவனும் வந்தீர்கள்**

**நீங்கள் வந்தீர்கள்**

**நீயிர் வந்தனீர்**

போன்றவற்றில் முன்னிலை, படர்க்கையை உள்ளடக்கி முன்னிலைப் பன்மை விகுதிகள் வருதல் காண்கிறோம். இதே நிலையைத் தான் முன்னிலைப் பதிலீடு பெயர்களிலும் காண்கிறோம்.

**நீயர், நீர்**

ஆகிய சொற்கள் முன்னிலையை மட்டுமன்றி முன்னிலையையும் படர்க்கையையும் அடக்கி நிற்கும்.

இவ்வாறான விளக்கங்கள் மற்றும் எடுத்துக்காட்டுகளுடன் இந்நூலில் காணப்படும் ஏழு இயல்களும் அமைகின்றன.

-அன், -ஆன், -ஓன் ஆகிய விகுதிகள் மட்டுமன்றி -உம், -ஐ அடுத்து வரும் -Ø- ஆண்பால் ஒருமையைக் காட்டி நிற்கின்றது. இவ்விகுதி பழந்தமிழ் இலக்கியங்களைப் பொறுத்தமட்டில் ஆண் பால் ஒருமையை மட்டுமின்றி, பெண்பால், ஒன்றன்பால், பலவின்பால் ஆகியவற்றையும் காட்டி நிற்பது குறிப்பிடத்தக்கதாகும்.

நிறுவனத் தலைவரும் தமிழக அரசின் முதல்வருமான மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்களுக்குத் தமிழுலகம் என்றும் நன்றிக் கடன்பட்டுள்ளது.

தமிழ்ப்பணிகளுக்கு ஆற்றுப்படுத்தி வரும் மாண்புமிகு தமிழக நிதியமைச்சர் பேராசிரியர் க. அன்பழகன் அவர்களுக்கு எம் நன்றி என்றும் உரியது.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும் செய்தித் துறை அரசுச் செயலாளர் திரு க. முத்துசாமி இ.ஆ.ப. அவர்களுக்கும் நன்றி.

இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த பாரதி அச்சகத்தாருக்கு எம் பாராட்டுகள்.

இயக்குநர்

# முன்னுரை

"சங்கத்தமிழ்" என்னும் வரிசை நூல்களில் இது மூன்றாவது நூல். முதல் நூல் தமிழ்மொழி வரலாற்றின் காலப் பகுப்பு தொல் பழந்தமிழ், முன்பழந்தமிழ், பின்பழந்தமிழ், இலக்கியங்களின் கால வரிசைமுறை, சங்க இலக்கியங்களின் தொகுப்பு வரிசைமுறை போன்ற இன்னோரன்ன பலவேறு செய்திகளைத் தன்னகத்தே கொண்டு பழந்தமிழ் நூல்களின் பலவேறு பொதுப் பண்புகளையும் மொழியியல் கண்ணோட்டத்தில் ஆராய்ந்து நிற்பது.

இரண்டாவது நூல், பண்டைத் தமிழ் நூல்களில் காணப்படும் வினைமுற்றுக்களில் காணக்கிடக்கும் தன்மை, முன்னிலை விகுதி களைப் பற்றிப் பரக்க ஆராய்ந்து நிற்பது. இருநூற்று எண்பதுக்கும் அதிகமான பக்கங்களைக் கொண்ட இந்நூலில் தன்மை, முன்னிலை விகுதிகள், அவற்றில் காணப்படும் உயர்வு ஒருமைப் (Honorific singular) பண்புகள், இவை பற்றித் தொன்மை இலக்கண மாம் தொல்காப்பியம் கூறும் விதிமுறைகள், அவற்றிற்கும் பண்டைத் தமிழ் இலக்கியங்களில் காணப்படும் இலக்கணக்கூறு களுக்கும் இடையேயுள்ள ஒற்றுமை, வேற்றுமைகள், பலவேறு அறிஞர்கள் அவ்வப்போது கூறியுள்ள ஆராய்ச்சி விளக்கங்கள் போன்ற இன்னோரன்ன செய்திகள் தற்கால மொழியியல் கண் ணோட்டத்தில் ஆராயப்படுகின்றன.

மூன்றாவது வரிசை நூலாகிய இந்நூல் பண்டைத் தமிழ் இலக்கியங்களில் காணப்படும் படர்க்கை விகுதிகள் பற்றிப் பரக்கப் பேசும் முழுமுதல் நூலாகும். தமிழில் காணப்படும் இடம், திணை, எண், பால் பகுப்புக்களின் அடிப்படை, அது பற்றிய இலக்கணிக ளின் எண்ணங்கள், உயர்வு ஒருமையின் பண்புகள், பண்டைத் தமிழ் மொழியில் காணப்படும் உயர்வு ஒருமையின் உண்மைகள் போன்ற

வற்றோடு ஆண், பெண், பலர்பால் விகுதிகள், அஃறிணை ஒருமை, பன்மை விகுதிகள் ஆகியவற்றை விளக்கமாக மொழியியல் அடிப்படையில் ஆராய்வது.

தொல்காப்பிய நூற்பாக்களுடன் உரையாசிரியர்களின் விளக்கங்கள், உண்மையிலேயே அவை பொருந்துமா என்ற நுண்ணிய ஆராய்ச்சிகள், அவற்றையொட்டிப் பலவேறு இலக்கணிகளின் எண்ணங்கள் போன்ற இன்னோரன்ன பலவேறு செய்திகள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

தொல்காப்பிய நூற்பாக்கள் பற்றிக் குறிப்பிடும்போது அவை பற்றிய பூரணமான, முழுமையான ஆராய்ச்சி இந்நூலில் இடம் பெறவில்லை. இந்நூலின் நோக்கமும் அதுவன்று. இரண்டாவது வரிசை நூலின் முன்னுரையில் இதுபற்றி விளக்கமாகக் குறிப்பிட்டுள்ளேன். இந்நிலையில் அவற்றை மீண்டும் கூறுதல் இங்கு வேண்டுவதன்று.

இந்நூல் எழு இயல்களைக் கொண்டது இதன் முதல் இயல் இடம், திணை, எண், பால் பகுப்பு பற்றியது. தமிழ் மொழியில் காணப்படும் இத்தகைய பகுப்பு அமைப்பு அடிப்படையில் அமைந்ததா, அல்லது பொருள் அடிப்படையில் அமைந்ததா எனப் பரக்க ஆராயப்படுகின்றது.

சாஸ்திரி போன்ற பல அறிஞர்கள் பொருள் அடிப்படையே எனக் கூறிய போதிலும் தமிழ் மொழியின் அமைப்பு அடிப்படையிலேயே இப்பகுப்பு முறை அமைந்துள்ளது எனப் பலவேறு காரண காரியங்களுடன் நிறுவுவது குறிப்பிடத்தக்கது.

அடுத்து, ஆண்பால் விகுதிகள் ஆராயப்படுகின்றன. பண்டைத் தமிழ் நூல்களில் காணப்படும் பலவேறு ஆண்பால் விகுதிகள், அவை வரும் சூழல்கள் போன்றின்னோரன்ன பல செய்திகள் இதில் இடம் பெறக் காணலாம். -அன், -ஆன் ஆகிய விகுதிகளில் -ஆன் முன்பழந்தமிழில் எதிர்மறையில் பரக்க வருவது குறிப்பிடத்தக்கது.

இதே நிலையினைத்தான் பெண்பால் விகுதிகளிலும் காண்கிறோம். அள், ஆள் விகுதிகளின் போக்கு பற்றிப் பரக்க ஆராயப்படுகின்றது.

பலர்பால் விகுதிகள் அடுத்த இயலில் ஆராயப்படுகின்றது. அர், ஆர், ப, மார் ஆகிய விகுதிகள் பற்றி ஆராயப்படும் இப் பகுதியில் மார் விகுதி ஆர் ஈற்றில் அடங்காதோ என்ற வினாவை எழுப்பிப் பலவேறு இலக்கணிகளின் எண்ணங்களுடன் புது முடிவையும் தருவதாக உள்ளது. மார் ஈறு எச்சமாகக் கருதப்பட வேண்டிய ஒன்று என்றும், எனினும் அதனைச் சில இடங்களில் வினைமுற்று ஈறாகவும் கொள்ளுதல் வேண்டும் எனவும் காரண காரியங்களுடன் பண்டைத் தமிழ் இலக்கியங்களை அரணாகக் கொண்டு நன்கு விளக்கப்படுவது மரபு இலக்கண அறிஞர்களுக்குப் பெருவிருந்தாக அமையும். இதுபோன்றே பகரம் தனி ஈறே என்ற ஆய்வும் இடம் பெறுதல் காணலாம்.

இதனை அடுத்து வருவது படர்க்கை உயர்வு ஒருமை பற்றியது. பண்டைத்தமிழில் காணப்படும் படர்க்கை உயர்வு ஒருமை பற்றியும் அதைக் காட்டும் பலவேறு விகுதிகள் பற்றியும் ஆராய்வது இது. உயர்வு ஒருமை பண்டைத்தமிழில் எவ்வாறு காட்டப் படுகிறது, அதன் ஆக்கமும் அடிப்படையும் என்னென்ன என்றெல்லாம் ஆராய்ந்து நிற்பது இது.

ஆறாவது இயல் அஃறிணை ஒருமை பற்றியது. தொல்காப்பியம் அன், ஆன் என்றெல்லாம் உயிரெழுத்துடன் பிற விகுதிகளைக் கூறி அஃறிணையில் மட்டும் அவ்வாறு கூறாது, து, டு, று எனக் கூறுவதன் காரணம் என்ன என்று ஆராய்வதுடன் இவ் விகுதிகள் பற்றிப் பரக்கப் பேசும் பகுதி இது.

இறுதிப் பகுதி பலவின்பால் பற்றிக் கூறுவது. பலவேறு விகுதிகள் அலசி ஆராயப்படுவதுடன் அகர, வகரம் பற்றி ஒரு ஆராய்ச்சி உரையையும் உள்ளடக்கியது. வகரம் அகரத்துள் அடங்காதோ என்ற வினாவை எழுப்பிப் பலவேறு உரையாசிரியர் களின் எண்ணங்களை எடுத்துக்கூறிப் பழந்தமிழ் இலக்கியங்களில் காணப்படும் உண்குவென், உண்குவெம், உண்குவம் போன்ற சொற்களை அடிப்படை ஆதாரமாகக் கொண்டு வகரம் அகரத்துள் அடங்கும் என முடிபு கூறும் பகுதி இலக்கண அறிஞர்களுக்குப் புதுமையான ஒரு விளக்கமாக அமையும்.

இத்தகைய பலவேறு செய்திகள் இந்நூலில் இடம்பெறக் காணலாம். முன்னர்க் கூறியது போன்று பழந்தமிழ் இலக்கியங் களுக்கு ஒருசேர நல்லதொரு இலக்கணம் இல்லையே என்ற எண்ணத்தில் எழுந்தவைகளே இவ்வரிசை நூல்கள். மேலும் இந் நூல்கள் தமிழ்மொழி வரலாறு எழுதுவதற்கும் துணை நிற்பன வாகும். பண்டைத் தமிழ் மொழியின் அமைப்பை நன்குப் புரிந்து கொள்வதற்கும் தமிழ்மொழி வரலாற்றை அறுதியிடுவதற்கும் இவை நன்கு உதவும்.

மொழியைப் பேசுவது எளிது ஆனால் அதனை அலசி ஆராய் வது அத்தனை எளிதன்று எத்தனையோ சிக்கல்கள், எத்தனையோ புதிய புதிய எண்ணங்கள், கோட்பாடுகள், ஒரு மொழியின் முழு மையான இலக்கணம் அமைப்பது என்பது சாமானிய காரியமன்று. தொல்காப்பியத்திற்குப் பின்னரும் எத்தனையோ இலக்கணங்கள். எனினும் சொல்லவேண்டியதை எல்லாம் சொல்லிவிட்டோமா? இந்நிலையில் எத்தனை வரிசை நூல்கள் என்பதும் கணிக்க முடியாத ஒன்றாக உள்ளது.

இத்தகைய வரிசை நூல்களை உருவாக்குதல் ஒரு தனி மனிதனால் முடியாத ஒன்று. எத்தனையோ அறிஞர்கள் ஆக்கித் தந்த டாக்டர் பட்ட ஆய்வுரைகள், அவற்றோடு இணைந்த சொல் லடைவுகள், பல்வேறு அறிஞர்களின் விளக்கங்கள், கட்டுரைகள் இவையெல்லாம் உள்ள நிலையில்தான் இவ்வரிசை நூல்கள். இவர்களுக்கெல்லாம் நன்றி கூறுவது என்ன, எளிதான காரியமா? எனினும் என் நன்றியைக் காணிக்கையாக்கி மகிழ்வதில் உண் மையிலேயே பெருமையடைகிறேன்.

இதைப் போன்றே இந்நூல் உருவாவதற்கு இரவு பகலாக உழைத்தவர்கள் பலர். என் உடனுறை ஆசிரியர்கள் பலர்; மாண வர்கள் பலர்; இவர்கள் பெயரையெல்லாம் தனித்தனியாகத் தரின் அதுவே ஒரு பெரும் பட்டியல் ஆகிவிடும்.

எனினும் சிலர் குறிப்பிடத்தக்கவர்கள். டாக்டர் செ. வை. சண்முகம், டாக்டர் ந. குமாரசாமி ராஜா, டாக்டர் கே. பாலசுப்பி ரமணியன், டாக்டர் சீ. ஜெயபால், டாக்டர் எஸ். ஜீன் லாரன்ஸ், டாக்டர் செல்வி மு. சுசீலா போன்றவர்களின் உழைப்பும் உறு

துணையும் குறிப்பிடத்தக்கவை. இவர்களுக்கு என் நன்றியும் கடப் பாடும் என்றும் உரியன.

இவர்களைப் போன்றே என் ஆய்வு மாணவர்கள் பலரும் அயராது உழைத்தனர். அவர்களுள் எல். இராமமூர்த்தியைப் பற்றி நான் குறிப்பிட்டாக வேண்டும். இரவும், பகலும் அச்சுக்கூடம் சென்று என்றும் எவ்விதச் சோர்வுமின்றி அச்சுப் பிரதிகளைத் திருத்தி உதவியவர். இதைப்போன்றே பிற மாணவர்களும் இவர் களுக்கும் என் நன்றி. இந்நூலினை நன்கு அச்சிட்டுத் தந்த ஸ்ரீ வினாயகா அச்சகத்தினருக்கும் என் நன்றி.

இந்நூலின்கண் இடம் பெறும் ஒருசில கட்டுரைகள் "மொழி யியல்' இதழில் வெளிவந்தவை. அவற்றை இந்நூலின்கண் இணைத்துக் கொள்ள அனுமதி தந்த அனைத்திந்தியத் தமிழ் மொழி யியற் கழகத்தினருக்கு என் நன்றி உரித்தாகுக.

அண்ணாமலைப் பல்கலைக்கழகம்! தமிழ் வளர்க்கும் தனிப் பெரும் கழகம். இக்கல்விக் கோயிலில் பயிலவும் மட்டுமன்றிப் பணி புரியும் மாபெரும் பேற்றினையும் பெற்றவன் நான். என் சிந்த னைக்கும் செயலுக்கும் வாழ்வும் வளமும் அளித்து வேராகவும் விதையாகவும் மட்டுமன்றிக் காயாகவும் கனியாகவும் நிற்கும் கன்னித்தமிழ்க் கோயில் இது. இக்கோயிலில் நாளும் வலம் வரும் நான் இதற்கு என்றும் கடமைப்பட்டவன். இத்தகைய கழகத்திற்கு, கலங்கரை விளக்கத்திற்கு என் நன்றியைக் காணிக்கையாக்கி நிற் பதில் பெருமை அடைகிறேன். இவ்வரிசை நூல்களை வெளியிட அனுமதி தந்த என் அன்னைக் கோயிலுக்கு மீண்டும் என் நன்றி.

புத்தம் புதிய கலைகளுக்கும் ஆய்வு எண்ணங்களுக்கும் ஆராய்ச்சி உணர்வுகளுக்கும் தமிழகத்தில் என்றுமே வரவேற்பும் வாழ்வும் உண்டு என்பதற்கு என் அனுபவமே சான்றாக நிற்கும். என்னால் எழுதப்பட்ட அத்தனை நூல்களுக்கும் தமிழகம் தந்த ஆசியும் ஆதரவும் மறக்க முடியாதன. இந்நிலையில் இவ்வரிசை நூல் களுக்கும் உங்கள் அன்பும் ஆசியும் என்றும் உண்டு என்ற நம்பிக் கையில் இவற்றை உங்கள்முன் சமர்ப்பிப்பதில் பெருமையோடு பெரு மகிழ்ச்சியும் அடைகிறேன்.

# சொற் சுருக்க அடைவு

| | |
|---|---|
| அகம் | அகநானூறு |
| இளம் | இளம்பூரணர் |
| உ. ஒருமை | உயர்வு ஒருமை |
| எழுத்து | எழுத்ததிகாரம் |
| ஐங் | ஐங்குறுநூறு |
| கல் | கல்லாடனார் |
| கலி | கலித்தொகை |
| குறள் | திருக்குறள் |
| குறு | குறுந்தொகை |
| சிலம்பு | சிலப்பதிகாரம் |
| சூத் | சூத்திரம் |
| சேனா | சேனாவரையர் |
| சொல் | சொல்லதிகாரம் |
| தெய்வ | தெய்வச்சிலையார் |
| தொல் | தொல்காப்பியர் |
| நச் | நச்சினார்க்கினியர் |
| நற் | நற்றிணை |
| பத்து | பத்துப்பாட்டு |
| பதி | பதிற்றுப்பத்து |
| பரி | பரிபாடல் |
| பொருள் | பொருளதிகாரம் |
| மணி | மணிமேகலை |
| வி. அ. பெயர் | வினையாலணையும் பெயர் |
| வி. மு. | வினைமுற்று |

# உள்ளுறை


முன்னுரை

சொற் சுருக்க அடைவு

உள்ளுறை

| | | |
|---|---|---|
| 1. | இடம், திணை, எண், பால் பகுப்பு | 1 - 14 |
| 1.1 | சொல்வகைப்பாடு | 1 |
| 1.2 | இலக்கணக் கூறுகள் | 1 |
| 1.3 | தமிழில் பலவேறு பாகுபாடுகளும் பதிலீடு பெயர்களும் | 2 |
| 1.3.1 | தன்மைப் பதிலீடு பெயர்கள் | 3 |
| 1.3.2 | முன்னிலைப் பதிலீடு பெயர்கள் | 3 |
| 1.3.3 | படர்க்கை | 3 |
| 1.3.3.1 | சுட்டுப் பதிலீடு பெயர் | 4 |
| 1.3.3.2 | சுட்டல்லாப் பதிலீடு பெயர் | 4 |
| 1.3.4 | தன்மையின் முக்கியத்துவம் | 4 |
| 1.3.5 | முன்னிலையின் இடம் | 5 |
| 1.4 | திணை | 6 |
| 1.4.1 | திணை என்ற சொல் | 6 |
| 1.4.2 | திணைப் பாகுபாடு | 6 |
| 1.4.2.1 | அமைப்பு | 7 |
| 1 5 | எண் | 8 |
| 1.5.1 | அடிப்படை | 8 |
| 1 5.2 | இடமும் எண்ணும் | 9 |
| 1.5.3 | எண்ணும் பாலும் | 10 |
| 1.6 | பால் | 10 |
| 1.6 1 | பால் என்ற சொல் | 10 |
| 1.6 2 | இயற்கைப் பால்பகுப்பும் இலக்கணப் பால்பகுப்பும் | 10 |
| 1.6.3 | உயர்திணைப் பால்பகுப்பு : அடிப்படைக் காரணம் | 11 |

| | | |
|---|---|---|
| 1.6.4 | அஃறிணைப் பால்பகுப்பு: அடிப்படைக்காரணம் | 12 |
| 1.6.5 | உயர்வு ஒருமை | 14 |
| 1.6.6 | பண்டைத் தமிழில் பகுப்பு | 14 |
| **2.** | **ஆண்பால்** | **15 - 47** |
| 2 1 | ஆண்பால் வினைமுற்றுக்கள் | 15 |
| 2.1 1 | ஆண்பால் பெயர்களும் பதிலிடு பெயர்களும் | 15 |
| 2.1.1 1 | பெயர்கள் | 15 |
| 2.1.1.2 | பதிலிடு பெயர்கள் | 16 |
| 2.1.2 | ஆண்பால் விகுதிகளும் தொல்காப்பியமும் | 17 |
| 2.1.3 | தொல்காப்பியப் பயிற்சி | 18 |
| 2.1.4 | பெரும்பான்மை விகுதி | 19 |
| 2.2 | விகுதிகள் | 20 |
| 2.2.1 | -அன் | 20 |
| 2.2.1.1 | உரையாசிரியர்கள் | 20 |
| 2.2.1.2 | சூழல்கள் | 21 |
| 2.2.1.2.1 | -அன்- சாரியைக்குப் பின்னர் | 22 |
| 2.2.1.2.2 | -இன்- இறந்தகால இடைநிலைக்குப் பின்னர் | 22 |
| 2.2.1 2.3 | இறப்பில்கால இடைநிலைகளுக்குப் பின்னர் | 23 |
| 2.2.1.2.4 | -அல்-,-இல்- எதிர்மறை இடைநிலைகளுக்குப் பின்னர் | 23 |
| 2.2 1.2.5 | குறிப்பு வினையடிகளுக்குப் பின்னர் | 24 |
| 2.2.1.2.6 | வினையாலணையும் பெயர் விகுதிகளுக்குப் (-Ø-, -அவ்-, -(உ)ந்-) பின்னர் | 24 |
| 2.2.2 | -ஆன் | 27 |
| 2.2.2.1 | உரையாசிரியர்கள் | 28 |
| 2.2.2.2 | சூழல்கள் | 29 |
| 2.2.2.2.1 | இறந்தகால இடைநிலைகளுக்குப் பின்னர் | 29 |
| 2.2.2.2.2 | இறப்பில்கால இடைநிலைகளுக்குப் பின்னர் | 30 |
| 2.2.2.2.3 | -Ø- எதிர்மறைக்குப் பின்னர் | 31 |
| 2.2.2.2.4 | குறிப்பு வினையடிகளுக்குப் பின்னர் | 31 |
| 2.2.2.2.5 | வினையாலணையும் பெயர் விகுதி -Ø- வுக்குப் பின்னர் | 32 |
| 2.2.3 | -ஒன் | 34 |
| 2.2.3.1 | உரையாசிரியர்கள் | 35 |
| 2.2.3.2 | சூழல்கள் | 36 |
| 2.2.3.2.1 | இறந்தகால இடைநிலைகளுக்குப் பின்னர் | 36 |

| | | |
|---|---|---|
| 2.2.3.2.2 | இறப்பில்கால இடைநிலை -ம்- மூக்குப் பின்னர் | 36 |
| 2.2.3.2.3 | குறிப்பு வினையடிகளுக்குப் பின்னர் | 36 |
| 2.2.3.2.4 | வினையாலணையும் பெயர் விகுதி -∅-க்குப் பின்னர் | 37 |
| 2.2.4 | -∅ | 38 |
| 2.2.4.1 | உரையாசிரியர்கள் | 38 |
| 2.2.4.2 | சூழல் | 40 |
| 2.2.4.2.1 | இறப்பில்கால இடைநிலை -உம்-மூக்குப் பின்னர் | 40 |
| 2.3 | பட்டியல்கள் | 44–47 |

**3. பெண்பால்** **48 - 80**

| | | |
|---|---|---|
| 3.1 | பெண்பால் வினைமுற்றுக்கள் | 48 |
| 3.1.1 | பெண்பால் பெயர்களும் பதிலிடு பெயர்களும் | 48 |
| 3.1.1.1 | பெண்பால் பெயர்கள் | 49 |
| 3.1.1.2 | பதிலிடு பெயர்கள் | 49 |
| 3.1.2 | பெண்பால் விகுதிகளும் தொல்காப்பியமும் | 50 |
| 3.1.3 | தொல்காப்பியப் பயிற்சி | 51 |
| 3.1.4 | பெரும்பான்மை விகுதி | 52 |
| 3.2 | விகுதிகள் | 54 |
| 3.2.1 | –அள் | 54 |
| 3.2.1.1 | உரையாசிரியர்கள் | 54 |
| 3.2.1.2 | சூழல்கள் | 55 |
| 3.2.1.2.1 | –அன்- சாரியைக்குப் பின்னர் | 56 |
| 3.2.1.2.2 | இறந்தகால -இன்-, -இ- இடைநிலைகளுக்குப் பின்னர் | 56 |
| 3.2.1.2.3 | நிகழ்கால இடைநிலை -ஆநின்று-க்குப் பின்னர் | 57 |
| 3.2.1.2.4 | இறப்பில்கால இடைநிலைகளுக்குப் பின்னர் | 57 |
| 3.2.1.2.5 | -அல்- எதிர்மறைக்குப் பின்னர் | 58 |
| 3.2.1.2.6 | இறந்தகால எச்சங்களுக்குப் பின்னர் வரும் எதிர்மறை -இல் -லுக்குப் பின்னர் | 58 |
| 3.2.1.2.7 | குறிப்பு வினையடிகளுக்குப் பின்னர் | 58 |
| 3.2.1.2.8 | வினையாலணையும் பெயர் விகுதிகளுக்குப் (-∅-, -அல்-, -(உ)(ந்)-) பின்னர் | 59 |
| 3.2.2 | –ஆள் | 60 |
| 3.2.2.1 | உரையாசிரியர்கள் | 62 |

| | | |
|---|---|---|
| 3.2.2.2 | சூழல்கள் | 64 |
| 3.2.2.2.1 | இறந்தகால இடைநிலைகளுக்குப் பின்னர் | 64 |
| 3.2.2.2.2 | இறப்பில்கால இடைநிலைகளுக்குப் பின்னர் | 65 |
| 3.2.2.2.3 | -∅- எதிர்மறைக்குப் பின்னர் | 65 |
| 3.2.2.2.4 | குறிப்பு வினையடிகளுக்குப் பின்னர் | 66 |
| 3.2.2.2.5 | வினையாலணையும் பெயர் விகுதி -∅-க்குப் பின்னர் | 66 |
| 3.2.3 | -ஒள் | 68 |
| 3.2.3.1 | வினைமுற்றும் வினையாலணையும் பெயரும் | 68 |
| 3.2.3.2 | சூழல்கள் | 69 |
| 3.2.3.2.1 | இறந்தகால இடைநிலைகளுக்குப் பின்னர் | 69 |
| 3.2.3.2.2 | -ஆத்- எதிர்மறைக்குப் பின்னர் | 70 |
| 3.2.3.2.3 | குறிப்பு வினையடிகளுக்குப் பின்னர் | 70 |
| 3.2.3.2.4 | வினையாலணையும் பெயர் விகுதி-∅-க்குப் பின்னர் | 71 |
| 3.2.4 | -இ | 73 |
| 3.2.5 | -∅ | 73 |
| 3.2.5.1 | சூழல் | 74 |
| 3.2.5.1.1 | -உம்- இறப்பில் கால இடைநிலைக்குப் பின்னர் | 74 |
| 3.3 | பட்டியல்கள் | 77 - 80 |

**4. பலர்பால் 81 - 133**

| | | |
|---|---|---|
| 4.1 | பலர்பால் வினைமுற்றுக்கள் | 81 |
| 4.1.1 | பலர்பால் பெயர்களும் பதிலீடுபெயர்களும் | 81 |
| 4.1.1.1 | பெயர்கள் | 81 |
| 4.1.1.2 | பதிலீடு பெயர்கள் | 82 |
| 4.1.2 | பலர்பால் விகுதிகளும் தொல்காப்பியமும் | 83 |
| 4.1.3 | தொல்காப்பியப் பயிற்சி | 83 |
| 4.1.4 | பெரும்பான்மை விகுதி | 85 |
| 4.2 | விகுதிகள் | 85 |
| 4.2.1 | -அர் | 85 |
| 4.2.1.1 | உரையாசிரியர்கள் | 86 |
| 4.2.1.2 | சூழல்கள் | 87 |
| 4.2.1.2.1 | -அன்- சாரியைக்குப் பின்னர் | 88 |
| 4.2.1.2.2 | -இன்- இறந்தகால இடைநிலைக்குப் பின்னர் | 89 |

| | | |
|---|---|---|
| 4.2.1.2.3 | இறப்பில்கால இடைநிலைகளுக்குப் பின்னர் | 89 |
| 4.2.1.2.4 | -அல், -இல்- எதிர்மறை இடைநிலைகளுக்குப் பின்னர் | 90 |
| 4.2.1.2.5 | குறிப்பு வினையடிகளுக்குப் பின்னர் | 91 |
| 4.2.1.2.6 | வினையாலணையும் பெயர் விகுதிகளுக்குப் பின்னர் (-∅-, -அவ்-, -உ(ந்)-) | 91 |
| 4.2.2 | -மார் | 95 |
| 4.2.2.1 | தொல்காப்பியமும் உரையாசிரியர்களும் | 95 |
| 4.2.2.2 | மார் ஈறா ? | 95 |
| 4.2.2.3 | முற்றா ? எச்சமா ? | 95 |
| 4.2.2.4 | வினையாலணையும் பெயர் | 99 |
| 4.2.2.5 | ஆரீறா? | 100 |
| 4.2.2.6 | எச்சமே | 101 |
| 4.2.2.7 | எதிர்மறை முற்று | 102 |
| 4.2.2.8 | பெயர் கொண்டு முடிதல் அவசியமா ? | 103 |
| 4.2.2.9 | மூன்று நிலைகள் | 104 |
| 4.2.2.10 | சூழல் | 105 |
| 4.2.2.10.1 | -அல்- எதிர்மறைக்குப் பின்னர் | 105 |
| 4.2.3 | -ஆர் | 105 |
| 4.2.3.1 | உரையாசிரியர்கள் | 107 |
| 4.2.3.2 | சூழல்கள் | 108 |
| 4.2.3.2.1 | இறந்தகால இடைநிலைகளுக்குப் பின்னர் | 108 |
| 4.2.3.2.2 | இறப்பில்கால இடைநிலைகளுக்குப் பின்னர் | 109 |
| 4.2.3.2.3 | -∅-எதிர்மறைக்குப் பின்னர் | 109 |
| 4.2.3.2.4 | குறிப்புவினை அடிகளுக்குப் பின்னர் | 110 |
| 4.2.3.2.5 | வினையாலணையும் பெயர் விகுதி -∅- க்குப் பின்னர் | 110 |
| 4.2.4 | -ஓர் | 113 |
| 4.2.4.1 | உரையாசிரியர்கள் | 114 |
| 4.2.4.2 | சூழல்கள் | 115 |
| 4.2.4 2 2 | இறந்தகால இடைநிலைகளுக்குப் பின்னர் | 115 |
| 4.2 4.2.2 | இறப்பில்கால இடைநிலைகளுக்குப் பின்னர் | 115 |
| 4 2.4 2.3 | -ஆத்- எதிர்மறைக்குப் பின்னர் | 115 |
| 4 2 4.2.4 | குறிப்பு வினையடிகளுக்குப் பின்னர் | 115 |
| 4.2,4.2.5 | வினையாலணையும் பெயர் விகுதி -∅- க்குப் பின்னர் | 116 |

| | | |
|---|---|---|
| 4.2 5 | -ப | 118 |
| 4.2.5.1 | தொல்காப்பியமும் உரையாசிரியர்களும் | 118 |
| 4.2 5.2 | பகரமா, அகரமா? | 119 |
| 4.2.5.3 | சூழல் | 120 |
| 4.2 5.3.1 | -∅- இறப்பில்கால இடைநிலைக்குப் பின்னர் | 1 20 |
| 4.2.6 | இரட்டைப் பன்மை விகுதிகள் | 120 |
| 4.2.6 1 | விகுதிகள் | 122 |
| 4 2.6.1.1 | -அர்கள் | 122 |
| 4.2.6 1.1.1 | சூழல் | 122 |
| 4.2.6.1.2 | -ஆர்கள் | 123 |
| 4.2.6.1 2.1 | சூழல் | 123 |
| 4.2.6.1.3 | -ஓர்கள் | 123 |
| 4.2.6.1.3.1 | சூழல் | 123 |
| 4.3 | பட்டியல்கள் | 124-131 |
| **5.** | **படர்க்கை உயர்வு ஒருமை** | **134 — 157** |
| 5.1 | உயர்வு ஒருமை | 134 |
| 5 1.1 | பண்டைத்தமிழில் படர்க்கை உயர்வு ஒருமை | 134 |
| 5.1.1.1 | பெயர்கள் | 135 |
| 5.1.1.2 | பதிலிடு பெயர்கள் | 135 |
| 5.1.1.3 | வினைமுற்றுக்கள் | 137 |
| 5.2 | விகுதிகள் | 138 |
| 5.2.1 | -அர் | 138 |
| 5.2 1.1 | சூழல்கள் | 138 |
| 5.2.1.1.1 | -அன்- சாரியைக்குப் பின்னர் | 139 |
| 5.2.1.1.2 | -இன்- இறந்தகால இடைநிலைக்குப் பின்னர் | 139 |
| 5.2.1.1.3 | இறப்பில்கால இடைநிலைகளுக்குப் பின்னர் | 139 |
| 5 2.1.1.4 | -அல்- எதிர்மறைக்குப் பின்னர் | 140 |
| 5.2.1 1.5 | குறிப்பு வினையடிகளுக்குப் பின்னர் | 140 |
| 5.2 1.1.6 | வினையாலணையும் பெயர் விகுதிகள் -∅-, -அவ்- விற்குப் பின்னர் | 140 |
| 5.2.2 | -ஆர் | 141 |
| 5.2.2.1 | சூழல்கள் | 141 |

| | | |
|---|---|---|
| 5.2.2.1.1 | இறந்தகால இடைநிலைகளுக்குப் பின்னர் | 142 |
| 5.2.2.1.2 | இறப்பில்கால இடைநிலைகளுக்குப் பின்னர் | 142 |
| 5.2.2 1 3 | -∅-, -அல்- எதிர்மறை விகுதிகளுக்குப் பின்னர் | 142 |
| 5.2.2.1.4 | குறிப்புவினை அடிகளுக்குப் பின்னர் | 142 |
| 5.2.2.1.5 | வினையாலணையும் பெயர் விகுதி -∅-க்குப் பின்னர் | 142 |
| 5.2.3 | -ஒர் | 143 |
| 5.2.3.1 | சூழல்கள் | 143 |
| 5.2.3.1.1 | பல்வேறு இறந்தகால விகுதிகளுக்குப் பின்னர் | 144 |
| 5.2.3.1.2 | இறப்பில் கால விகுதி -வ்- விற்குப் பின்னர் | 144 |
| 5.2.3.1.3 | வினையாலணையும் பெயர் விகுதி -∅-க்குப் பின்னர் | 144 |
| 5.2.4 | -ப | 145 |
| 5.2.4.1 | சூழல்கள் | 145 |
| 5.2.4.1.1 | இறப்பில்கால இடைநிலை -∅- க்குப் பின்னர் | 145 |
| 5.3 | பட்டியல்கள் | 146—151 |
| 5.4 | உயர்வு ஒருமை விகுதிகள் வரும் இடங்கள் | 152 |
| **6.** | **ஒன்றன்பால்** | **158 — 192** |
| 6.1 | அஃறிணை | 158 |
| 6.1.1 | ஒன்றன்பால் வினைமுற்றுக்கள் | 159 |
| 6.1.1.1 | ஒன்றன்பால்பெயர்களும் பதிலிடுபெயர்களும் | 159 |
| 6.1.1.1.1 | பெயர்கள் | 159 |
| 6.1.1.1.2 | பதிலிடு பெயர்கள் | 160 |
| 6.1.2 | ஒன்றன்பால் விகுதிகளும் தொல்காப்பியமும் | 161 |
| 6.1.3 | தொல்காப்பியப் பயிற்சி | 163 |
| 6.1.4 | பெரும்பான்மை விகுதி | 164 |
| 6.2 | விகுதிகள் | 165 |
| 6.2.1 | -அது | 165 |
| 6.2.1.1 | உரையாசிரியர்கள் | 165 |
| 6.2.1.2 | சூழல்கள் | 166 |
| 6.2.1.2.1 | இறந்தகால இடைநிலைகளுக்குப் பின்னர் | 167 |
| 6.2.1.2.2 | நிகழ்கால இடைநிலை -கின்று-க்குப் பின்னர் | 168 |
| 6.2.1.2.3 | இறப்பில் கால இடைநிலைகளுக்குப் பின்னர் | 168 |

| | | |
|---|---|---|
| 6.2.1.2.4 | -அல்- எதிர்மறைக்குப் பின்னர் | 169 |
| 6.2.1.2.5 | குறிப்பு வினையடிகளுக்குப் பின்னர் | 169 |
| 6.2.1 2.6 | வினையாலணையும் பெயர் விகுதி -Ø-வுக்குப் பின்னர் | 169 |
| 6.2.2 | -து | 171 |
| 6.2.2 1 | உரையாசிரியர்கள் | 172 |
| 6.2.2.2 | சூழல்கள் | 172 |
| 6 2.2.2.1 | -ஆ- எதிர்மறைக்குப் பின்னர் | 172 |
| 6.2.2 2.2 | குறிப்பு வினையடிகளுக்குப் பின்னர் | 173 |
| 6.2.2.2.3 | வினையாலணையும் பெயர் விகுதி -Ø-க்குப் பின்னர் | 173 |
| 6.2.3 | -Ø | 174 |
| 6 2.3.1 | சூழல் | 172 |
| 6.2 3.1.1 | -உம் -இறப்பில்கால இடைநிலைக்குப் பின்னர் | 175 |
| 6.2.4 | -று | 177 |
| 6.2.4.1 | உரையாசிரியர்கள் | 178 |
| 6.2.4.2 | சூழல்கள் | 179 |
| 6.2.4.2.1 | -அன்- சாரியைக்குப் பின்னர் | 179 |
| 6.2.4.2.2 | -இன்- இறந்தகால இடைநிலைக்குப் பின்னர் | 180 |
| 6.2.4.2.3 | குறிப்பு வினையடிகளுக்குப் பின்னர் | 180 |
| 6.2.4.2.4 | வினையாலணையும் பெயர் விகுதி -Ø- க்குப் பின்னர் | 180 |
| 6.2.5 | -த்து | 181 |
| 6.2.5 1 | உரையாசிரியர்கள் | 181 |
| 6.2.5.2 | சூழல்கள் | 182 |
| 6.2 5.2.1 | -இன்- இறந்தகால இடைநிலைக்குப் பின்னர் | 182 |
| 6.2.5.2 2 | -அன்- சாரியைக்குப் பின்னர் | 183 |
| 6.2.5.2.3 | குறிப்பு வினையடிகளுக்குப் பின்னர் | 183 |
| 6.2.5.2.4 | குறிப்பு வினையாலணையும் பெயர் விகுதி -Ø-க்குப் பின்னர் | 184 |
| 6.2.6 | -உ | 184 |
| 6 2.6.1 | சூழல் | 184 |
| 6.2.6.1.1 | இறந்தகால இடைநிலைகளுக்குப் பின்னர் | 184 |
| 6.2.7 | -டு | 185 |

| | | |
|---|---|---|
| 6.2.7.1 | உண்டு என்னும் வினைமுற்று | 185 |
| 6.2.7.2 | உரையாசிரியர்கள் | 186 |
| 6.2.7.3 | சூழல் | 187 |
| 6.2.7.3.1 | குறிப்பு வினையடிகளுக்குப் பின்னர் | 187 |
| 6.3 | பட்டியல்கள் | 188-192 |
| 7. | பலவின்பால் | 193—231 |
| 7.1 | பலவின்பால் வினைமுற்றுக்கள் | 193 |
| 7.1.1. | பலவின்பால் பெயர்களும் பதிலிடு பெயர்களும் | 193 |
| 7.1.1.1 | பெயர்கள் | 193 |
| 7.1.1.2 | பதிலிடு பெயர்கள் | 197 |
| 7.1.2 | பலவின்பால் விகுதிகளும் தொல்காப்பியமும் | 199 |
| 7.1 3 | தொல்காப்பியப் பயிற்சி | 200 |
| 7.1.4 | பெரும்பான்மை விகுதி | 201 |
| 7.2 | விகுதிகள் | 202 |
| 7.2.1 | –அ | 202 |
| 7.2.1.1 | தொல்காப்பியமும் அகர வகரமும் | 202 |
| 7.2.1.2 | உரையாசிரியர்கள் | 208 |
| 7.2.1.3 | சூழல்கள் | 211 |
| 7.2.1 3.1 | -அன்- சாரியைக்குப் பின்னர் | 211 |
| 7.2.1 3.2 | -இன்- இறந்தகால இடைநிலைக்குப் பின்னர் | 213 |
| 7.2.1.3.3 | -வ்- இறப்பில்கால இடைநிலைக்குப் பின்னர் | 213 |
| 7.2.1.3.4 | -ப் (ப்)- இறப்பில்கால இடைநிலைக்குப் பின்னர் | 214 |
| 7.2.1.3.5 | -அல்- எதிர்மறைக்குப் பின்னர் | 216 |
| 7 2.1.3.6 | குறிப்பு வினையடிகளுக்குப் பின்னர் | 216 |
| 7.2.1.3.7 | வினையாலணையும் பெயர் விகுதி -Ø-க்குப் பின்னர் | 217 |
| 7 2.2 | -Ø | 219 |
| 7.2.2.1 | உரையாசிரியர்கள் | 221 |
| 7.2.2.2 | சூழல்கள் | 222 |
| 7.2.2.1 | -ஆ- எதிர்மறைக்குப் பின்னர் | 222 |

| | | |
|---|---|---|
| 7.2.2.2.2 | வினையாலணையும் பெயர் விகுதி -Ø-க்குப் பின்னர் | 222 |
| 7.2.1.2 3 | இறப்பில்கால இடைநிலை -உம்-முக்குப் பின்னர் | 223 |
| 7.2.3 | -ஐ | 223 |
| 7.2.3.1 | தொல்காப்பியமும் ஐகாரமும் | 223 |
| 7.2.3.2 | சூழல் | 224 |
| 7.2.3.2.1 | வினையாலணையும் பெயர் விகுதி -அவ்- வுக்குப் பின்னர் | 224 |
| 7.3 | பட்டியல்கள் | 226-231 |
| | பயன்படுத்திய இலக்கிய இலக்கண நூல்கள் | 232 |
| | உதவிய நூல்களும் கட்டுரைகளும் | 235 |
| | பொருளடைவு | 241 |

# 1

# இடம், திணை எண், பால் பகுப்பு

## 1.1 சொல் வகைப்பாடு

மொழிகளில் காணப்படும் சொற்களைப் பலவேறு அடிப்படையில் பலவேறு வகைகளாக வகைப்படுத்துவர். சொற்கள் காட்டும் பொருள், அவற்றின் அமைப்பு, அவை வாக்கியங்களில் வரும் பண்பு போன்ற பல அடிப்படைகளில் அவற்றை வகைப்படுத்தலாம். முன்னதைப் பொருள் அடிப்படை என்றும், பின்னதை அமைப்பு அடிப்படை என்றும் இரண்டு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். அமைப்பு அடிப்படையையும் சொல்லியல் அடிப்படை என்றும், தொடரியல் அடிப்படை என்றும் பிரித்து நிற்பர் இலக்கண அறிஞர்கள். சொல் என இங்குக் குறிப்பிடுவது தானே தனித்தியங்கும் சொற்களையே ஆகும். கண்ணன், நான், வந்தான், வர, வந்து, பின்னர் போன்றவையே இங்கு சொற்கள் எனக் கருதப்படுகின்றன. இவற்றை அடிப்படை அலகுகளாக வைத்துப் பிரிக்கப்படுவதுதான் சொல் வகைப்பாடு (parts of speech).

தமிழ் இலக்கண அறிஞர்கள் சொற்களைப் பெயர், வினை, இடை, உரி என நான்கு வகைகளாகப் பிரிப்பர். இவற்றுள் உரிச்சொல் என்ற வகை உண்மையிலேயே அவசியமா என்பது ஆராய்தற்குரியது. இத்தகைய பிரிப்பினைத் தமிழ்ச் சொல் வகைப்பாடு எனலாம். தமிழ் மொழியில் காணப்படும் இச்சொல் வகைப்பாடு பற்றி இங்கு விளக்கமாக ஆராயப்படுவதில்லை. ஆசிரியர் (அகத்தியலிங்கம், 1979) எழுதிய பெயரியல் என்னும் நூலில் இதன் விளக்கங்களைக் காணலாம்.

## 1.2 இலக்கணக் கூறுகள்

மொழிகளில் காணப்படும் பெயர்ச்சொற்கள் போன்றவை

மனிதன் அல்லது இடம் அல்லது பலவேறு பொருள்கள் பற்றிச் சுட்டி நிற்பதுடன் இன்னும் வேறு சிலவற்றையும் காட்டுவதுண்டு. பெயர்ச்சொற்கள் பொதுவாக மொழியில் வரும்போது ஒருமை, பன்மை வேற்றுமையையும் காட்டி நிற்கும். இவ்வாறே வேறுபல இலக்கணப் பண்புகளையும் சுட்டும். இது போன்றே வினைச் சொற்களும் ஒரு செயலைக் காட்டி நிற்பதுடன் ஒருமை, பன்மை, காலம் போன்ற வேறுபல இலக்கணப் பண்புகளையும் காட்டும். இது போன்று பலவேறு சொற்களில் காணப்படும் இத்தகைய இலக்கணக் கூறுபாடுகளையே இலக்கணக்கூறுகள் எனக் குறிப்பிடுவர் இலக்கண அறிஞர்கள். இவற்றை ஆங்கிலத்தில் "grammatical categories" என அழைப்பர். இத்தகைய இலக்கணக்கூறுகள் மொழிகளின் அமைப்புக்கேற்ப மாறுபடும் தன்மையன. தமிழ் மொழியில் காணப்படும் இடம், திணை, எண், பால் பகுப்பும் தமிழ் மொழியின் அமைப்புக்கேற்ப அமைந்துள்ள ஒரு பகுப்பே ஆகும்.

## 1.3 தமிழில் பலவேறு பாகுபாடுகளும் பதிலிடு பெயர்களும்

இத்தகைய பாகுபாட்டிற்குக் காரணம் தமிழில் காணப்படும் பதிலிடு பெயர்களே. பொதுவாக எந்த மொழியிலும் பதிலிடு பெயர்கள் மிக முக்கியமான இடத்தைப் பெறுவன ஆகும். ஒரு மொழியில் காணப்படும் ஒருசில இலக்கணக் கூறுகளுக்கு இவை அடிப்படையாக அமைகின்றன. இந்நிலையில் தமிழ் மொழியில் காணப்படும் பதிலிடு பெயர்களும் விதிவிலக்கல்ல. இடம், திணை, எண், பால் என்று தமிழ் இலக்கண அறிஞர்கள் குறிப்பிடும் இலக்கணக் கூறுகளுக்கு அடிப்படையாக அமைவன தமிழ் மொழியில் காணப்படும் பதிலிடு பெயர்களே.

தமிழ் மொழியில் தன்மை, முன்னிலை, படர்க்கை என மூன்றிடங்கள் உள்ளன என்பதை நாம் நன்கு அறிவோம். இதனைத் தான் தொல்காப்பியர்

"தன்மை முன்னிலை படர்க்கை யென்னும்
அம்மூவிடத்தும் உரிய என்ப" (511)

எனக் கூறிப்போந்தார்.

இப்பகுப்புக்குக் காரணம் தமிழ் மொழியில் காணப்படும் மூன்றிடப்பதிலிடு பெயர்களாகும்.

| | | |
|---|---|---|
| யான் | யாம் | நாம் |
| நீ | நீர் | நீயிர் |
| அவன் | அவள் | அவர் |
| அது | அவை | |

போன்ற பதிலிடு பெயர்கள் தமிழில் இல்லையாயின் தமிழ்ப் பெயர் களையோ அல்லது விகுதிகளையோ தன்மை, முன்னிலை, படர்க்கை எனப் பிரித்திருக்க மாட்டார்கள்.

இப்பகுப்பு மிக முக்கியமானதாகும். பேசுவோன், கேட்போன், பிற என்ற நிலையில் இவை இவ்வாறு பிரிவுபட்டிருக்கின்றன. இவற்றைப் பிரதிபலித்தே மூவிடப் பதிலிடு பெயர்கள் அமைந்து கிடக்கின்றன.

### 1 3 1 தன்மைப் பதிலிடு பெயர்கள்

பேசுபவன் தன்னைப் பற்றிக் குறிப்பிடும் பதிலிடு பெயரே தன்மைப் பதிலிடு பெயர். இதனை ஆங்கிலத்தில் "first person" என அழைப்பர் என்பதும், தெய்வச்சிலையார் "தன்வினையைத் தானே உரைப்பது" எனக் கூறிப்போந்தார் என்பதும் முன்னரே (அகத்தியலிங்கம், 1983b) குறிப்பிடப்பட்டது.

யான் வந்தேன்    யாம் வந்தோம்    நாம் வந்தோம்

போன்றவை இதற்கு எடுத்துக்காட்டுக்களாக அமையும்.

### 1 3 2 முன்னிலைப் பதிலிடு பெயர்கள்

யாரிடம் பேசுகிறோமோ அவனைக் குறிப்பது முன்னிலை.' முன் + நிலை = முன்னிலை. இதனை ஆங்கிலத்தில் "second person" என்பர்.

நீ வந்தனை    நீர் வந்தீர்    நீயிர் வந்தனிர்

போன்றவை இதற்கு எடுத்துக் காட்டுக்களாகும்.

### 1.3.3 படர்க்கை

தன்மையும், முன்னிலையும் அல்லாதன படர்க்கை எனப்படும். தன்மையும் முன்னிலையும் போலன்றிப் படர்ந்து மிகப் பெருவாரி யானவற்றை உள்ளடக்கி நிற்றலின் இது இப்பெயர்த்தோ என எண்ணலாம்.

### 1.3.3.1 சுட்டுப் பதிலிடு பெயர்

பண்டைத் தமிழில் படர்க்கையில் இருவிதமான பதிலிடு பெயர்களைக் காணலாம். சுட்டுப் பெயர்களாக உள்ள அவன், அவள், அவர், அது, அவை போன்றவை ஒருவகை. சுட்டுப் பெயரல்லாத தான், தாம் ஆகியவை மற்றொரு வகை.

அவன் வந்தனன்   அவள் வந்தனள்   அவர் வந்தனர்

போன்றவை சுட்டுப் பதிலிடுபெயருக்கான எடுத்துக்காட்டுக்களாகும்.

### 1 3.3.2 சுட்டல்லாப் பதிலிடு பெயர்

பண்டைத்தமிழில் தான், தாம் ஆகிய பதிலிடு பெயர்களே படர்க்கைப் பதிலிடு பெயர்களாக இருந்தன எனச் சிலர் கருதுவர். ஆனால் தொல்திராவிடமொழியிலேயே சுட்டுப் பெயர்கள் படர்க்கைப் பதிலிடு பெயர்களாகப் பயன்பட்டன (Subrahmanyam, 1965) என்பது இங்கு நினைவுகூரத்தக்கது.

மேலும், பண்டைத்தமிழில் காணப்படும் படர்க்கை விகுதிகள் சுட்டுப் பெயர்களின் அடிப்படையில் உண்டானவை என்பதும், வெறும் எண் வேற்றுமை காட்டும் தான், தாம் ஆகிய பதிலிடு பெயர்களே – அன், – அள், – அர் போன்ற பலவேறு பால் விகுதிகளை எடுத்து வருவதும் உணரற்பாலன (காண்க 2.1.1.2). எனவே சுட்டுப் பெயர்கள் மிகப்பெரும் பழங்காலத்திலேயே (விகுதிகள் வினையில்வருவதற்கு முன்பே) படர்க்கை இடத்தில் வந்திருக்கலாம் என எண்ணலாம்.

தான், தாம் ஆகியவை எந்த விதமான பால் வேறுபாட்டையும் காட்டுவதில்லை. ஒருமை, பன்மை, எண் வேறுபாட்டை மட்டும் காட்டும். இப் பண்பில் இவை தன்மை, முன்னிலைப் பதிலிடு பெயர்களைப் போலவே உள்ளன. இதனால் மிகப் பழங்காலத்தில் பதிலிடு பெயர்கள் அனைத்தும் எண் வேற்றுமை காட்டி நின்றன எனக் கருத இடம் உள்ளது.

### 1. 3. 4 தன்மையின் முக்கியத்துவம்

தன்மையை ஆங்கிலத்தில் "first person" என அழைப்பர் என்பது முன்னரே குறிப்பிடப்பட்டது. பேசுவோன் இல்லையாயின் பேச்சு இல்லை. இதனால்தான் இது மிக முக்கியமாகக் கருதப் படுகின்றது. தமிழ் மொழியின் அமைப்பு அடிப்படையிலும் இது

முன்னிற்பதைக் காணலாம். தன்மையுடன் வேறு பதிலிடுபெயர்கள் வந்தாலும் தன்மையோடு அடங்கிவிடுதலைக் காண்கிறோம்.

| | |
|---|---|
| நான் வந்தேன் | நானும் நீயும் வந்தோம் |
| நானும் அவனும் வந்தோம் | நானும் நீயும் அவனும் வந்தோம் |

என்பவை தன்மைப் பன்மை விகுதியையே கொண்டு நிற்றல் காண்கிறோம். தன்மை மட்டுமன்றித் தன்மையும் முன்னிலையும், தன்மையும் படர்க்கையும், தன்மையும் முன்னிலையும் படர்க்கையும் வரினும் தன்மை விகுதியே வருதல் காணத்தக்கது. இதுபோன்றே,

யாம் நாம் யாங்கள்

ஆகிய பதிலிடு பெயர்களும் தன்மையை மட்டுமின்றித் தன்மை, முன்னிலை, படர்க்கை ஆகியவற்றை உள்ளடக்கி நிற்கின்றன. இந்நிலை பிற பதிலிடு பெயர்களுக்கு இல்லை.

### 1. 3. 5 முன்னிலையின் இடம்

முன்னிலையை ஆங்கிலத்தில் ''second person'' என்று அழைப்பர் என முன்னர்க் குறிப்பிட்டோம். தன்மைக்கு அடுத்து இதுவே முக்கியத்துவம் வாய்ந்தது. தமிழ் மொழியின் அமைப்பிலும் இதனைக் காணலாம்.

| | |
|---|---|
| நீயும் அவனும் வந்தீர்கள் | நீங்கள் வந்தீர்கள் |
| நீயிர் வந்தனிர் | |

போன்ற வற்றில் முன்னிலை, படர்க்கையை உள்ளடக்கி முன்னிலைப் பன்மை விகுதியில் வருதல் காண்கிறோம். இதே நிலையைத்தான் முன்னிலைப் பதிலிடு பெயர்களிலும் காண்கிறோம்.

நீயிர் நீர்

ஆகிய சொற்கள் முன்னிலையை மட்டுமன்றி முன்னிலையையும் படர்க்கையையும் அடக்கி நிற்கும். இந்த நிலைமை படர்க்கைப் பதிலிடு பெயர்களுக்கு இல்லை. அவர் என்பது நிச்சயமாக முன்னிலையையோ அல்லது தன்மையையோ அடக்காது. படர்ந்து நிற்கும் தன்மையது ஆயினும் இது தன்மையிலும் முன்னிலையிலும் அடங்கி நிற்பது. உணரத்தக்கது. மேலும் தன்மை, முன்னிலை படர்க்கை என இலக்கணிகள் வரிசைப்படுத்துவதும் உணரத்தக்கது.

இடம், திணை, எண், பால் என்ற பாகுபாட்டில் இடப்பாகுபாடே முதலில் வருவது. இந்நிலையில் இது மிக முக்கியமானது. எனினும் தொல்காப்பியம் சிறக்கப் பேசவில்லை என்று குறிப்பிடுவார். சண்முகம் (1982 :72). பெயர்களையோ அல்லது வினைகளையோ பாகுபாடு செய்யும்போது இடத்தின் பங்கு சரிவரப் பேசப்படவில்லை என்பதும் அவர்வாதம். மூன்றிடம் என்பது எல்லா மொழிகளிலும் காணப்படுவது. ஆனால் திணைப்பாகுபாடு தமிழ்மொழியில் சிறப்பாக உள்ள நிலையில்தான் தொல்காப்பியரும் அவ்வாறு செய்துள்ளாரோ என எண்ணலாம்.

## 1.4 திணை

### 1.4.1 திணை என்ற சொல்

திணை என்ற சொல் இலக்கண உலகில் பகுப்பு (class) எனப் பொருள்படும். திணை என்ற சொல் தமிழிலக்கியங்களிலும் பயன்படுகின்ற ஒரு சொல்லாகும். குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என ஐந்திணைகள் உள்ளமை கண்கூடு. இங்கு இது ஒழுக்கம் எனப் பொருள் படும்.

ஆனால் இலக்கணத்தில் திணை என்ற சொல் பகுப்பு என்ற பொருளில் பயன்படுவதும் இதனைச் சிலர் 'caste' (High caste, Low caste) என்றும், இன்னும் சிலர் (Ilakkuvanar 1963) 'class' (High class, Non-class) என்றும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளனர். இன்னும் சிலரோ மொழி பெயர்க்காமல் அப்படியே தமிழ்ச்சொல்லை உயர்திணை, அஃறிணை என்றும் (Subrahmanya Sastri, 1945) பயன்படுத்தியிருத்தலையும் காண்கிறோம். எவ்வாறாயினும் உயர்திணை என்ற இலக்கணக்குறி மக்களைக் குறிப்பது என்பது இங்கு நினைவு கூரத்தக்கது. தொல்காப்பியம் உயர்திணையையும் அஃறிணையையும்

> "உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே
> அஃறிணை யென்மனார் அவரல பிறவே"

என்று கூறுவதும் குறிப்பிடத்தக்கது.

### 1. 4. 2 திணைப்பாகுபாடு

பெயர்ச் சொற்களை உயர்திணை என்றும், அஃறிணை என்றும் இரண்டு பிரிவாகப் பிரிப்பர் இலக்கண நூலோர் மீண்டும்

இவற்றை ஆண்பால், பெண்பால், பலர்பால் என்றும், ஒன்றன் பால், பலவின்பால் என்றும் பிரித்து நிற்பர்.

### 1.4.2.1 அமைப்பு

உயர்திணை, அஃறிணை என்ற பால் பிரிப்புக்குக் காரணம் என்ன? என நுணுகி ஆராயின் இதற்குரிய காரணம் நன்கு விளங்கும். உலக மொழிகள் அனைத்திலும் மக்கள், பிற என்ற பாகுபாடு இருப்பது உண்மை. ஆனால் எல்லா மொழிகளின் இலக்கண அறிஞர்களும் இவ்வாறு பிரிப்பதில்லை. தமிழ் இலக்கண அறிஞர்கள் இவ்வாறு பிரித்துள்ளமைக்குக் காரணம் தமிழ் மொழியின் அமைப்பேயாகும். இவ்வாறு அமைப்புக்களைக் கருதாது பொருளை மட்டும் கருதிப் பகுப்பின் உலக மொழிகள் அனைத்துக்கும் ஒரே விதமான இலக்கணக் கூறுகளே இருக்க முடியும்.

தமிழ் மொழியில் உயர்திணைச் சொற்களின் பன்மையைக் குறிக்க அவர், இவர் போன்ற சொற்களும், அஃறிணையைக் குறிக்க அவை என்ற சொல்லும் இருப்பது இத்தகைய உயர்திணை, அஃறிணைப் பகுப்புக்கு ஒரு காரணம்.

இதுபோன்றே உயர்திணைச் சொற்கள் யார் என்ற வினாவை எடுத்துவருகின்றன. இதுவும் இப்பாகுபாட்டுக்குக் காரணமாக வருகின்றது (P. Kothandaraman, 1981).

அவன் யார் ? அவள் யார்? அவர் யார்?

என்பன இப்பண்பைக் காட்டும். இந்நிலையில்தான் உயர்திணை, அஃறிணை என்ற பகுப்பு தமிழ் மொழியில் ஏற்பட்டது எனக் கருதலாம். இவற்றின் பிரதிபலிப்பினையும் வினைமுற்று விகுதிகளிலும் வினையாலணையும் பெயர்களிலும் காண்கிறோம். எனவே தமிழ் மொழியைப் பொறுத்த மட்டில் இத்தகைய திணைப் பகுப்புக்குக் காரணம் அதன்கண் காணப்படும் பதிலிடு பெயர்களே என்பதும், அவற்றைப் பிரதிபலித்து நிற்கும் விகுதிகளுமே என்பதும் உணரற்பாலன. அதனால்தான் தொல்காப்பியர் கிளவியாக்கத்தில் உயர்திணை, அஃறிணை எனப் பிரித்துப் பின்னர் பால் பகுப்பையும் பிரித்த உடன் விகுதிகள் பற்றிப் பேசத் தொடங்கினார் என எண்ணலாம்.

பொருள் அடிப்படையாயின் அஃறிண்ணயில் ஆண், பெண் (சேவல், பெடை, பிடி, களிறு) உயிருள்ளவை, பிற போன்ற எத்த

னையோவேறுபாடுகள் இருந்தும் ஒன்றன்பால் எனப் பிரித்ததற்குக் காரணம் கூறமுடியாமல் போகும். அமைப்பு அடிப்படை என் பதைத் தெளிவாக

"ஆண், பெண், அலி; ஆண் பன்மை, பெண் பன்மை, அலிப் பன்மை, இவரெல்லாம் தொக்க பன்மையெனப் பலவகைப்படுமா லெனின் பொருள் நோக்கிக் கூறினாரல்லர்: சொல் முடிபு மூவகையென்று கூறினாரென்க'' எனத் தெய்வச்சிலையார் (சூத் 2) கூறுவது காண்க. இங்குத் தெய்வச்சிலையார் விகுதியினால் தான் என்பதையே 'சொல் முடிபு' என்கிறார். ஆனால் இம்முடிபுக்கும் காரணம் பதிலிடுபெயரே என்பதை நாம் நினைவு கூர்ந்தாக வேண்டும்.

உயர்திணை என்ற குறியீடு மக்களை உயர்வாகக் கருதின மையால் ஏற்பட்டது என எண்ணலாம். உயர்திணை என்ற தொடரில் காணப்படும் உயர் என்பது பெயரடையாக உள்ளது. இதனைப் பலவேறு உரையாசிரியர்களும் குறித்துச் சென்றுள் ளனர்.

## 1.5 எண்

### 1.5.1 அடிப்படை

உலக மொழிகள் அனைத்திலும் காணப்படும் பகுப்பில் எண் பகுப்பும் ஒன்று. எண்ணப்படும் பொருட்களைக்குறிக்கும் சொற்களை அடிப்படையாக வைத்து எழுந்ததே எண் பகுப்பு. எண்ணப்படும் பொருள்களில்தான் எண் பகுப்பு காணப்படும். தண்ணீர், மாவு போன்றவற்றைச் சுட்டுவதில் எண் பாகுபாட்டைக் காண முடிவ தில்லை.

எண் பகுப்பினைத் தமிழ் மொழியிலும் காண்கிறோம். ஒன்று, இரண்டு, மூன்று என்று பலவாறாக எண்ண முடியினும் இவற் றைக் குறிக்கும் பதிலிடு பெயர்களாக உள்ளவை ஒருமை, பன்மை என்ற பகுப்பையே உணர்த்திநிற்கும். அவன் என்பது ஒரு ஆணை யும், அவர் என்பது ஒன்றுக்கு மேற்பட்ட மனிதர்களையும் காட்டி நிற்கும் நிலையில்தான் ஒருமை, பன்மை என்ற எண் பகுப்பைக் காண்கிறோம். இதே நிலையில்தான் ஒருமை, பன்மையை அஃறி ணையிலும் காண்கிறோம். அது என்பது ஒன்றையும், அவை என் பது ஒன்றுக்கு மேற்பட்டவற்றையும் காட்டும்.

நான் மன்னன் ஒருவனைக் கண்டேன். அவன் நல்லவன்.

நான் அரசி ஒருத்தியைக் கண்டேன். அவள் நல்லவள்.

நான் அரசர் பலரைக் கண்டேன். அவர்கள் நல்லவர்கள்.

நான் எருது ஒன்றைக் கண்டேன். அது நல்லது.

நான் எருது பலவற்றைக் கண்டேன். அவை நல்லவை.

போன்ற வாக்கியங்கள் இப்பண்பைக்காட்டும். ஒன்றைக் குறிப்பது ஒருமை ஒன்றுக்கு மேற்பட்ட எதையும் குறிப்பது பன்மை.

பெயர்ச் சொற்களில் காணப்படும் பன்மை விகுதிகள் ஒன்றுக்கு மேற்பட்ட எல்லாவற்றையும் காட்டுகின்றன. இரண்டாயினும் அல்லது மூன்ருயினும் அல்லது பலவாயினும் ஒரே விகுதியைக் கொண்டே நிற்கும்.

இரண்டு வீடுகள் மூன்று வீடுகள்
ஆயிரம் வீடுகள் கோடி வீடுகள்

போன்றவற்றில் வரும்-கள் விகுதி இப்பண்பைக் காட்டி நிற்கும். இதனுல்தான் இரண்டோ அல்லது இரண்டிற்கு மேற்பட்டோ உள்ளவை அனைத்தும் பன்மை எனப்படுகின்றன.

இதே நிலையைத்தான் வினையில் காணப்படும் விகுதிகளிலும் காண்கிருேம்.

அவர்கள் வந்தார்கள் அவை வந்தன
இரண்டு வீடுகள் நல்லவை
ஆயிரம் வீடுகளும் நல்லவை

போன்றவை இப்பண்பைக் காட்டும். இந்நிலை எண் பகுப்பும் தமிழ் மொழியின் அமைப்பை ஒட்டியே அமைந்துள்ளது என்பதைத் தெளிவாகக் காட்டும். சில மொழிகளில் ஒருமை, இருமை, பன்மை. பகுப்பு காணப்படுவதற்குக் காரணமும் அம்மொழிகளின் அமைப்பே

### 1.5.2 இடமும் எண்ணும்

தமிழ் மொழியில் காணப்படும் எண் பகுப்பு எல்லாவிதச் சொற்களிலும் காணப்படுகின்றது. தன்மை, முன்னிலை, படர்க்கை ஆகிய மூன்றிடச் சொற்களும் எண் பகுப்பைக் காட்டும்.

யான், யாம், நீ, நீயிர்
அவன், அவள், அவர், அது, அவை

ஆகிய பதிலிடு பெயர்கள் இப்பண்பைக் காட்டும்.

### 1.5.3 எண்ணும் பாலும்

தன்மை, முன்னிலைப் பதிலிடு பெயர்கள் பால் பகுப்பினைக் காட்டுவதில்லை. நான், யான் என்ற பதிலிடுபெயர்களில் ஒருமை தெரிகின்றதேயன்றிப் பால் தெரிவதில்லை. இதுபோன்றே யாம், நாம் ஆகிய பதிலிடு பெயர்களும் உள்ளன. இவ்வாறேமுன்னிலைப் பதிலிடு பெயர்களும் உள்ளன.

இவற்றைப் பிரதிபலித்து நிற்கும் வினை விகுதிகளும் எண் காட்டுமேயன்றிப் பால் காட்டுவதில்லை,

| | |
|---|---|
| யான் வந்தேன் | யாம் வந்தேம் |
| நீ வந்தனை | நீயிர் வந்தனிர் |

என்பவற்றில் வந்தது ஆணா அல்லது பெண்ணா என்பது தெரிவதில்லை. ஆனால் படர்க்கையில் வரும் பெயர்களோ பால் காட்டி நிற்கும்.

அறிஞன் என்பது ஒருமையுடன் ஆண்பாலையும் காட்டி நிற்கும். இதில் காணப்படும்-அன் என்ற ஒட்டு இரண்டையும் காட்டும். ஆண்பால் என்பதே ஆண் என்ற பாலையும், ஒன்று என்ற எண்ணையும் காட்டுவதாகவே கொள்ளவேண்டும். ஆண்பால் காட்டும்-அன் விகுதி ஒருமையையும், ஆண்பாலையும் ஒருங்கே காட்டும்.

## 1.6 பால்

### 1.6.1 பால் என்ற சொல்

பால் என்ற சொல் தமிழில் பிரிவு, (Kothandaraman, 1980) எனப் பொருள்படும். இதனை ஆங்கிலத்தில் பொதுவாக "Gender" என அழைப்பர். எனினும் பலர்பால் என்பது "Epicene plural" என அழைக்கப்படுவது குறிப்பிடத்தக்கது.

### 1.6.2 இயற்கைப் பால்பகுப்பும் இலக்கணப் பால்பகுப்பும்

உலக மொழிகள் பலவற்றிலும் பால்பகுப்பு உள்ளது. உலக மொழிகள் அனைத்திலும் காணப்படும் பால்பகுப்பினை எடுத்து நோக்கின் பால்பகுப்பை இயற்கைப் பால்பகுப்பு (natural gender) இலக்கணப் பால்பகுப்பு (grammatical gender) என இரு வகையாகப் பிரிக்கலாம் என்பது தெளிவுபடும். இயற்கைப் பால்பகுப்பு என்பது உலகில் காணப்படும் மனிதர்களையும் விலங்கு, இடம்,

மரம், ஆறு போன்ற பிறவற்றினையும் அடிப்படையாகக் கொண்டது ஆகும். ஆனால் இலக்கணப் பால்பகுப்போ ஒவ்வொரு மொழிக்கும் சிறப்பானது. வானில் காணப்படும் நட்சத்திரம் எல்லா மொழியினருக்கும் பொதுவான உயிரற்ற ஒரு பொருள். ஆனால் லத்தின் மொழி இலக்கணங்களுக்கு இது பெண்பால், நமக்கு அஃறிணை ஒன்றன்பால். லத்தின் மொழியில் பெண்பால் பதிலிடு பெயரை ஏற்று வரும். தமிழ் மொழியில் ஒன்றன்பால் பதிலிடு பெயரை ஏற்கும். இதுபற்றிய விளக்கத்திற்கு ஆசிரியரின் 'பெயரியல்' (அகத்தியலிங்கம், 1979, பக் 166-167) என்ற நூலைக் காண்க.

### 1.6.3 உயர்திணைப் பால் பகுப்பு: அடிப்படைக் காரணம்

இலக்கணப் பால் பகுப்புக்கு நிச்சயமாக மொழியின் அமைப்பே காரணமாகும். இதற்குத் தமிழ் மொழியும் விதிவிலக்கன்று. தமிழில் உயர்திணையை ஆண்பால், பெண்பால், பலர்பால் எனப் பிரிப்பதற்குக் காரணமே தமிழ் மொழியின் அமைப்பாகும்.

உயர்திணையை இவ்வாறு மூன்று பிரிவாகப் பிரிப்பதற்குக் காரணம் தமிழ் மொழியில் காணப்படும் பதிலிடு பெயர்களே ஆகும். அவன், அவள், அவர் என்ற மூன்று பதிலிடு பெயர்களை உயர் திணை கொண்டிருப்பதால்தான் இது மூன்று பால்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. உயர்திணையில் ஒருமையில் ஆண் பெண் வேறுபாடு உள்ளதேயன்றிப் பன்மையில் (அவர்) இவ்வேறுபாடு இல்லை. இதனால்தான் பலர்பால் எனப் பிரித்தனரேயன்றி ஆண் பால் பன்மை என்றோ அல்லது பெண்பால் பன்மை என்றோ பிரித்திலர். பலர்பாலில் ஆண்பால் பன்மையும் பெண்பால் பன்மையும் அடங்கிவிடக் காண்கிறோம்.

அரசியர் தேவியர்

போன்ற சொற்கள் பெண்பால் பன்மை காட்டுவனவே. எனினும் இலக்கணிகள் பெண்பால் பன்மை என்ற ஒரு இலக்கணக் கூறைக் கொண்டிலர். காரணம் இவையும் அவர், இவர் போன்ற பதிலிடு பெயர்களால் குறிப்பிடப்படுவனவையே.

அரசியர் வந்தனர். அவரைக் காணேன்.

என்றே குறிப்பிடுகிறோம்.

இதுபோன்றே ஆண்பால் பன்மை என்ற இலக்கணக் கூறும் இல்லை.

பாங்கர் வந்தனர். அவரைக் காணேன்.

எனப் பலர்பாலை "அவர்" என்பதை இட்டே குறிப்பிடுகிறோம். இந்நிலையில்தான் இலக்கணிகள் உயர்திணையில் பலர்பால் என வகுத்தனர்.

ஆனால் ஒருமையிலோ அவன், இவன் போன்ற பதிலிடு பெயர்களையும், அவள், இவள் போன்ற பதிலிடு பெயர்களையும் காண்கிறோம்.

சாத்தன் வந்தனன். அவனைக் காணேன்.
சாத்தி வந்தனள். அவளைக் காணேன்

எனக் குறிப்பிட முடியும். பன்மையைப் போலன்றி ஒருமையில் ஆண்பாலும், பெண்பாலும் தோன்ற அவன், அவள் எனக் கூற முடியும். ஆனால் பன்மையில் ஆண்பாலும் பெண்பாலும் தோன்றுமாறு உள்ள நிலையில் அவர் போன்ற பதிலிடு பெயர்கள் இல்லை. இதனால்தான் உயர்திணை ஒருமையில் ஆண்பால் பெண்பால் வேறுபாடும், பன்மையில் இவ்வேறுபாடு இல்லாமையும் உள்ள நிலையில் ஆண்பால், பெண்பால், பலர்பால் எனப் பிரித்து நின்றனர் தமிழ் இலக்கணிகள்.

இத்தகைய வேறுபாடுகள் தமிழ் வினைமுற்று, வினையாலணையும் பெயர்களிலும் பிரதிபலித்து நிற்கக் காண்கிறோம்.

| | |
|---|---|
| சாத்தன் வந்தனன் | சாத்தி வந்தனள் |
| ஆண்டு வந்தோன் சாத்தன் | ஆண்டு வந்தோள் சாத்தி |

எனக் கூறலாம். ஆனால்

| | |
|---|---|
| வந்தனர் | செய்தனர் |
| வந்தோர் | செய்தோர் |

போன்றவை ஆண் பெண் வேற்றுமையைக் காட்டுவதில்லை

### 1. 6. 4 அஃறிணைப் பால் பகுப்பு அடிப்படைக் காரணம்

உயர்திணைப் பால் பகுப்பினைப் போலவே அஃறிணைப் பால் பகுப்பும் அமைப்பு அடிப்படையிலேயே அமைந்துள்ளது. அஃறிணையில் ஒன்றன்பால் என்றும் பலவின்பால் என்றும் இரண்டுபிரிவுகளாகப் பகுப்பு உள்ளதே அன்றி ஆண், பெண் என்ற பகுப்போ (உயர்திணையில் உள்ளது போல்) உயிருள்ளவை,அல்லாதவை (வேறுமொழிகளில்

உள்ளது போல்) என்ற பகுப்போ காணப்படுவதில்லை. ஆண் யானைக்கும் (களிறு) பெண் யானைக்குமிடையே உள்ள வேற்றுமை பண்டைத் தமிழர்களுக்குத் தெரியாததன்று. இதுபோன்றே சேவலுக்கும் பெட்டைக்குமிடையே உள்ள வேறுபாடுகளையும் உணராதவர்களல்லர். இவற்றிக்கெனத் தனித்தனிச் சொற்களையே உருவாக்கியுள்ளனரே! இந்நிலையில் பொருளை அடிப்படையாகக் கொண்டு பால் பிரிவு ஏற்பட்டுள்ளது என்று எவ்வாறு கூற இயலும்? அமைப்பு அடிப்படையே என்பது வெள்ளிடைமலை.

இதுபோன்றே பதிலிடு பெயர்களை இட்டே அஃறிணைப் பெயர்களைக் கூறிவிட முடியும். உயிர் உள்ளனவாயினும், அல்லன வாயினும், ஆணாயினும் அல்லது பெண்ணாயினும் எதுவாயினும் இது போன்ற பதிலிடு பெயர்களே வரும்.

களிறு வந்தது. அதைக் காணேன்.

பிடி வந்தது. அதைக் காணேன்.

சேவல் வந்தது. அதைக் காணேன்.

புத்தகம் இருந்தது. அதைக் காணேன்.

போன்றவை இப்பண்பைக் காட்டும்

இதுபோன்றே அவை என்ற பதிலிடும் பெயரும் எந்த வேற்றுமையையும் காட்டுவதில்லை.

பிளிறு வந்தன. அவற்றைக் காணேன்.

களிறு வந்தன. அவற்றைக் காணேன்.

போன்றவற்றில் வரும் அவை ஆண், பெண் வேறுபாடு காட்டுவதில்லை பெயர்களில் உணரமுடியினும் பதிலிடு பெயர்களில் உணரமுடிவதில்லை. இந்நிலையில் தான் அஃறிணையில் அஃறிணை ஒருமை, அஃறிணைப் பன்மை எனக் கொண்டனர். இவையும் முன்னர்க் கூறியது போல் விகுதிகளிலும் வினையாலணையும் பெயர்களிலும் பிரதிபலித்து நிற்கின்றன.

அறிஞர்கள் பலர் (சுப்பிரமணிய சாஸ்திரி, 1930, 1934; இஸ்ரயேல், 1973) இத்தகைய பகுப்புகளுக்குக்காரணம் பொருள் அடிப்படையே என்பர். இவர்களின் கூற்றுக்களை எடுத்துக்காட்டி இவர்களின் கருத்து பொருந்தாது என சண்முகம் (1982) நன்கு

விளக்கியுள்ளார். இந்நிலையினை வேறு சில இடங்களிலும் (அகத்தியலிங்கம் & சுந்தரம், 1969, அகத்தியலிங்கம், 1979:172-173: Kothandaraman, 1980) காணலாம்.

### 1.6.5 உயர்வு ஒருமை

மேலே காட்டிய பாகுபாடுகள் மட்டுமன்றித் தமிழில் உயர்வு ஒருமை காட்டும் பண்பும் காணப்படுகின்றது என்பதை முன்னரே (அகத்தியலிங்கம், 1983b) கண்டோம். ஒருவரையே ஒருவர் அவன் என்றும், மற்றொருவர் அவர் என்றும் கூறுதல் உண்டு.

கண்ணன் வந்தான்
கண்ணன் வந்தார்
கண்ணன் அவர்கள் வந்தார்கள்

என்றெல்லாம் கூறுவதை நாம் அறிவோம். இந்நிலையில் உயர்வு ஒருமையும் இலக்கணக் கூறுகளில் ஒன்றாகக் கருதப்படவேண்டும். இதுவும் இடம், திணை, எண், பால் பகுப்புடன் தொடர்புடையது ஆகும்.

### 1.6.6 பண்டைத் தமிழில் பகுப்பு

மேலே கூறியவற்றையெல்லாம் வகுத்தும் தொகுத்தும் காணும் போது பண்டைத் தமிழில் காணப்படும் பகுப்பு நன்குத் தெரிய வரும். இதனைப் பின்வரும் (பக்கம் 15) வரைபடம் நன்குக் காட்டும்.

எனவே இதுகாறும் கூறியவற்றால் பொதுவாக இலக்கணக் கூறுகளின் பல்வேறு பிரிவுகளுக்குக் காரணமாக அமைவது மொழிகளின் அமைப்பே என்பதும் இதற்குத் தமிழ்மொழி விதி விலக்கன்று என்பதும் அதிலும் குறிப்பாக மேலே கூறப்பட்ட இடம், திணை, எண், பால் என்ற பகுப்பிற்குக் காரணம் தமிழ் மொழியின் அமைப்பே, பொருளன்று என்பதும் நன்கு விளங்கும்.

# 2

# ஆண்பால்

## 2.1 ஆண்பால் வினைமுற்றுக்கள்

ஆண்பால் பெயர்கள் எழுவாயாக வரும்போது அவற்றின் பயனிலையாக வரும் வினைமுற்றுக்கள் ஆண்பால் காட்டும் நிலையில் ஆண்பால் விகுதிகளைக் கொண்டு நிற்கும். எனவே பிற விகுதிகளைப் போன்று இவ்விகுதிகளும் ஆண்பால் பெயர்களின் மறுபதிப்பாகவே உள்ளமை காணலாம். எந்த ஒரு ஆண்பால் பெயரும் ஒரு வாக்கியத்தின் எழுவாயாக வரும்போது அதன் தாக்காக்கத்தை வினைமுற்றில் கொண்டு வருகிற நிலையில்தான் வினைமுற்றுக்களும் பலவேறு ஆண்பால் விகுதிகளைக் கொண்டு நிற்கின்றன. இதே நிலையைத்தான் வினையாலணையும் பெயர்களிலும் காண்கிறோம்.

### 2 1.1 ஆண்பால் பெயர்களும் பதிலிடு பெயர்களும்

தன்மை, முன்னிலையைப் போலன்றிப் படர்க்கையில் வரும் பெயர்களும் பதிலிடு பெயர்களும் எண் மட்டுமின்றித் திணை-பால் வேறுபாடுகளையும் காட்டி நிற்கும். இம் மூன்று இலக்கணக்கூறுகளையும் ஒரு விகுதியே நின்று காட்டவல்லன. -அன்போன்ற விகுதிகள் மட்டுமின்றி விகுதி எதுவும் வராத பெயர்களும் (உதியஞ் சேரல்) இவற்றைக் காட்டி நிற்கும்.

#### 2.1.1.1 பெயர்கள்

தமிழ்மொழியில் காணப்படும் பலவேறு இயற்பெயர்களும், பொதுப்பெயர்களும், முறைப் பெயர்களும் பால் காட்டுவனவே. பழந்தமிழ் இலக்கியங்களில் காணப்படும் எழினி, சேரல் போன்ற பெயர்களும், அதியமான், பெருவளத்தான், மகன் போன்ற பெயர்

களும் இவ்விலக்கணக் கூறுகளைக் காட்டி நிற்கும். இப்பெயர் களில் காணப்படும் இவ்விலக்கணக் கூறுகள் வினைமுற்றிலும், வினையாலணையும் பெயரிலும் பிரதிபலித்து நிற்கின்றன.

"கேளிலோர்க்குக் கேளாகுவன்
................ ......
வளநீர் வாட்டாற் றெழினி யாதன்" புறம் 396-11
"................. கானவன்
குறுகினன்...... .. ..........." அகம் 248-6
"..................யூர
னம்மறந் தமைகுவ னாயின் ஐங் 36-1

போன்றவை இவற்றைக் காட்டி நிற்கின்றன.

### 2.1.1.2 பதிலிடு பெயர்கள்

ஆண்பால் பெயர்களைப் போலவே பதிலிடுபெயர்களும் இடம் திணை, எண், பால் ஆகிய இலக்கணக் கூறுகளை ஒருங்கே காட்டி நிற்கின்றன. - அன் போன்ற விகுதிகள் பாலுடன் எண்ணையும் சுட்டி நிற்பன. பண்டைத் தமிழில் காணப்படும் அவன், இவன், உவன் என்ற மூன்று பதிலிடு பெயர்களும் இத்தன்மையனவே. இம்மூன்று பதிலிடு பெயர்களில் 'அவன்' எல்லா இலக்கியங்களி லும் வருவதும் 'இவன்' என்பது ஐங்குறுநூறு, பத்துப்பாட்டு ஆகியவற்றில் வராமலிருப்பதும் 'உவன்' என்பதோ நற்றிணை, பரிபாடல் ஆகியவற்றில் மட்டுமே ஒவ்வொரு இடத்தில் வருவதும் இங்குச் சுட்டிக்காட்டற்பாலன.

நற்றிணையில்

"உவன்வரின் எவனோ" (127-3)

எனவும், பரிபாடலில்

"பூணார நோக்கிப் புணர்முலைபார்த் தானுவன்" (12-55)

எனவும் வருதல் குறிப்பிடத்தக்கது. இப்பதிலிடு பெயர்கள் எழுவா யாக நிற்க அவற்றைப் பிரதிபலித்து ஆண்பால் விகுதிகள்வினையில் வருதல் காண்கிறோம்.

"தாவவும் வல்லனவன் றூவுங்காலே" புறம் 331-13

"..............பாசறை

வாரா னவனென......"  ஐங் 427-3

"...... ..... இவன்

உடன்று நோக்கினன்........"  புறம் 17-29

போன்றவை எடுத்துக்காட்டுக்களாகும்.

பெயர்களோ அல்லது பதிலிடுபெயர்களோ மறைந்து நிற்கும் நிலையிலும் வினைவிகுதிகள் வருதல் உண்டு.

"தண்கமழுஞ் சாந்துநீவினன்"  புறம் 239-3

"  ...நெடுந்தகை

குன்றம் பாடா னாயின்"  ஐங் 244-2

போன்றவை இப்பண்பைக் காட்டும்.

சுட்டுப் பதிலீடுபெயர்கள் மட்டுமன்றிச் சுட்டல்லாப் பதிலிடு பெயராகிய தான் என்பதும் ஆண்பால் விகுதிகளை ஏற்று வருதல் பழந்தமிழ் இலக்கியங்களில் காணக்கிடக்கும் ஒரு பண்பாகும்.

"தானு மலைந்தான்........"  ஐங் 201-2

"தானுஞ் சூடினன்........"  நற் 361-2

"..........தான் மகிழ்ந் துண்ணும்"  புறம் 235-3

## 2. 1. 2 ஆண்பால் விகுதிகளும் தொல்காப்பியமும்

ஆண்பால் ஒருமை விகுதி பற்றிப் பேச வந்த தொல்காப்பியர் கிளவியாக்கத்தில்

"னஃகான் ஒற்றே ஆடூஉ அறிசொல்"  (488)

என்றும், பின்னர் வினையியலில்

"அன் ஆன் அள் ஆள் என்னும் நான்கும்

ஒருவர் மருங்கில் படர்க்கைச் சொல்லே"  (690)

என்றும் கூறுவார். இந் நூற்பாவில் அன், ஆன் என்னும் இரண்டு விகுதிகளைப் பற்றிக் குறிப்பிடுவார். இதன்கண்-ஒன் பற்றி எதுவும் கூறாவிடினும்

"பால் அறி மரபின் அம்மூ ஈற்றும்

ஆ ஓ ஆகும் செய்யு ளுள்ளே"  (969)

என்னும் நூற்பாவில்-ஆ,-ஓ ஆகும் என்னும் விதியால்-ஒன் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார் தொல்காப்பியர் எனக் கருதுவர் உரை

யாசிரியர்கள். இதற்கு உரை கண்ட இளம்பூரணர் (208)

வினவி நிற்றந்தான் என்பது வினவிநிற்றந்தோன் என மாறி வந்தது எனக் கூறிச் செல்லுவார். இதே கருத்தினைத் தான் நச்சினார்க்கினியர் (213), சேனாவரையர் (211), தெய்வச் சிலையார் (205) ,கல்லாடனார் (214) ஆகிய உரையாசிரியர்களும் கொண்டுள்ளனர். அத்துடன் இளம்பூரணர் தந்த உதாரணத்தையே இவர்களும் தந்து நின்றனர். இந்நூற்பாக்களுடன்-∅(-உம்) விகுதி பற்றிக் கூறாவிடினும் பின்னர்

''பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை
அவ்வயின் மூன்றும் நிகழுங் காலத்துச்
செய்யும் என்னும் கிளவியொடு கொள்ளா'' (712)

எனக் கூறுவது காணத்தக்கது. இந்நிலையில்-உம் ஈற்று வினைகளும் ஆண்பால் ஒருமை காட்டி நிற்கும் என எண்ணலாம்.

### 2.1.3 தொல்காப்பியப் பயிற்சி

தொல்காப்பியத்தில்-அன், -ஆன், -ஒன் ஆகிய மூன்று உருபுகள் ஆண்பால் காட்டுவனவாக உள்ளன.

இவற்றுள் -அன்

1. வினையாலணையும்பெயர் விகுதி - அவ் - வுக்குப் பின்னரும்
2. குறிப்புவினை அடிகளுக்குப் பின்னரும்

வரும்.

வந்தவன் பொ 109-28 உரியன் பொ 170-6
இன்னன் பொ 145-35

-ஆன்

1. -∅- எதிர்மறைக்குப் பின்னரும்
2. குறிப்பு வினை அடிகளுக்குப் பின்னரும்

வரும்.

பெறான் பொ 53-5
இன்னான் சொல் 73-10

-ஓன்

1. வினையாலணையும்பெயர் விகுதி-∅-க்குப் பின்னர் வரும்.

வந்தோன் பொ. 110-2 குறித்தோன் சொல் 56-1
மிக்கோன் பொ 90-40

### 2.1.4 பெரும்பான்மை விகுதி

அன், ஆன், ஓன் ஆகிய விகுதிகளில் பண்டைத் தமிழில் அன் விகுதியே அதிகமாகப் பயின்று வரும் விகுதி. அன் விகுதி ஆயிரத்து நூற்று ஐம்பத்தொன்பது இடங்களிலும், ஆன் விகுதி அறுநூற்று ஐம்பத்திரண்டு இடங்களிலும், ஓன் விகுதி ஐநூற்றுப் பத்தொன்பது இடங்களிலும் வந்துள்ளது. பதிற்றுப்பத்தில்-அன் பன்னிரண்டு இடங்களிலும்,-ஆன் ஆறு இடங்களிலும்,-ஓன் ஐந்து இடங்களிலும் -∅, ஈற்றுச்சொல் ஒரு இடத்திலும் ஆண்பால் காட்டி நிற்கும்.

| | -அன் | -ஆன் | -ஓன் | -∅ |
|---|---|---|---|---|
| பதி | 12 | 6 | 5 | 1 |
| ஐங் | 110 | 13 | 13 | 19 |
| அகம் | 150 | 25 | 40 | 11 |
| நற் | 53 | 11 | 12 | 4 |
| குறு | 84 | 12 | 11 | 3 |
| புறம் | 179 | 52 | 102 | 35 |
| பத்து | 44 | 8 | 20 | 3 |
| பரி | 22 | 21 | 15 | 4 |
| கலி | 143 | 208 | 16 | 15 |
| குறள் | 71 | 178 | — | 3 |
| சிலம்பு | 185 | 86 | 146 | 12 |
| மணி | 106 | 32 | 139 | 20 |

பண்டைத்தமிழ் இலக்கியங்கள் அனைத்தையும் எடுத்து நோக்கின் ஆன் விகுதியை விட ஓன் விகுதி அதிகமாக வருதல் காணலாம். எடுத்துக்காட்டாகப் புறநானூற்றில் -ஆன் ஐம்பத்திரண்டு இடங்களில் வர -ஓன் விகுதியோ நூற்றிரண்டு இடங்களில் வந்துள்ளது. இதே நிலையைச் சிலம்பிலும் (86:146) மணிமேகலையிலும் (32:139) கூடக் காண்கிறோம்.

பழந்தமிழில் -அன் விகுதி அதிகமாக வரினும், இடைக்காலத் தமிழில் -ஆன் விகுதியே பெருவரவிற்றாகிப் பின்னர்த் தற்காலத் தமிழில் அதுவே நிலைபெற்ற நிலையைக் காண்கிறோம். இன்று ஆன் விகுதி ஒன்றே ஆண்பால் ஒருமை காட்டும் விகுதியாக முற்றுவினையைப் பொறுத்தமட்டில் உள்ளது என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

## 2.2 விகுதிகள்

### 2.2.1 –அன்

இவ்விகுதியே பழந்தமிழில் அதிகமாகப் பயின்று வருவது. கலித்தொகையிலும், திருக்குறளிலும் – ஆன் அதிகமாக வரினும் -அன் தான் பழந்தமிழில் அதிகமாக வரும் ஒட்டு.

#### 2.2.1.1 உரையாசிரியர்கள்

-அன் விகுதிக்கு உதாரணம் தரவந்த இளம்பூரணர் (சூத். 5, 202, 210)

| | | |
|---|---|---|
| உண்டனன் | உண்ணாநின்றனன் | உண்குவன் |
| உடையன் | நிலத்தன் | பொன்னன்னன் |
| கரியன் | செய்யன் | அல்லன் |
| இல்லன் | உளன் | வல்லன் |
| நல்லன் | தீயன் | |

போன்றவற்றையும், சேனாவரையர் (சூத். 5, 205, 213)

| | | |
|---|---|---|
| உண்டனன் | உண்ணாநின்றனன் | உண்பன் |
| கச்சினன் | கழலினன் | இல்லத்தன் |
| புறத்தன் | பொன்னன்னன் | புலிபோல்வன் |
| கரியன் | செய்யன் | ஐயாட்டையன் |
| துணங்கையன் | அல்லன் | இலன் |
| உளன் | வல்லன் | நல்லன் |
| தீயன் | உடையன் | |

போன்றவற்றையும், நச்சினார்க்கினியர் (சூத் 5, 207, 215)

| | | |
|---|---|---|
| உண்டனன் | உண்ணாநின்றனன் | உண்கின்றனன் |
| உண்டிலன் | உண்ணாநின்றிலன் | உண்கின்றிலன் |
| உண்பன் | உண்குவன் | உண்ணலன் |

| | | |
|---|---|---|
| குழையன் | கச்சினன் | இல்லத்தன் |
| புறத்தன் | பொன்னன்னன் | புலிபோல்வன் |
| கரியன் | செய்யன் | கருமையன் |
| துணங்கையன் | அல்லன் | உளன் |
| இலன் | நல்லன் | தீயன் |

போன்றவற்றையும், தெய்வச்சிலையார் (சூத். 5, 198, 208.)

| | | |
|---|---|---|
| உண்டனன் | உண்கின்றனன் | உண்பன் |
| பாண்டியன் | மாயவன் | உடையன் |
| நெடியன் | | |

போன்றவற்றையும், கல்லாடனார் (சூத். 5, 208, 217)

| | | |
|---|---|---|
| உண்டனன் | உண்டிலன் | உண்ணா நின்றனன் |
| உண்கின்றனன் | உண்ணாநின் றிலன் | உண்பன் |
| உண்குவன் | உண்ணலன் | உடையன் |
| நிலத்தன் | பொன்னன் | கரியன் |
| அல்லன் | செய்யன் | |

போன்றவற்றையும் எடுத்துக்காட்டுக்களாகத் தந்து நிற்பர்.

சங்ககால இலக்கியங்களில் இவ்விகுதி நிகழ்கால இடைநிலைகளுக்குப் பின்னர் வருதலைக் காண முடியவில்லை. இதைப் போன்றே உண்டிலன், உண்ணாநின்றிலன், உண்கின்றிலன் போன்று கால இடைநிலைகளுக்குப் பின்னர் -இல்-வந்து -அன் வரும் இடங்களையும் காண முடிவதில்லை. -அல்-, -இல்- ஆகிய எதிர்மறைகளை அடுத்து பிரியலன் (குறு. 273-8) போன்று கால இடைநிலைகள் இன்றியே, - அல் -,-இல் - இச்சூழலில் வருதல் காணத்தக்கது.

### 2.2.1.2 சூழல்கள்

இவ் விகுதி

1. -அன்-சாரியைக்குப் பின்னரும்
2. இறந்தகால இடைநிலை -இன்-னுக்குப் பின்னரும்
3. இறப்பில்கால இடைநிலைகளுக்குப் பின்னரும்

4. எதிர்மறை -அல்-, -இல் களுக்குப் பின்னரும்
5. குறிப்பு வினையடிகளுக்குப் பின்னரும்
6. வினையாலணையும் பெயர் விகுதிகளுக்குப் பின்னரும் (-∅-, -அவ்-, -(உ) ந்-)

வரும்.

### 2.2.1.2.1 -அன் - சாரியைக்குப் பின்னர்

பல்வேறு சூழல்களில் -அன் காணப்படினும் மேற்கூறிய சூழலில், வினைமுற்று வடிவங்களில் காணப்படுவது குறிப்பிடத்தக்கதாகும். இதுவே இதற்குரிய சூழல் எனக் கூறலாம். பிற சூழல்களிலும் இது காணப்படினும் இச்சூழலிலேயே இது பெருவரவிற்றாக உள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். இவ் -அன்- சாரியையும் பல்வேறு இறந்த கால இடைநிலைகளை ஒட்டி வர, அதன் பின்னர் இவ்விகுதி வருதலேமிகப் பெருவழக்கு.

| | | |
|---|---|---|
| எதிர்ந்தனன் | தொடங்காநின்றனன் | ஐங் 448-2 |
| கொடி எடுத்தனன் | கொடியை உயர்த்தினன் | அகம் 354-3 |
| என்றனன் | என்றனன் | நற் 50-7 |
| சென்றனன் | செல்லாநின்றான் | குறு 205-5 |
| அமைந்தனன் | பொருந்தினன் | புறம் 328-5 |
| நக்கனன் | முறுவல்பூத்தான் | பத்து 8-183 |
| இருந்தனன் | இருந்தான் | கலி 38-2 |
| இசைத்தனன் | கூறினன் | சிலம்பு 8-9 |
| உதித்தனன் | பிறந்தனன் | மணி 14-104 - |

பல்வேறு இறந்தகால இடைநிலைகளை அடுத்து, -அன் சாரியை இன்றி இது பொதுவாக வருவது இல்லை. ஆனால் அகநானூற்றில் -ப்ப்- என்ற காலஇடைநிலையை அடுத்தும், புறநானூற்றில் -வ்- என்ற காலஇடைநிலையை அடுத்தும் ஒவ்வொரு இடத்தில் வினையாலணையும் பெயராக வந்திருப்பது குறிப்பிடத்தக்கது

| | | |
|---|---|---|
| நளிப்பனன் | செறிப்போன் | அகம் 384-12 |
| விரைவனன் | விரைபவன் | புறம் 150-12 |

### 2.2.1.2.2 -இன்- இறந்தகால இடைநிலைக்குப் பின்னர்

| | | |
|---|---|---|
| அழுங்கினன் | தவிர்ந்தனன் | ஐங் 427-4 |

| | | |
|---|---|---|
| குறுகினன் | அண்மையிற் சென்றன | அகம் 248 -7 |
| வருந்தினன் | வருந்தாநின்றான் | நற் 32 – 4 |
| அஞ்சினன் | அஞ்சுகின்றனன் | குறு 02 - 6 |
| சூடினன் | சூடினான் | புறம் 239 – 2 |
| உள்ளினன் | நினைந்தனன் | பத்து 8 - 200 |
| நடுங்கினன் | நடுங்கினான் | கலி 60 - 8 |
| கூறினன் | கூறினான் | சிலம்பு 30 - 94 |
| ஆயினன் | ஆயினன் | மணி 15 - 45 |

## 2.2.1.2 3 இறப்பில்கால இடைநிலைகளுக்குப் பின்னர்

| | | |
|---|---|---|
| மறந்து அமைகுவன் | மறந்திருப்பான் | ஐங் 36 - 2 |
| நல்குவன் | தந்தருள்வன் | அகம் 92 - 27 |
| தருகுவன் | தருவான் | அகம் 280 - 11 |
| பெறுகுவன் | அடைவன் | நற் 119 - 10 |
| துணிகுவன் | துணிந்து அமையும் தன்மையுடையான் | குறு 230 – 2 |
| வலி ஆகுவன் | துணை செய்வன் | புறம் 396 - 10 |
| செய்குவன் | செய்குவன் | புறம் 28 - 13 |
| மாற்றுவன் | விலக்குவன் | பத்து 9 – 272 |
| தூர்க்குவன் | தூர்த்தலைச் செய்வன் | பத்து 9 – 271 |

துணிகுவன் போன்ற சில சொற்களில் ககரவொற்று காணப் படுவது குறிப்பிடத்தக்கதாகும். இந்நிலையில் வல்வினை அடிகள் மெல்வினை அடிகளைப் போன்று மாற்றப்படுவதும், கேட்பன் என வரவேண்டியது கேட்குவன் என வகரம் பெற்று நிற்பதும் உணரத்தக்கன. இக்ககர ஒற்றைக் கால இடைநிலையாகக் கொள்ளுவதா என்ற எண்ணம் எழுவது இயற்கை. அங்ஙனமாயின் வகரத்தை உடம்படு மெய்யாகக் கொள்ள வேண்டும். வினையில் எங்கும் இவ்வாறு வகர உடம்படுமெய் வருவதில்லை. மேலும் "போகேன்" (மணி 18.–171) போன்ற ஓரிரு இடங்களில் எதிர்மறையிலும் வருதல் காண்க.

## 2 2.1.2.4 – அல் –, -இல்– எதிர்மறை இடைநிலைகளுக்குப் பின்னர்

| | | |
|---|---|---|
| அறியலன் | அறியான் | பதி 20 - 6 |
| அறியலன் | அறிகுவான் அல்லன் | ஐங் 38 – 2 |
| பிரியலன் | பிரியான் | அகம் 352 - 10 |
| வாரலன் | வருகின்றானலன் | நற் 180 – 4 |
| பிரியலன் | செலவழுங்கிலன் | குறு 273 – 8 |
| அஞ்சலன் | அஞ்சுதல் இல்லன் | புறம் 361 – 3 |
| எள்ளலன் | இகழ்ந்திலன் | கலி 145 - 52 |
| துளக்கிலன் | நடுங்கிலன் | சிலம்பு 16 – 192 |

- இல் - எதிர்மறைக்குப் பின்னர் சிலப்பதிகாரத்தில் மட்டும் ஒரு இடத்தில் வருவது குறிப்பிடத்தக்கது குறளிலும், மணிமேகலையிலும் வினையாலணையும் பெயராகவே ஒவ்வொரு இடத்தில் வரக் காணலாம்.

### 2.2.1.2.5 குறிப்புவினை அடிகளுக்குப் பின்னர்

| | | |
|---|---|---|
| வல்லன் | வல்லன் | பதி 87 - ? |
| நல்லன் | நல்லன் | ஐங் 11-3 |
| உரியன் | உரியன் | அகம் 190 – 10 |
| உவகையன் | உவகையுடையன் | நற் 285 - 6 |
| நெஞ்சத்தன் | நெஞ்சத்தையுடையன் | குறு 265 - 6 |
| அளியன் | அளிக்கத்தக்கான் | புறம் 257 - 5 |
| அன்பினன் | அன்பினையுடையன் | புறம் 221 - 2 |
| உரியன் | உரியன் | பத்து 1 – 77 |
| உடையன் | உடையன் | கலி37 - 22 |
| இலன் | இலன் | குறள் 341 |
| செவ்வியன் அல்லன் | கோட்டமுடையான் | சிலம்பு 8 – 49 |
| அல்லன் | அல்லன் | மணி 4-49 |

### 2.2.1.2.6. வினையாலணையும் பெயர் விகுதிகளுக்குப் (-∅- -அவ்-(உ ந்) பின்னர்

படர்க்கையில் வினையாலணையும் பெயர்கள் பெரும்பான்மையாகவருகின்றன. தன்மை, முன்னிலை முடிவுகளில் சில இடங்களில் இவை வந்தாலும்கூட படர்க்கையில் அவை வருமிடங்கள் மிகப்

பெரும்பான்மை என்பதனால் தனியாகக் குறிப்பிடப் படுகின்றன.

| | | |
|---|---|---|
| பிரியுநன் | பிரிந்துசெல்பவன் | அகம் 392-10 |
| காணுநன் | காண்பான் | நற் 390-7 |
| உறுநன் | உறுவான் | புறம் 238-5 |
| வதியுநன் | உறங்கும் அரசன் | பத்து 5-80 |
| நளிப்பனன் | செறிப்போன் | அகம் 384-12 |
| விரைவனன் | விரைபவன் | புறம் 150-12 |
| எடுத்தனன் | எடுத்தவன் | கலி 37-18 |
| இகழ்ந்தனன் | இகழ்ந்தவன் | மணி 5-88 |
| பற்றினன் | பிடித்தவன் | கலி /9-12 |
| ஒற்றினன் | எழுதியோன் | சிலம்பு 29- 8-2 |
| சாற்றினன் | அறிவித்தவன் | மணி 4-50 |
| அறிவன் | அறியும் தன்மை யுடைய வேலன் | ஐங் 247-1 |
| ஏந்துவன் | ஏந்துவான் | புறம் 801-16 |
| உறுவன் | பொருந்திய மேலோன் | சிலம்பு 9-52 |
| கற்றிலன் | கற்றிலன் | குறள் 414 |
| தவிர்ந்திலன் | தவிராதவன் | மணி 6-18 |
| வந்தவன் | வந்தவன் | புறம் 217-8 |
| கொடிமேல் இருந்தவன் | கொடிமேல் இருந்த கருடன் | பரி 4-48 |
| பெற்றவன் | இடப்பட்டவன் | கலி 136 6 |
| கொண்டவன் | கொண்டவன் | குறள் 307 |
| பெற்றவன் | பெற்றோன் | சிலம்பு 30-122 |
| என்றவன் | அறிவித்தவன் | மணி 27-86 |
| ஆள்பவன் | தோஊத் தொழில் கொள்கின்ற அவன் | கலி 143-35 |
| வாழ்பவன் | வாழ்பவன் | குறள் 47 |
| அஞ்சுமவன் | அஞ்சுமவன் | குறள் 727 |
| ஆள்பவன் | செங்கோல் செலுத்துபவன் | மணி 24-64 |
| காணாதவன் | காணாதவன் | நற் 307-9 |

| | | |
|---|---|---|
| அழுந்தாதவன் | மூழ்காதவன் | கலி 146-25 |
| நச்சப்படாதவன் | நச்சப்படுதல் இல்லாதவன் | குறள் 1004 |
| மார்பன் | மார்பினை உடையவன் | பதி 20-21 |
| மலைநாடன் | மலைநாட்டின் தலைவன் | ஐங் 205-3 |
| மார்பன் | மார்பனாகிய தலைவன் | அகம் 66-9 |
| தொடியன் | தொடியணிந்தவன் | நற் 50-2 |
| சிலம்பன் | குறிஞ்சிநிலத் தலைவன் | குறு 362-6 |
| ஆண்டகையன் | ஆண்தகைமையை உடையவன் | புறம் 292-8 |
| மார்பன் | மார்பையுடையவன் | பத்து 3-240 |
| இளையன் | இளையவன் | பரி 2-11 |
| உரியன் | உரியன் | குறள் 5-18 |
| மேனியன் | மேனியை உடையவன் | சிலம்பு 22 51 |
| உவகையன் | மகிழ்ந்தவன் | மணி 25-187 |
| கானவன் | குறவன் | ஐங் 283-1 |
| விறலவன் | வெற்றியையுடைய தலைவன் | குறு 359-5 |
| சீற்றத்தவன் | சினத்தையுடைய பாண்டியன் | பரி 22-3 |
| மனத்தவன் | மனத்தையுடையவன் | கலி 149-10 |
| உடையவன் | உடையவன் | குறள் 112 |
| பெரியவன் | பெரியவன் | சிலம்பு 10-183 |
| கரியவன் | கரியதிருமேனியையுடைய தேவேந்திரன் | மணி 25-55 |

அஞ்சுமவன் போன்ற வடிவம் குறளில் ஓரிடத்தில் மட்டுமே வந்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

## 2.2.2 ஆன்

பழந்தமிழ் நூல்களில் காணப்படும் ஆண்பால் விகுதிகளில் -ஆன் வரலாற்று அடிப்படையில் முக்கியமானதாகும். -அன்,-ஆன், -ஒன் ஆகிய மூன்று விகுதிகளில் -ஆன் பிறவற்றை விடக் குறைவாகவே வரினும் இடைக்காலத் தமிழில் இந்நிலை மாறிவிடுதல் இங்குக் குறிப்பிடத்தக்கது. -ஒன் இதை விட அதிகமாக வருவதும் காலம் செல்லச் செல்ல -ஒன் வழக்கற்றுவிடுவதும் உணரற்பாலன. -ஒன் பெருவழக்கிற்றாய் இருப்பினும் தொல்காப்பியம் -ஆன் உருபிலிருந்துதான் -ஒன் உருபு உருவாயிற்று எனக் கூறும்.

-அன், -ஆன் ஆகிய இரு விகுதிகளும் துணைநிலை வழக்கிலும், பதில்நிலை வழக்கிலும் வரும் தன்மையன.

அன் விகுதி இறந்தகால இடைநிலைகளை ஒட்டிவரும்-அன்- சாரியைக்குப் பின்னர் பெரும்பாலும் வர, ஆன் விகுதி எதிர்மறை காட்டும் -∅-க்கு அடுத்து வருதலே பெரும்பான்மையாக உள்ளது. இச்சூழல்களில் இவ்விகுதிகள் துணைநிலை வழக்கிலும், பிற சூழல்களில் பதில்நிலை வழக்கிலும் உள்ளன. முன்பழந்தமிழ் நூல்களில் -ஆன் விகுதி கால இடைநிலைகளைக் காட்டிலும்-∅- எதிர்மறையை அடுத்து மிகுதியான எண்ணிக்கையில் வருவதைக் காணலாம். ஆனால் பின்பழந்தமிழ் நூல்களில் இந்நிலை மாறி வரக்காண்கிறோம். இதனையும் முன்பழந்தமிழ், பின்பழந்தமிழ்க் கூறாகக் கருதலாம்.

| | -∅-எதிர்மறை | கால இடைநிலை |
|---|---|---|
| பதி | 3 | 3 |
| ஐங் | 10 | 3 |
| அகம் | 20 | 0 |
| நற் | 10 | 1 |
| குறு | 10 | 1 |
| புறம் | 43 | 6 |
| பத்து | 8 | 0 |
| பரி | 3 | 17 |
| கலி | 34 | 125 |
| குறள் | 17 | 76 |

| | எதிர்மறை | கால இடைநிலை |
|---|---|---|
| சிலம்பு | 12 | 61 |
| மணி | 15 | 8 |

கலித்தொகை, பரிபாடல், குறள், சிலம்பு தவிர ஏனைய பழந் தமிழ்நூல்களில் பல்வேறு கால இடைநிலைகளுக்குப் பின்னர் வரும் ஆன் விகுதியைக் காட்டிலும் எதிர்மறை இடைநிலைக்குப் பின்னர் வரும் ஆன் விகுதியே அதிகமாக வருவது குறிப்பிடத்தக்கதாகும். ஆனால் கலித்தொகை, குறள், சிலம்பு போன்ற பிற்காலப் பழந்தமிழ் நூல்களில் இந்நிலை மாறியுள்ளது. பின்பழந்தமிழின் சிறப்புத் தன்மையாக இம்மாற்றத்தினைக் கருதலாம். தன்மை ஒருமையில் வரும் ஏன் விகுதியும். முன்னிலை ஒருமையில் வரும் -ஆய் விகுதியும் இத்தன்மை கொண்டவையே இதனால்தான் கலித்தொகையும், சிலம்பும், பரிபாடலும் பின்பழந்தமிழ் நூல்கள் எனக் கருதப்படவேண்டும் எனக் கூறலாம்.

**2.2.2.1 உரையாசிரியர்கள்**

இவ் விகுதிக்கு உதாரணம் தர வந்த இளம்பூரணர் (சூத் 5, 202, 210)

| | | |
|---|---|---|
| உண்டான் | உண்ணாநின்றான் | உண்பான் |
| மூவாட்டையான் | நாலாட்டையான் | ஏழாட்டையான் |

போன்றவற்றையும், சேனாவரையர் (சூத் 5, 205)

| | | |
|---|---|---|
| உண்டான் | உண்ணாநின்றான் | உண்பான் |
| கரியான் | | |

என இளம்பூரணர் தந்த அதே உதாரணங்களையும், நச்சினார்க் கினியர் (சூத். 5, 207)

| | | |
|---|---|---|
| உண்டான் | உண்டிலான் | உண்ணாநின்றான் |
| உண்பான் | உண்குவான் | உண்ணான் |
| உண்கின்றிலான் | உண்கின்றான் | உண்ணாநின்றிலான் |
| கரியான் | | |

போன்றவற்றையும், தெய்வச்சிலையார் (சூத். 5, 198)

| | | |
|---|---|---|
| உண்டான் | உண்ணாநின்றான் | உண்பான் |
| உண்ணான் | | |

போன்றவற்றையும், கல்லாடனார் (சூத். 5, 208, 217) நச்சினார்க்கினியரைப் பின்பற்றி

உண்டான் உண்டிலான் உண்ணாநின்றான்
உண்பான் உண்ணான் உண்கின்றான்
உண்ணாநின்றிலான் உண்கின்றிலான் உண்குவான்

போன்றவற்றையும் தந்து நிற்பர்.

முன்னரே குறிப்பிட்டபடி -கின்று- ஆநின்று- ஆகிய நிகழ்கால இடைநிலைகளுக்குப் பின்னர் இவ் விகுதி வருவதைப் பழந்தமிழ் இலக்கியங்களில் காண முடிவதில்லை. இதைப் போன்று உண்ணா நின்றிலான், உண்கின்றிலான், உண்டிலான் போன்ற உதாரணங்களும் காணப்படுவதில்லை. எனினும் உரையாசிரியர்கள், அதிலும் குறிப்பாக, நச்சினார்க்கினியர் தரும் உதாரணங்கள் பொதுமையாக்கத்தின் விளைவே என எண்ணலாம்.

இது போன்றே இவை வினையாலணையும் பெயர்களிலும் வருதல் காணத்தக்கது.

### 2.2.2.2 சூழல்கள்

இவ்விகுதி

1. இறந்தகால இடைநிலைகளுக்குப் பின்னரும்
2. இறப்பில்கால இடைநிலைகளுக்குப் பின்னரும்
3. -Ø- எதிர்மறைக்குப் பின்னரும்
4. குறிப்பு வினையடிகளுக்குப் பின்னரும்
5. வினையாலணையும் பெயர் விகுதி -Ø- குப் பின்னரும்

வரும்.

#### 2.2.2.2.1 இறந்தகால இடைநிலைகளுக்குப் பின்னர்

பல்வேறு இறந்தகால இடைநிலைகளுக்குப் பின்னர் - ஆன் வருவதும், அவற்றை அடுத்து வரும் –அன்– சாரியைக்குப் பின்னர் –அன் வருவதும், இவற்றிடையே உள்ள துணைநிலை வழக்கைக் காட்டும்.

| | | |
|---|---|---|
| கொண்டான் | கொண்டான் | பதி 6 பதிகம் |
| மலைந்தான் | அணிந்து கொண்டனன் | ஐங் 201-2 |
| கொண்டான் | கொண்டனன் | குறு 223-7 |
| கொண்டான் | அன்பு கொண்டு விட்டான் | புறம் 399-21 |
| பார்த்தான் | பார்த்தனன் | பரி 12-55 |
| தொட்டான் | தீண்டுதலைச் செய்தான் | கலி 55-19 |
| கெட்டான் | இறந்தான் | குறள் 967 |
| கொண்டான் | கொண்டான் | சிலம்பு 9-78 |
| பிறந்தான் | பிறந்தனன் | மணி 13- 1 |

அகம், நற்றிணை, பத்துப்பாட்டு முதலிய பழந்தமிழ் நூல்களில் இறந்தகால இடைநிலைகளுக்குப் பின்னர் ஆன் விகுதி காணப்பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும். இறந்த கால இடைநிலையான -இன்- னுக்குப் பின்னர் -ஆன் வருமென்றாலும், பழந்தமிழ் நூல்களில் பலவற்றில் வரவில்லை என்பதும் குறள் (1) கலித்தொகை (1) சிலம்பு (3) ஆகிய நூல்களில் மட்டுமே இது வந்துள்ளது என்பதும் குறிப்பிடத்தக்கன. குறளில் வினையாலணையும் பெயராகவே வருதலைக் காணலாம் (குறள்.3).

| | | |
|---|---|---|
| வருத்தினான் | வருத்தினான் | கலி 102 - 277 |
| கூடாயினான் | கூடாய்க்கிடந்தான் | சிலம்பு 20-வெ2-4 |
| ஆயினான் | ஆயினான் | சிலம்பு 29-10-2 |
| ஏற்றினான் | ஏற்றினான் | சிலம்பு 27-14-2 |

### 2.2.2.2.2 இறப்பில்கால இடைநிலைகளுக்குப் பின்னர்

இச் சூழலில் பரிபாடல், கலித்தொகை, சிலம்பு, மணிமேகலை ஆகிய நூல்களில் மட்டுமே ஆன் விகுதி வந்துள்ளது. பெரும்பான்மையான பழந்தமிழ் நூல்கள் ஆன் விகுதியை இச் சூழலில் கொண்டிருக்கவில்லை என்ற உண்மையையும் நாம் உணர முடிகிறது. ஆனால் -அன் இச்சூழலில் ஐங்குறுநூறு, அகம்,

நற்றிணை, குறுந்தொகை, புறநானூறு, பத்துப்பாட்டு ஆகிய ஆறு நூல்களில் வந்துள்ளது.

| | | |
|---|---|---|
| கழற்றுவான் | கழற்றும் தன்மை யுடையன் | பரி 20-80 |
| அமைவான் | ஆற்றியிருப்பான் | கலி 41-28 |
| அமைகுவான் | அமைந்திருப்பன் | கலி 30-68 |
| கொல்வான் | கொல்வான் | சிலம்பு 7-18-1 |
| புகல்வான் | வினவுவான் | மணி 30-248 |

### 2.2.2.2.3 –∅–எதிர்மறைக்குப் பின்னர்

எதிர்மறை விகுதியாகிய –∅–க்குப் பின்னரே இது அதிகமாக வந்துள்ளமை பற்றி முன்னர்க் கண்டோம், மேலும் இச்சூழலில் எல்லா நூல்களிலும் இவ்விகுதி வருவது, இச்சூழலே இதற்கு இயற்கையாக அமைந்த சூழல் என்பதைக் காட்டும். எதிர்மறையை (-∅ ) அடுத்து இது அதிகமாக வருதல் முன்பழந்தமிழின் ஒரு பண்பாகும்.

| | | |
|---|---|---|
| ஆனாஅன் | அமையான் | பதி 47 – 1 |
| பாடான் | பாடாதொழிவான் | ஐங் 244-3 |
| கொள்ளான் | கொள்ளான் | அகம் 84-15 |
| அஞ்சான் | அஞ்சான் | நற் 287-6 |
| அறியான் | அறிகின்றிலன் | குறு 230-6 |
| உண்ணான் | உண்ணாப்பெறான் | புறம் 184-11 |
| அமையான் | விருப்பம் தவிரான் | பத்து 4-490 |
| தங்கான் | தங்கான் | பரி 16 - 27 |
| அகலான் | நீங்கான் | கலி 146 - 27 |
| அறியான் | அறியான் | குறள் 863 – 1 |
| வாரான் | வந்திலன் | சிலம்பு 30 - 91 |
| அணுகான் | வருவான் அல்லன் | மணி 22 - 34 |

### 2.2.2.2.4 குறிப்பு வினையடிகளுக்குப் பின்னர்

| | | |
|---|---|---|
| பிறன்வயினான் | பிறனிடத்தேயுள்ளான் | அகம் 186-13 |
| ஊரான் | ஊரின்கண் உள்ளான் | குறு 97 - 3 |

| | | |
|---|---|---|
| அன்னன் | அத்தன்மையன் | புறம் 171-12 |
| அல்லான் | அல்லாதவன் | கலி 84-13 |
| ஈகலான் | இவறன் மாலையன் | குறள் 863-1 |
| அகவையான் | பிராயத்தான் | சிலம்பு 1-34 |
| அனையான் | போல்வான் | மணி 16-48 |

2.2.2.2.6 வினையாலணையும் பெயர் விகுதி -∅-வுக்குப் பின்னர்

கலித்தொகை, குறள் ஆகிய இரு நூல்களிலும் ஆன் விகுதி அதிகமாகக் காணப்பட்டாலும், பிற நூல்களில் ஓன் விகுதியே அதிகமாக வந்துள்ளது. -ஆன், ஓன் ஆகியவை பதில்நிலை வழக்கில் உள்ளமை கண்கூடு.

வினையாலணையும் பெயர்

| | -ஆன் | -ஓன் |
|---|---|---|
| பதி | 0 | 2 |
| ஐங் | 2 | 12 |
| அகம் | 8 | 32 |
| நற் | 1 | 6 |
| குறு | 3 | 9 |
| புறம் | 7 | 79 |
| பத்து | 0 | 19 |
| பரி | 10 | 11 |
| கலி | 163 | 16 |
| குறள் | 162 | 0 |
| சிலம்பு | 58 | 144 |
| மணி | 19 | 139 |

| | | |
|---|---|---|
| இழுக்கியான் | தப்பியவன் | புறம் 71-16 |
| இரிந்தான் | அஞ்சியோடிய பகைவன் | புறம் 284-8 |
| கொண்டான் | கொண்டவன் | பரி 9-44 |
| கற்பித்தான் | கற்பித்த ஆசிரியன் | கலி 149-4 |
| நீட்டியான் | நீட்டிய துச்சாதனன் | கலி 101-18 |
| வியந்தான் | வியந்து நின்றான் | குறள் 474 |

| | | |
|---|---|---|
| அடங்கியான் | அடங்கினான் | குறள் 124 |
| ஏகினான் | சென்றவன் | குறள் 3 |
| வஞ்சம்செய்தான் | வஞ்சித்தான் | சிலம்பு 17-24-1 |
| செத்தான் | இறந்தவன் | மணி 30-240 |
| அறிவான் | அறிந்தவன் | நற் 136-6 |
| எறிவான் | பொருகின்றான் | புறம் 296-4 |
| வருவான் | வாராநின்ற முருகவேளை | பரி 9-29 |
| (அல்லற்) படுவான் | வருத்தமுறு கின்றவன் | கலி 40-18 |
| என்பான் | என்றிருப்பான் | கலி 40-29 |
| உணர்ப்பான் | தீர்க்குமவன் | கலி 131-40 |
| காக்கிற்பான் | காக்கின்றவன் | கலி 78-5 |
| வாழ்வான் | வாழ்வான் | குறள் 41 |
| என்பான் | சொல்லப்படுவான் | குறள் 41 |
| தீர்ப்பான் | தீர்க்கும் மருத்துவன் | குறள் 950 |
| என்பான் | கூறப்படுவான் | சிலம்பு பதிகம் 14 |
| உறங்குவான் | துயில்பவன் | மணி 6-149 |

இச்சூழலில் (இறப்பில்காலம்) பிற்காலப் பழந்தமிழ் நூல்களில் அதிகமாகப் பயின்று வரும் ஆன் விகுதி, முன் பழந்தமிழ் நூல்களில் அருகி வழங்குவது குறிப்பிடத்தக்கது.

| | | | |
|---|---|---|---|
| பதி | 0 | பரி | 9 |
| ஐங் | 0 | கலி | 50 |
| அகம் | 0 | குறள் | 42 |
| நற் | 1 | சிலம்பு | 9 |
| குறு | 0 | மணி | 2 |
| புறம் | 3 | | |
| பத்து | 0 | | |

| | | |
|---|---|---|
| உதவாதான் | உதவாதவன் | கலி 149-6 |
| வேண்டாதான் | வேண்டாதான் | குறள் 163 |
| நல்காதான் | அருளான் | சிலம்பு 24-3-2 |

| | | |
|---|---|---|
| நல்கான் | அளியான் | ஐங் 167-4 |
| அறியான் | அறியான் | அகம் 32-19 |
| அறியான் | அறியான் | குறு 74-3 |
| அறியான | அறியான் | புறம் 230 12 |
| பெறான் | பெறாதவன் | கலி 61-1 |
| பேணான் | விரும்பான் | குறள் 526 |
| அஞ்சான் | அஞ்சான் | சிலம்பு 17-6 |
| அஞ்சான் | அஞ்சான் | மணி 22-187 |
| உள்ளான் | உள்ளவன் | அகம் 356-1 |
| அகலத்தான் | மார்பையுடைய வனான தலைவன் | பரி 16-44 |
| வேலான் | வேலையுடைய முருகன் | கலி 27-16 |
| குணத்தான் | குணங்களைஉடை யான் | குறள் 9 |
| புகழினான் | புகழையுடையான் | சிலம்பு 1-36 |
| அக்வயினான் | அகத்திருப்பவன் | மணி 15-14 |

## 2.2.3 -ஒன்

ஆண்பால் விகுதிகள் பற்றிக் குறிப்பிடும் சூத்திரத்தில் தொல் காப்பியம் இதுபற்றிக் குறிப்பிடவில்லை என்பது முன்னரே கூறப் பட்டது. எனினும் பின்னர்

"பால்அறி மரபின் அம்மூ ஈற்றும்
ஆ ஒ ஆகுஞ் செய்யு ளுள்ளே"

எனக் கூறிச் செல்லும், "ஈற்றுக்கண்ணும் நின்ற ஆகாரம் ஓகாரமாம் செய்யுளுள் என்றவாறு" என இளம்பூரணர் (208) குறிப்பிடுவார்

தொல் (696), ஆன் விகுதியிலிருந்து ஓன் விகுதி பெறப்படு கின்றது என்று கூறினும், பழந்தமிழ் நூல்கள் பலவற்றில் ஓன் விகுதி ஆன் விகுதியைக் காட்டிலும் அதிகமாக வந்துள்ளது. கீழுள்ள பட்டியல் இதனைத் தெளிவாகக் காட்டும்.

| | -ஆன் | -ஒன் |
|---|---|---|
| பதி | 6 | 5 |
| ஐங் | 13 | 13 |
| அகம் | 25 | 40 |
| நற் | 11 | 12 |
| குறு | 12 | 11 |
| புறம் | 52 | 102 |
| பத்து | 8 | 20 |
| பரி | 21 | 15 |
| கலி | 208 | 16 |
| குறள் | 178 | 0 |
| சிலம்பு | 86 | 146 |
| மணி | 32 | 139 |

வினைமுற்று வடிவங்களைக் காட்டிலும் வினையாலணையும் பெயர் களில் ஒன் விகுதி அதிகமாக வந்துள்ளது என்பது மற்றொரு உண்மையாகும்.

| | வினைமுற்று | வினையாலணையும் பெயர் |
|---|---|---|
| பதி | 3 | 2 |
| ஐங் | 1 | 12 |
| அகம் | 8 | 32 |
| நற் | 6 | 6 |
| குறு | 2 | 9 |
| புறம் | 23 | 79 |
| பத்து | 1 | 19 |
| பரி | 4 | 11 |
| கலி | 0 | 16 |
| குறள் | 0 | 0 |
| சிலம்பு | 2 | 144 |
| மணி | 0 | 139 |

எனவே - ஒன் வினையாலணையும் பெயர்களிலேயே அதிகமாக வருவது எனக் கருதலாம்.

### 2.2.3.1 உரையாசிரியர்கள்

இதற்கு உதாரணம் தரவநத இளம்பூரணர் "வினவிதிற்றந்தான்"

என்பது "வினவி நிற்றந்தோன்" (அகம் 48) எனவும் 'நகூஉப் பெயர்ந்தாள்' என்பது 'நகூஉப் பெயர்ந்தோள்' எனவும் (அகம் 248) 'சென்றா ரன்பிலர்' என்பது "சென்றோரரன்பிலர்" (அகம் 31) எனவும் வரும்" என்பார். இதே உதாரணங்களையே பிறரும் தருவர்.

**2.2.3.2 சூழல்கள்**

இவ்விகுதி

1. இறந்தகால இடைநிலைகளுக்குப் பின்னரும்
2. இறப்பில்கால இடைநிலை -ம்- க்குப் பின்னரும்
3. குறிப்பு வினையடிகளுக்குப் பின்னரும்
4. வினையாலணையும்பெயர் விகுதி -∅- க்குப் பின்னரும்

வரும்.

**2.3.2.1. இறந்தகால இடைநிலைகளுக்குப் பின்னர்**

| | | |
|---|---|---|
| படர்ந்தோன் | சென்றொழிந்தான் | பதி 61-10 |
| துறந்தோன் | பிரிந்துபோவார் | ஐங் 471-3 |
| பெயர்ந்தோன் | மீண்டான் | அகம் 32-16 |
| புகழ்ந்திசினோன் | புகழ்ந்தனன் | அகம் 210-1 |
| வந்தோன் | வந்தனன் | நற் 114-6 |
| உயிர்த்தோன் | வெய்துயிர்த்தான் | குறு 217-5 |
| அஃகியோன் | குறைவுற்றான் | குறு 346-8 |
| ஈத்தோன் | கொடுத்தான் | புறம் 376-16 |
| அருளியோன் | நல்கினான் | புறம் 398-29 |
| வந்தோன் | வந்துளன் | பத்து 1-28 5 |
| இட்டோன் | கொடுத்தருளினான் | பரி 5-35 |
| நிகழ்வித்தோன் | நிகழ்வித்தனன் | சிலம்பு உரை பெறு கட்டுரை 17 |

**2.2.3.2.2 இறப்பில்கால இடைநிலை -ம்-க்குப் பின்னர்**

| | | |
|---|---|---|
| அறியுமோன் | அறியும்மவன் | புறம் 147-4 |

**2.2.3.2.3 குறிப்புவினை அடிகளுக்குப்பின்னர்**

| | | |
|---|---|---|
| களத்தோன் | களத்தில் உள்ளான் | பதி 57-3 |
| உடையோன் | உடையனாயுள்ளான் | புறம் 311-7 |

### 2.2.3.2.4 வினையாலணையும் பெயர் விகுதி-∅-க்குப் பின்னர்

| | | |
|---|---|---|
| உயர்ந்தோன் | உயர்ந்தோன் | பதி 30 35 |
| அணங்கியோன் | வருத்தியவன் | ஐங் 182-4 |
| ஈட்டியோன் | சேர்த்தவன் | அகம் 276-13 |
| படைத்தோன் | படைத்த கொடியோன் | நற் 240-1 |
| நீவியோன் | தடவியவன் | குறு 379-6 |
| உரைத்தோன் | அறிவித்த குற்றேவன்மகன் | குறு 589-4 |
| வென்றோன் | வென்றவன் | புறம் 125-10 |
| விலங்கியோன் | விலக்கியவன் | புறம் 263-8 |
| பள்ளி அமர்ந் தோன் | துயில்கொண்டோன் | பத்து 4-373 |
| வென்றோன் | வென்றோன் | சிலம்பு 10-196 |
| அகன்றோன் | போகின்றவன் | மணி 13-38 |
| அகழ்வோன் | எடுப்போன் | அகம் 282-4 |
| கொடுப்போன் | விடுப்போன் | அகம் 66-16 |
| துஞ்சுவோன் | உறங்குபவன் | புறம் 316-3 |
| கொய்யுமோன் | பறிப்போன் | புறம் 257-3 |
| நோக்குவோன் | நோக்கி நிற்கும் ஒருவன் | பரி 12-50 |
| வருவோன் | வருவோன் | சிலம்பு 15-43 |
| இருப்போன் | இருப்போன் | சிலம்பு 23-79 |
| அகல்வோன் | செல்லத் தொடங்கு பவன் | மணி 5-22 |
| உரைப்போன் | சொல்லுபவன் | மணி 27-202 |
| வாராதோன் | வருதல் இல்லாதவன் | ஐங் 119-4 |
| அறியாதோன் | அறியாத காதலன் | நற் 94-8 |
| கொள்ளாதோன் | கொள்ளாதவன் | புறம் 232-6 |
| நாணாதோன் | நாணாதவன் | கலி 43-11 |
| நெடியோன் | திருமால் | பதி 15-59 |
| புரையோன் | பண்புடையோன் | ஐங் 252-3 |
| கொடியோன் | கொடிய மகன் | அகம் 66-20 |

| | | |
|---|---|---|
| நலத்தோன் | நலத்திற்குக்காரணமாயிருக்கும் தலைவன் | நற் 17-62 |
| தேரோன் | தேரில் வந்த தலைவன் | குறு 227-4 |
| விழுமியோன் | சீரியோன் | புறம் 75-7 |
| இல்லோன் | இல்லாதவன் | புறம் 69-5 |
| அன்னோன் | அக்கரிகாற் பெருவளத்தான் | பத்து 2-231 |
| இளையோன் | இளைஞன் | சிலம்பு 16-203 |
| அறவோன் | புத்தபெருமான் | மணி 10-1 |

**2.2.4 -∅**

பழந்தமிழ் இலக்கியங்களில் மேலே குறிப்பிடப்பட்ட -அன், -ஆன்,- ஓன் ஆகிய விகுதிகள் மட்டுமின்றி -உம்- ஐ அடுத்து வரும் -∅- ஆண்பால் ஒருமையைக் காட்டி நிற்கின்றது. இவ்விகுதி பழந்தமிழ் இலக்கியங்களைப் பொறுத்தமட்டில் ஆண்பால் ஒருமையை மட்டுமின்றி, பெண்பால், ஒன்றன்பால், பலவின்பால் ஆகியவற்றையும் காட்டி நிற்பது குறிப்பிடத்தக்கதாகும். தொல் காப்பியம் -உம் எனவே கூறும்.

இவ்விகுதி பற்றிப் பேசவந்த தொல்காப்பியர்

"பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை
அவ்வயின் மூன்றும் நிகழும் காலத்துச்
செய்யும் என்னும் கிளவியொடு கொள்ளா"

என்னும் சூத்திரத்தின் மூலம் உம் விகுதி பல்லோர் படர்க்கையிலும், முன்னிலையிலும், தன்மையிலும் முற்றுச்சொல்லுடன் வாராது எனக் கூறிச் செல்கின்றார். அதாவது, ஆண்பால், பெண் பால், ஒன்றன்பால், பலவின்பால் ஆகிய பெயர்கள் எழுவாயாக வரும் பொழுது அவற்றின் பயனிலையாக வரும் வினைமுற்றுக்கள், உம் விகுதியையும் கொண்டு நிற்கும் என்ற ஒரு கருத்தை மறை முகமாகக் காட்டிச் செல்வது இங்கு நோக்கத்தக்கது.

**2.2.4.1 உரையாசிரியர்கள்**

இச்சூத்திரத்திற்கு உரை எழுத வந்த இளம்பூரணர் (சூத். 222

தெய்வச்சிலையார் (சூத். 221), கல்லாடனார் (சூத் 229) ஆகிய உரையாசிரியர்கள் கீழ்கண்ட எடுத்துக் காட்டுக்களைத் தந்து நிற்பர்

அவன் உண்ணும்　அவள் உண்ணும்
அது உண்ணும்　அவை உண்ணும்

உம் விகுதி படர்க்கைக்குப் பொதுவான (பல்லோர் படர்க்கை நீங்கலாக) ஒரு விகுதியாக வருவதாலும், இவ்விகுதி எடுத்து வரும் வினைமுற்றுக்கள் அனைத்திலும் இறப்பில்காலத்தையே காட்டி நிற்பதாலும், இதனை ஒரு பால் காட்டும் விகுதியாகக் கொள்ளாது, காலம் காட்டும் இடைநிலையாகவே கொள்ள வேண்டும் எனச் சிலர் (இசரயேல், 1973: 193) கருதுவர். எனவே உம் காலம் காட்டும் இடைநிலை என்றும், இதையடுத்து -Ø நின்று ஆண்பால் காட்டும் எனவும் கருதலாம்.

இவ்விகுதி, பழந்தமிழ் இலக்கியங்களில் மட்டுமல்லாது தற்காலத் தமிழிலும்கூட ஒருசில கிளைமொழிகளில் ஆண் பாலையும், பெண்பாலையும், ஒன்றன்பாலையும், பலவின்பாலையும் காட்டி நிற்பது குறிப்பிடத்தக்கதாகும். எடுத்துக் காட்டாக,

அப்பா வரும்　அம்மா வரும்
அது வரும்　அவை வரும்.

போன்ற வாக்கியங்களை ஒரு சில கிளைமொழிகளில் காணலாம்.

சங்ககால இலக்கியங்கள் அனைத்திலும் -Ø விகுதி ஆண் பாலை உணர்த்தி வருகின்றது எனினும். ஐங்குறுநூறு, கலித் தொகை நீங்கலாக ஏனைய இலக்கியங்களில் மற்ற ஆண்பால்விகுதி களைவிட மிகக் குறைவாகவே வருகின்றது எனலாம். மேலும் மற்ற ஆண்பால் விகுதிகள் வினைமுற்றுக்களிலும் வினையாலணையும் பெயர்களிலும் வர -Ø விகுதி வினைமுற்றுக்களில் மட்டுமே வரக் காண்கிறோம்.

பழந்தமிழ் இலக்கியங்களில் நூற்று எழுபது இடங் களில் (பதி 1, ஐங் 19, அகம் 11, நற் 4, குறு 3, புறம் 35, பத்து 3, பரி 4, கலி 55. குறள் 3, சிலம்பு 12 மணி 20) Ø விகுதி ஆண் பாலை உணர்த்தி நிற்கின்றது. பல இடங்களில் ஆண்பால் பெயர் கள் வெளிப்படையாக (overtly) எழுவாயாக வருவதில்லை.

எனினும் உரையாசிரியர்கள் அதுபோன்ற சில இடங்களில் ஆண்பால் பெயர்களையோ அல்லது ஆண்பால் சுட்டுப் பெயர்களையோ இட்டு உரை எழுதிச் செல்கின்றனர். இருப்பினும் ஒருசில இடங்களில் ஆண்பால் பெயர்கள் வெளிப்படையாகவே எழுவாயாக நிற்கக் காண்கிறோம்.

### 2.2.4.2 சூழல்

இவ்விகுதி இறப்பில்கால இடைநிலை-உம்-முக்குப் பின்னர் வரும்

#### 2.2.4.2.1 இறப்பில்கால இடைநிலை -உம்-க்குப் பின்னர்

"இகல்வினை மேவலன்.... வீசும்"
தான் பகைவரைப்பொரும் தொழிலையே விரும்புவன்
ஆதலால் வழங்குவன். பதி 60-2

" ............... நின்"
...... ... புதல்வன் அழும் .........
நின்மகன் அழுவான். ஐங்4–424

" ...... ............ எவ்வைக்குப்
பெரிது அளிக்கும்
.... .. ஊரன்"
எம் தமக்கைக்கு மிகவும்
அளி செய்கின்றனன் .. . ...
.. ஊரையுடைய தலைவன். ஐங் 89-2

"... ............ அவ்வேலன்
.... ..................
அறியும் .. ... ... ...."
அந்த வேண்மகன் அறிந்து
கூறவல்லுநன். ஐங் 241-3

"................ மகிழ்நன்
.........................
ஆடும் .............."
நம் தலைவன் ... .....
ஆடுவானாயினன். ஐங் 33-3

"தன்மனை உய்க்குமோ யாதவன்
............ ....... குறிப்பே"

தன்மனையின் கண் முற்படக்கொண்டு
செல்வானோ; அத்தலைமகன் உட்கோள் யாதோ?
அகம் 195-19

"ஏதில் வேலன்..............
தூங்கும் ......................."
யாதும் இயைபில்லாத வேலன்
வெறி ஆடுவான். அகம் 292-5

"..........மருங்கில் படர்தரும் துறைவன்
..............................
..............................
செலவரிது என்னும்"
பக்கலில் வந்து சேரும்
துறையினையுடைய தலைவன்........
செல்லுதல் அரிது என்று கூறுவன். அகம் 210-6

"எந்தையும்.......................
...................என்னும்"
எம் தந்தையும் கூறும். அகம் 12-2

"வருமே ... ......... சேர்ப்பன்"
சேர்ப்பன் வருகிற்பன். நற் 307-5

"செல்வன் செல்லும்................."
நம் காதலன் செல்லுவான். — நற் 344-8

"மலைச்செஞ் சாந்தின் ஆர மார்பினன்
நடுநாள் வந்து நம்மனைப் பெயரும்"
மலையின்கண் பிறந்த சிவந்த சந்தனத்தையும்
முத்து மாலையையும் உடைய மார்பினாய்
வண்டுகள் பொருந்திய தலைமாலையையுடைய
னாய் நமது மனைக்கு இடையிரவிலே வந்து மீளா
நின்றான். குறு 321-1,2,3

"............... கடவுள்
..........தெறு உம்.........."
கடவுள் ஒறுக்கும். குறு 87-2

"........ ....வேந்தனும்
........ காக்கும்''
..... அரசனும்......... காக்கும். புறம் 191-8

"அன்றே விடுக்கும் அவன் பரிசில்"
அவ்வள்ளலே நினக்கு ஏனைய பரிசிலும்
தந்துவிடுவான். பத்து 4-493
" .......... துயர் கூரச்
சுடும் இறை''
இறைவன் துன்பமிகும்படி ஒறுக்கும். பரி 8-79
"மல்லலூர் மறுகின்கண் இவட்பாடும் இஃதொத்தன்"
வளப்பத்தையுடைய ஊரின்மறுகின் கண்ணே
இவனொருத்தன் இவளைப் பாடும். கலி 138-10

"அன்பிலன் ..................
என் பரியும்...... .........''
அன்பிலன் யாங்ஙனம் தொலைக்கும். குறள் 892
"கோவலன் கூறும்.................''
கோவலன்கூறாநிற்பன். சிலம்பு 2-37

" ...... ..... இறையோன் கூறும்''
...... தலைவன் கூறுவான் ஆயினன்.
சிலம்பு 15-162
" ....... உறுவோன் கூறும்''
சேரப்பெருந்தகை கூறாநிற்பன். சிலம்பு 26-8

"கோவலன்..............
... ... ........

.......வாசித்தல் தொடங்கும்''
கோவலன் வாசிக்கத் தொடங்கினான். சிலம்பு 7-1-22
"..................மாயவன்
...................வரும்....................''
மாயவன் வருவான். சிலம்பு 17,19,2,20,2,21,2

"தீர்க்கவரும் வேலன்''
தீர்ப்பதற்கு வேலன் வருவான். சிலம்பு 24-11-2

"புதல்வன் வரும்''

புதல்வனாகிய முருகன் வருவான். சிலம்பு 24-12-4

"அன்னோ னிறைவ னாகும்''

அச்சிவபெருமானே கடவுள் ஆகும். மணி27-15

"................சாதுவன்

..................

சொல்லும்''

சாதுவன் கூறுவான், மணி 16-83

"........... களிமகன்...............

கணவிரி மாலை கட்டிய திரணையன்

..............எருக்கிற் கோத்த மாலையன்

...........

கட்டிய உடையினன்

...........

அழூஉம் விழூஉம் அரற்றும் கூஉம்

தொழூஉம் எழூஉம் சுழலலுஞ் சுழலும்

ஓடலும் ஓடும் ...................

நீடலும் நீடும் ..................''

அக் களிமகன் ... அலரிப்பூமாலையாலே கட்டப் பட்ட திரண்ட புயங்களையுடையவனும், எருக்கம்பூ வினால் தொடுக்கப்பட்ட மாலையினை மார்பில் அணிந்தவனும், கட்டிய ஆடையை உடையவனும், ...... அழுவான், தரையிலே விழுவான், பிதற்று வான், கூவுவான், தொழுது வீழ்ந்து வணங்குவான் பின்னர் எழுவான், சுழலுதலும் செய்வான், ஓடுதலையும் செய்வான், நெடிது நிற்றலும் செய்வான். மணி 3-104

சங்ககால இலக்கியங்கள் அனைத்திலும் நூற்று எழுபது இடங் க்ளில் (–உம்) –∅ விகுதி ஆண்பால் உணர்த்தி வருகின்றது. எனி னும் இவற்றுள், பதினொரு இடங்களில் (அகம் –1, கலி-10),[1] இவ்விகுதி -உ- இன்றி -ம்- முடன் வந்துநின்று ஆண்பால் உணர்த்துகின்றது என்பதும், பதின்மூன்று இடங்களில் (குறு-1, நற்-1, கலி-6, பரி – 1, மணி-4)[2] அளபெடையுடன் வந்து ஆண்பாலை உணர்த்துகின்றது என்பதும் குறிப்பிடத்தக்கன.

## 2.3 பட்டியல்கள்

### 2.3.1 பட்டியல் 1: ஆண்பால் விகுதிகள்

| | -அன் | -ஆன் | -ஓன் | -Ø |
|---|---|---|---|---|
| பதி | 12 | 6 | 5 | 1 |
| ஐங் | 110 | 13 | 13 | 19 |
| அகம் | 150 | 25 | 40 | 11 |
| நற் | 53 | 11 | 12 | 4 |
| குறு | 84 | 12 | 11 | 3 |
| புறம் | 179 | 52 | 102 | 35 |
| பத்து | 44 | 8 | 20 | 3 |
| பரி | 22 | 21 | 15 | 4 |
| கலி | 143 | 208 | 6 | 55 |
| குறள் | 71 | 178 | — | 3 |
| சிலம்பு | 185 | 86 | 146 | 12 |
| மணி | 106 | 32 | 139 | 20 |

1. போன்ம், அகம் 66-17; போன்ம், கலி 101-20; 101-26; 101-32; 103-31; 104-38; 104-44; 104-50; 105-38; 105-42;

2. தெறூஉம், குறு 87-2, வருஉம் நற் 285-11; தொடூஉம், கலி 55-22; தொழூஉம், 60-7; 63-1; பெறூஉம், கலி 104-23; வருஉம், கலி61-25; கெடூஉம், பரி 6-98, அழூஉம், மணி 3-110; விழூஉம், மணி, 3-110; தொழூஉம்- மணி 4-111 எழூஉம் மணி, 3-111.

## 2.3.2. பட்டியல் 2: -அன்

| | வினைமுற்று | | | | | | | வினையாலணையும் பெயர் -∅- | | | | | | | | | -அவ்- | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | இறந்த காலம் | | இறப்பில் காலம் | | எதிர் மறை | | குறிப்பு | இறந்த காலம் | | இறப்பில் காலம் | | | | | எதிர் மறை | குறிப்பு | இறந்த காலம் | | இறப்பில் காலம் | | எதிர் மறை | குறிப்பு |
| | -தன்- | -இன்- | -ன்- | -குன்- | -தன்- | -இன்- | | -தன்- | -இன்- | -ன்- | -குன்- | -ன்+தன்+ | ப்ன்+தன்- | -(உ)டி | -இன்- | | -இ- | -ஏ- | -(ப்)ப்- | -ம்- | -தி- | |
| பதி | — | — | — | — | 5 | — | 6 | — | — | — | — | — | — | — | — | 1 | — | — | — | — | — | — |
| ஐங் | 26 | 8 | — | 2 | 2 | — | 13 | — | — | 1 | 1 | — | — | — | — | 56 | — | — | — | — | — | 1 |
| அகம் | 19 | 7 | 1 | 3 | 4 | — | 21 | — | — | — | — | — | 1 | 2 | — | 92 | — | — | — | — | — | — |
| நற் | 16 | 4 | — | 2 | 1 | — | 10 | — | — | — | — | — | — | 1 | — | 18 | — | — | — | — | 1 | — |
| குறு | 10 | 4 | — | 2 | 3 | — | 8 | — | — | — | — | — | — | — | — | 56 | — | — | — | — | — | 1 |
| புறம் | 39 | 27 | 15 | 11 | 14 | — | 53 | — | — | 1 | — | 1 | — | 6 | — | 11 | — | 1 | — | — | — | — |
| பத்து | 3 | 1 | 1 | 4 | — | — | 18 | — | — | — | — | — | — | 2 | — | 15 | — | — | — | — | — | — |
| பரி | — | — | — | — | — | — | — | — | — | — | — | — | — | — | — | 17 | — | 3 | — | — | — | 2 |
| கலி | 13 | 9 | — | — | 1 | — | 36 | 3 | 2 | — | 3 | — | — | — | — | 26 | 2 | 15 | 12 | — | 1 | 10 |
| குறள் | — | — | — | — | — | — | 14 | — | — | — | — | — | — | — | 1 | 22 | 1 | 4 | 3 | 1 | 3 | 22 |
| சிலம்பு | 35 | 16 | — | — | — | 1 | 15 | — | 2 | 2 | — | — | — | — | — | 110 | — | 1 | — | — | — | 3 |
| மணி | 37 | 28 | — | — | — | — | 10 | 8 | 3 | — | — | — | — | — | 1 | 16 | — | 1 | 1 | — | — | 1 |

2.3.3. பட்டியல் 3: -ஆன்

| | வினைமுற்று | | | | | | | வினையாலணையும் பெயர் | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | இறந்த காலம் | | இறப்பில் காலம் | | | எதிர் மறை | குறிப்பு | இறந்த காலம் | | | இறப்பில் காலம் | | | | | எதிர்மறை | | | குறிப்பு |
| | -இன்- | பிற | -வ்- | -குவ்- | -ப்ப்- | -Ø- | | -இ- | -இன்- | -பிற- | -வ்- | -குவ்- | -ப்- | -கிற்ப்- | -ப்ப்- | -ஆத்- | -அல்- | -Ø- | |
| பதி | — | 3 | — | — | — | 3 | — | — | — | — | — | — | — | — | — | — | — | — | — |
| ஐங் | — | 3 | — | — | — | 8 | — | — | — | — | — | — | — | — | — | — | — | 2 | |
| அகம் | — | — | — | — | — | 15 | 2 | — | — | — | — | — | — | — | — | — | — | 5 | 3 |
| நற் | — | — | — | — | — | 10 | — | — | — | — | 1 | — | — | — | — | — | — | — | — |
| குறு | — | 1 | — | — | — | 7 | 1 | — | — | — | — | — | — | — | — | — | — | 3 | — |
| புறம் | — | 1 | — | — | — | 41 | 3 | 1 | — | 1 | 3 | — | — | — | — | — | — | 2 | — |
| பத்து | — | — | — | — | — | 8 | — | — | — | — | — | — | — | — | — | — | — | — | — |
| பரி | — | 4 | 2 | — | 2 | 3 | — | — | — | 4 | 3 | — | — | — | 2 | — | — | — | 1 |
| கலி | 1 | 20 | 9 | 4 | 2 | 7 | 2 | 1 | — | 53 | 22 | — | 1 | 11 | 1 | 1 | 1 | 27 | 45 |
| குறள் | — | 2 | — | — | — | 9 | 5 | 5 | 1 | 26 | 19 | — | 7 | — | 16 | 18 | — | 8 | 62 |
| சிலம்பு | 4 | 15 | 2 | — | — | 5 | 2 | — | — | 33 | 3 | 3 | 4 | — | 1 | — | — | 7 | 10 |
| மணி | — | 3 | 1 | — | — | 5 | 4 | — | — | 3 | — | 1 | — | — | — | — | — | 10 | 5 |

## 2.3.4. பட்டியல் 4 : -இன்

| | வினை முற்று | | | | | வினையாலணையும் பெயர் | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | இறந்த காலம் | | | | குறிப்பு | இறந்த காலம் | | | இறப்பில் காலம் | | | எதிர்மறை | குறிப்பு |
| | -இ- | -இன்- | இசின் | -ம்- | — | -இ- | -இன்- | -ய்- | -த்- | -(ப்)ப்- | -ம்- | -ஆத்- | — |
| பதி | — | 1 | — | — | 2 | — | 1 | — | — | — | — | — | 1 |
| ஐங் | — | 1 | — | — | — | 3 | 5 | — | — | — | — | 2 | 2 |
| அகம் | — | 7 | 1 | — | — | 1 | 10 | — | 2 | 2 | — | — | 17 |
| நற் | — | 5 | — | — | — | — | 3 | — | — | — | — | 1 | 2 |
| குறு | 1 | 1 | — | — | — | 1 | 1 | — | — | — | — | — | 7 |
| புறம் | 3 | 14 | — | 1 | 5 | 5 | 20 | — | 2 | 1 | 1 | 4 | 46 |
| பத்து | — | 1 | — | — | — | — | 4 | — | — | — | — | — | 15 |
| பரி | — | 4 | — | — | — | — | — | — | 3 | — | — | — | 8 |
| கலி | — | — | — | — | — | — | — | — | — | — | — | 3 | 13 |
| குறள் | — | — | — | — | — | — | — | — | — | — | — | — | — |
| சிலம்பு | — | 2 | — | — | — | — | 55 | 1 | 24 | 5 | — | — | 59 |
| மணி | — | — | — | — | — | — | 38 | — | 42 | 22 | — | — | 37 |

# 3

# பெண்பால்

## 3. பெண்பால் வினைமுற்றுக்கள்

ஆண்பால் பெயர்கள் எழுவாயாக வரும்போது அவற்றின் பயனிலையாக வரும் வினைமுற்றுக்கள் ஆண்பால் காட்டும் நிலையில் ஆண்பால் விகுதிகளைக் கொண்டு நிற்பதைப் போன்று, பெண்பால் பெயர்கள் எழுவாயாக வரும்போது அவற்றின் பயனிலையாக வரும் வினைமுற்றுக்கள் பெண்பால் விகுதிகளைக் கொண்டு நிற்கும். பெண்பால் பெயர்கள் வாக்கியத்தின் எழுவாயாக வரும்போது அவற்றின் தாக்கத்தையும் வினைமுற்றில் காணலாம் இந்நிலையில் வினைமுற்றுக்களும் பல்வேறு பெண்பால் விகுதிகளைக் கொண்டு நிற்கின்றன. வினையாலணையும் பெயர்களும் இந்நிலையிலேயே உள்ளன.

### 3.1.1 பெண்பால் பெயர்களும் பதிலிடு பெயர்களும்

பெண்பால் பெயர்களும் ஆண்பால் பெயர்களைப் போன்று எண், திணை, பால் காட்டுவனவே. இவ்விலக்கணக் கூறுகள் அனைத்தையும் ஒருசேர ஒரே விகுதியால் காட்ட வல்லன. -அள் போன்ற விகுதிகளே இவற்றைக் காட்டும். மட்டுமன்றி முன்னர்க் கூறியது போன்று எந்த விகுதியுமில்லாத பெயர்களே அவற்றைக் காட்டும்.

காமாட்சி, மீனாட்சி, பொன்னம்மாள் போன்ற பெயர்களும் மகள் போன்ற பெயர்களும், வடிவு, பெண், மேரி போன்ற பெயர்களும் திணை, பால் காட்டுவனவே. இவற்றைப் போன்றே பழந் தமிழ் இலக்கியங்களில் காணப்படும் தாய், ஔவை போன்ற பெயர்களெல்லாம் இவ்விலக்கணக் கூறுகளைக் காட்டி நிற்பதை நாம் அறிவோம்.

இவற்றில் காணப்படும் இவ்விலக்கணக் கூறுகள் வினையிலும் காணப்படுகின்றன. வினைமுற்றில் காணப்படும் பலவேறு விகுதி கள் எழுவாயாக வரும் பெயர்களைப் பிரதிபலித்து நிற்பனவே.

### 3.1.1.1 பெண்பால் பெயர்கள்

"அன்னை வினவினள் ..... —" அகம் 358-10
"யாய் ஆகியளே விழவு முதலாட்டி" குறு 10-1
"இன்னள் ஆயினள் நன்னுதல்" குறு 98-1

### 3.1.1.2 பதிலிடு பெயர்கள்

பெண்பால் பதிலிடுபெயர்கள் எண், திணை, பால் ஆகிய இலக்கணக்கூறுகளையும் ஒருங்கே காட்டி நிற்பன. இவற்றில் காணப்படும் -அள் போன்ற விகுதிகள் திணை, பாலுடன் எண்ணையும் சுட்டி நிற்பன. பண்டைத்தமிழில் பதிலிடு பெயர் களாக அவள், இவள், உவள் என்று மூன்று பதிலிடு பெயர்கள் காணப்படுகின்றன. தொல்காப்பிரும்

"அவள் இவள் உவளென வருஉம் பெயரும்"

எனக் கூறி நிற்பார்.

பழந்தமிழ் இலக்கியங்களில் இம்மூன்று பெயர்களும் காணக் கிடக்கின்றன. இவள் என்ற பெயர் எல்லா இலக்கியங்களிலும் காணப்படுவதும். ஆனால் அவள் என்பதோ பதிற்றுப்பத்து, பத்துப்பாட்டு ஆகியவை தவிர பிற இலக்கியங்களில் மட்டுமே காணப்படுகின்றன என்பதும் குறிப்பிடத்தக்கன. உவள் என்ற சொல்லோ இவ்விலக்கியங்களில் ஒரே ஒரு இடத்தில் மட்டும்தான் வந்துள்ளது. பரிபாடலில்

".... காமன் படை யுவள் கண் காண்மின்" பரி 1-123

என வருவது காணத்தக்கது.

அவள் போன்ற பதிலிடு பெயர்களும் எழுவாயாக வர அவற் றைப் பிரதிபலித்துப் பலவேறு பெண்பால் விகுதிகள் வினைச் சொல்லில் வருதல் காணலாம்,

"புரைய ரல்லோர் வரையல ளிவளென" புறம் 343-12
"ஒன்றுமணஞ் செய்தனள் இவளெனின்" குறு 347-5
"அவளும் ஒல்லாள் ......" நற் 159-8
"சிறுமையள் இவளுந் தேம்பும்" பத்து 8-26

இத்தகைய பெயர்கள் மறைந்து நிற்கும் நிலையிலும் இவ் விகுதிகளைக் காணலாம்.

"நின்னோ டாடின டண்புன லதுவே" ஐங் 75-4
"ஒல்வாள் அல்லளென் றவரிகழ்ந்தனரே" ஐங் 43 2

பதிலிடுபெயரில் அவள், இவள் என வேற்றுமை இருந்த போதிலும் இவ்வேற்றுமை (சேய்மை, அண்மை) வினை விகுதி களில் பிரதிபலிப்பதில்லை என்பது நினைவுகூரத்தக்கது.

சுட்டல்லாப் பதிலிடுபெயராகிய தான் என்பதும் பெண்பால் விகுதிகளை ஏற்று வருவதைப் பழந்தமிழ் இலக்கியங்களில் காண்கிறோம்.

"........ தானஃது
அறிந்தனள் கொல்லோ" நற் 53 1
" தானறி யலளே" குறு 337-5
"கண்ணின் துனித்தே கலங்கினாள் புல்லுதல்
என்னினும் தான்விதுப் புற்று" குறள் 1290
"தான்நோக்கி மெல்ல நகும்" குறள் 1094

### 3.1.2 பெண்பால் விகுதிகளும் தொல்காப்பியமும்

பழந்தமிழில் அள், ஆள், ஒள், Ø, (உம்), இ ஆகிய விகுதிகள் பெண்பால் காட்டும் விகுதிகளாக உள்ளன இவ்விகுதி கள் ஆண்பால் விகுதிகளிலிருந்து ஒரு ஒலியனில் வேறுபடுகின் றனவே அன்றி ஆண்பால் விகுதிகளின் பண்புகள் அனைத்தையும் கொண்டிருக்கின்றன.

பெண்பால் ஒருமை விகுதி பற்றிப் பேசவந்த தொல்காப்பியர் (சூத். 690) அள், ஆள் என்னும் இரண்டு விகுதிகளைப் பற்றிக் குறிப்பிடுவார். இந்நூற்பாவில் பிற பெண்பால் விகுதிகள் பற்றி எதுவும் கூறவில்லை. எனினும் 696 ஆம் சூத்திரம் (ஆ. ஓ ஆகும்) -ஒள் விகுதி பற்றிக் குறிப்பிடுகிறது எனக் கருதுவர் உரையாசிரியர்கள். இதற்கு உரை கண்ட இளம்பூரணர் (சூத். 208) "நகூஉப் பெயர்ந்தாள்" என்பது 'நகூஉப்பெயர்ந்தோள்' (அகம்248) என மாறி வந்தது எனக் கூறிச் செல்வார். இதே கருத்தினைத் தான் சேனாவரையர் (211), நச்சினார்க்கினியர் (213), தெய்வச் சிலையார் (205), கல்லாடனார் (214) ஆகிய உரையாசிரியர்களும் கூறி, இளம்பூரணர் தந்த உதாரணத்தையே தந்து நிற்கின்றனர்.

உம் விகுதி பற்றிப் பேசவந்த தொல்காப்பியர் (சூத். 712) இவ்விகுதி படர்க்கைக்குப் (பல்லோர் படர்க்கை நீங்கலாக) பொதுவான ஒரு விகுதி என்பதை மறைமுகமாகக் காட்டிச் செல் கிறார். இந்தச் சூத்திரத்திற்கு உரை கண்ட உரையாசிரியர்களான இளம்பூரணார் (சூத். 222) தெய்வச்சிலையார் (சூத்.221) கல்லாடனார் (சூத். 229) ஆகியோர் தொல்காப்பியர் கருத்தினையே மனதில் கொண்டு, ஒரே வகையான உதாரணங்களையே தந்து செல்கின் றனர்.

-இ விகுதி பற்றித் தொல்காப்பியர் எதுவும் கூற வில்லை.

### 3.1.3 தொல்காப்பியப் பயிற்சி

தொல்காப்பியத்தில் அள், ஆள், ஓள், ∅ ஆகிய விகுதிகள் காணக்கிடக்கின்றன.

-அள்

1. -அன்-சாரியைக்குப் பின்னரும்
2. குறிப்பு வினையடிகளுக்குப் பின்னரும்
3. வினையாலணையும் பெயர் விகுதி -அவ்-வுக்குப் பின்னரும்

வரும்.

| | | | |
|---|---|---|---|
| உயங்குவனள் | பொ 144-32 | உரியள் | பொ 156-3 |
| அறிவினள் | பொ 115 -1 | பட்டவள் | பொ 229-1 |
| இவள் | பொ 203 -2 | | |

-ஆள்

1. -∅-எதிர்மறைக்குப் பின்னரும்
2. இறப்பில்கால இடைநிலைகளுக்குப் பின்னரும்

வரும்.

| | | | |
|---|---|---|---|
| பெறாள் | பொ 126 -2 | படுவாள் | பொ 122-2 |

-ஓள்

1. வினையாலணையும் பெயர் காட்டும் விகுதி -∅-க்குப் பின்னர் வரும்.

| | | | |
|---|---|---|---|
| உற்றோள் | பொ 118-20 | மிகுத்தோள் | பொ 144-35 |
| அளிந்தோன் | பொ 148-6 | மனையோள் | பொ 149-1 |

-Ø

1. இறப்பில் காலம் காட்டும் -உம் முக்குப் பின்னர் வரும்.

பொலிம் பொ 124-1

### 3.1.4 பெரும்பான்மை விகுதி

முன்னர்க் குறிப்பிட்டது போன்று பழந்தமிழ் இலக்கியங்களில் -அள், -ஆள், -ஓள், -Ø, -இ ஆகிய விகுதிகள் பெண்பால் ஒருமையைக் காட்டுவனவாக உள்ளன. இந்த ஐந்து விகுதிகளுள் -அள், -ஆள், -ஓள் ஆகியவை வினைமுற்றுக்களிலும், வினையாலணையும் பெயர்களிலும் வர -Ø, -இ ஆகிய இரு விகுதிகளும் முறையே வினைமுற்றுக்களிலும், வினையாலணையும் பெயர்களிலும் மட்டுமே வரக் காண்கிறோம்.

பழந்தமிழ் இலக்கியங்கள் அனைத்தையும் இணைத்து நோக்கின் அள் விகுதியே பிற விகுதிகளைவிட அதிகமாக வருகின்றது என்பதும், இந்நிலையில் இதனைப் பழந்தமிழ்க் கூறுகளில் ஒன்றாகக் கருதலாம் என்பதும் குறிப்பிடத்தக்க செய்திகளாகும்.

| -அள் | -ஆள் | -ஓள் | -Ø | -இ |
|---|---|---|---|---|
| 763 | 517 | 242 | 115 | 80 |

அள் விகுதியைப் போன்றே இவ்விலக்கியங்களில் அன் விகுதியும் பிற ஆண்பால் மாற்றுருபுகளைவிட அதிகமாக வருவது நினைவுகூரத்தக்கது. ஆனால் சங்ககால இலக்கியங்கள் ஒவ்வொன்றையும் தனித்தனியே வைத்து ஆராயும் பொழுது முன் பழந்தமிழ் நூல்களில் அள் விகுதியும், பின்பழந்தமிழ் நூல்களில் (மணிமேகலை நீங்கலாக) ஆள் விகுதியும் பெருவரவிற்றாக வருவது குறிப்பிடத்தக்கது. இந்நிலையே இடைக்காலத் தமிழிலும் தொடர்ந்து வர, தற்காலத்தமிழில், ஆள் விகுதி ஒன்றே பெண்பால் விகுதி என்ற நிலைபேற்றினை அடைந்து நிற்கக் காண்கிறோம்.

பழந்தமிழ் இலக்கியங்கள் அனைத்தையும் எடுத்து நோக்கின் பரிபாடல், கலித்தொகை, குறள், சிலம்பு, மணிமேகலை ஆகியவை நீங்கலாக மற்ற இலக்கியங்கள் அனைத்திலும் ஆள் விகுதியை விட ஓள் விகுதியே அதிகமாக வருகின்றது. எடுத்துக்காட்டாகப் புறநானூற்றில் -ஆள் பதினான்கு இடங்களில் வர, ஓள் விகுதியோ

இருபத்து மூன்று இடங்களில் வந்துள்ளது. ஐங்குறுநூற்றில் ஐந்து இடங்களில் மட்டுமே ஆள் விகுதி வர, ஒள் விகுதியோ நாற் பத்தைந்து இடங்களில் வந்துள்ளது. திருக்குறளில் ஒள் விகுதியே பயன்படுத்தப்படாதது குறிப்பிடத்தக்கதாகும். ஆண்பால் மாற்உரு புகளை நோக்கும் பொழுது சிலம்பிலும். மணிமேகலையிலும் கூட ஆன் விகுதியைவிட ஓன் விகுதி அதிகமாக வருவது இங்கு நினைவுகூரத்தக்கது ஆனால் பெண்பால் மாற்றுருபுகளைப் பொறுத்த மட்டில், பின்பழந்தமிழ் நூல்களில் ஓள் விகுதி ஆள் விகுதியைவிடக் குறைவாகவே காணப்படுகின்றது. இதே நிலை இடைக்காலத்தமிழிலும் கூடத் தொடர்ந்து வருகின்றது எனலாம். ஓன், ஓள், ஓர் ஆகிய விகுதிகள் இடைக்காலத் தமிழில் எண்ணிக்கைகளில் மிகக் குறைந்து வரும் நிலையைக் காணலாம். எனவே ஓன், ஓள், ஓர் ஆகிய விகுதிகளையும் பழந் தமிழ்க்கூறுகளில் ஒன்றாகக் கருதுவது பொருந்தும் என எண்ண லாம்.

பழந்தமிழில் அள் விகுதியே அதிகமாக வரினும், இடைக்காலத் தமிழில் ஆள் விகுதியே பெருவரவிற்றாகிப் பின்னர்த் தற்காலத் தமிழில் அதுவே நிலைபெற்ற விகுதியாக அமைந்து விட்டதை முன்னரே குறிப்பிட்டோம். இன்று ஆள் விகுதி ஒன்றே பெண்பால் ஒருமை காட்டும் விகுதியாக முற்றுவினையைப் பொறுத்தமட்டில் உள்ளது என்பது குறிப்பிடத்தக்கதாகும். வந்தவள், சென்றவள் போன்று அள் விகுதி வினையாலணையும் பெயர்களில் மட்டும் வருவது குறிப்பிடத்தக்கது.

இவ்விகுதியே பழந்தமிழ் நூல்களில் அதிகமாக உள்ளது. பரிபாடல், கலித்தொகை, குறள், சிலம்பு ஆகியவற்றில் ஆள் விகுதியே பெருவரவிற்றாக வரினும் ஏனைய இலக்கியங்களில் அள் விகுதியே அதிகமாகக் காணப்படுகின்றது. இந்நிலையில் மூன் பழந்தமிழ் நூல்களுக்கும், பின்பழந்தமிழ் நூல்களுக்குமிடையே உள்ள வேற்றுமை புலனாகும்.

| | -அள் | -ஆள் |
|---|---|---|
| பதி | 8 | 1 |
| ஐங் | 73 | 5 |
| அகம் | 159 | 39 |

| | | |
|---|---|---|
| நற் | 97 | 22 |
| குறு | 7ʋ | 9 |
| புறம் | 38 | 14 |
| பத்து | 5 | 2 |
| பரி | 15 | 39 |
| கலி | 96 | 142 |
| குறள் | 14 | 39 |
| சிலம்பு | 90 | 144 |
| மணி | 98 | 61 |

## 3.2 விகுதிகள்

### 3.2.1 -அள்

#### 3.2.1.1 உரையாசிரியர்கள்

அள் விகுதிக்கான எடுத்துக்காட்டுக்களைக் காட்டிச்செல்லும் இளம்பூரணர் (சூத். 6, 202, 210)

உண்டனள் பொன்னன்னள் உள்ள்
உண்ணா நிலத்தள் வல்லள்
நின்றனள் கரியள் நல்லள்
உண்குவள் அல்லள் தீயள்
உடையள்
இல்லள்

போன்றவற்றையும், சேனாவரையர் (சூத். 6,205, 214, 215)

உண்டனள் இலள் தீயள்
உண்ணா உளள் உடையள்
நின்றனள் வல்லள் கரியள்
உண்பள் நல்லள்
அல்லள்

போன்றவற்றையும், நச்சினார்க்கினியர் (சூத். 6,207, 216, 217)

உண்டனள் உண்பள் உளள்
உண்டிலள் உண்குவள் வல்லள்
உண்ணா உண்ணலள் நல்லள்
நின்றனள்
தீயள்

| | | |
|---|---|---|
| உண்கின்றனள் | அல்லள் | உடையன் |
| உண்கின்றிலள் | இல்லள் | கரியள் |

போன்றவற்றையும், தெய்வச்சிலையார் (சூத். 6,198, 208)

| | | |
|---|---|---|
| உண்டனள் | உண்பள் | அவள் |
| உண்கின்றனள் | உடையள் | கரியள் |
| | | குறியள் |

போன்றவற்றையும், கல்லாடனார் (சூத். 208, 217)

| | | |
|---|---|---|
| உண்டனள் | உண்கின்றிலள் | பொன்னன்னள் |
| உண்டிலள் | உண்பள் | கரியள் |
| உண்ணா | உண்குவள் | அல்லள் |
| நின்றனள் | உண்ணலள் | உடையள் |
| உண்கின்றனள் | நிலத்தள் | |
| உண்ணா | | |
| நின்றிலள் | | |

போன்றவற்றையும் தந்து செல்வர்.

இவர்கள் தருகின்றவற்றுள் (நச்., தெய்., கல்.,) உண்கின்றிலள் (நச்.,கல்.,) போன்றவை எந்தப் பழந்தமிழ் இலக்கியங்களிலும் காணப்படவில்லை. இவ்வாறு பழந்தமிழ் இலக்கியங்களில் காண முடியாதவைகளை எடுத்துக்காட்டுக்களாகத் தந்து செல்லும் உரையாசிரியர்கள் அவ்விலக்கியங்களில் காணப்படுகின்ற பாடினள் (புறம் 1.1-4), ஆகியள் (குறு 9-1), மேவந்தவள் (புறம் 344-9), வருவனள் (நற் 339-6), அமர்ப்பனள் (நற் 305-8), உண்பவள் (கலி 73-3), வாங்குநள் (குறு 219-2) போன்ற எதையும் தராமலேயே சென்றுள்ளனர்.

### 3.2.1.2 சூழல்கள்

இவ்விகுதி பழந்தமிழ் நூல்களில்

1. -அன்- சாரியைக்குப் பின்னரும்
2. இறந்தகால இடைநிலைகளாகிய -இன்-, -இ- ஆகியவற்றிற்குப் பின்னரும்
3. நிகழ்கால இடைநிலை -ஆநின்று- க்குப் பின்னரும்

4. இறப்பில்கால இடைநிலைகளுக்குப் பின்னரும்
5. –அல்- எதிர்மறை இடைநிலைக்குப் பின்னரும்
6. இறந்தகால எச்சங்கட்குப் பின்னர் வரும் –இல்- எதிர் மறை இடைநிலைக்குப் பின்னரும்
7. குறிப்பு வினையடிகளுக்குப் பின்னரும்
8. வினையாலணையும் பெயர் காட்டும் ஒட்டுக்களுக்கு (–∅-, -அவ்-, (–உ)ந்-) பின்னரும்

வரும்.

### 3.2.1.2.1 -அன்- சாரியைக்குப் பின்னர்

இவ்விகுதி பல்வேறு சூழல்களில் காணப்படும் -அன்- சாரியைக்குப் பின்னர் வினைமுற்று வடிவங்களில் காணப்படுவது குறிப்பிடத்தக்கதாகும். இச்சூழலே இவ்விகுதிக்குரிய சூழல் எனக் கூறலாம். பிற சூழல்களிலும் இது காணப்படினும் இச்சூழலிலேயே இது பெருவரவிற்றாக உள்ளமை குறிப்பிடத்தக்கது. இந்த -அன்- சாரியையும் பல்வேறு இறந்தகால இடைநிலைகளை ஒட்டிவர, அதன் பின்னர் இவ்விகுதி வருதலே மிகப் பெருவழக்கு. ஆண்பால் ஒருமை விகுதியாகிய -அன்-னும் இச்சூழலிலேயே அதிகமாகப் பயின்று வருவது இங்கு நினைவுகூரத்தக்கது.

| | | |
|---|---|---|
| வந்தனள் | வந்துவிட்டாள் | ஐங் 393-4 |
| மறந்தனள் | மறந்துவிட்டனள் | அகம்252-14 |
| வந்தனள் | வந்தனள் | நற் 352-12 |
| என்றனள் | என்றாள் | குறு 84-1 |
| அழுதனன் | அழுதாள் | புறம் 143-15 |
| கண்டனள் | கண்டாள் | பரி 18-8 |
| புலத்தக்கனள் | புலத்தற்கமைந்தாள் | குறள் 1316 |
| பெற்றனள் | பெற்றாள் | சிலம்பு 3-163 |
| அடைந்தனள் | புகுந்தனள் | மணி 22-179 |

### 3.2.1.2.2 இறந்தகால-இன்-, -இ- இடைநிலைகளுக்குப் பின்னர்

| | | |
|---|---|---|
| இயலினள் | நடந்தாள் | பதி 51-10 |
| ஆடினள் | விளையாட்டயர்ந்தாள் | ஐங் 75-4 |
| வினவினள் | கேட்டனள் | அகம் 358-10 |
| வினவினள் | வினவினள் | நற் 55-7 |
| ஆயினள் | எய்தினள் | குறு 98-1 |

| | | |
|---|---|---|
| பாடினள் | பாடினள் | புறம் 111-4 |
| முயங்கினள் | தழுவிக்கொண்டாள் | கலி 82-17 |
| தோன்றினள் | தோற்றினள் | சிலம்பு 22-157 |
| அரற்றினள் | அரற்றினள் | மணி 8-37 |

குறுந்தொகையில் வினைமுற்றில் இறந்தகால இடைநிலையாக -இ- பயின்று வந்துள்ளமை நோக்கத்தக்கது.

### 3.2.1.2.3 நிகழ்கால இடைநிலை -ஆநின்று- க்குப் பின்னர்

இச்சூழலில் -அன்- சாரியையை அடுத்து ஐங்குறுநூற்றில் ஒரு இடத்தில் இவ்விகுதி காணப்படுகிறது.

| | | |
|---|---|---|
| வாராநின்றனள் | வருகின்றனள் | ஐங் 497-3 |

### 3.2.1.2.4 இறப்பில் கால இடைநிலைகளுக்குப் பின்னர்

| | | |
|---|---|---|
| இனைகுவள் | வருந்தியழுவாள் | ஐங் 306-3 |
| என்பள் | ஆராவாரஞ்செய் யாநிற்பள் | ஐங் 272-5 |
| உவக்குவள் | மகிழ்வள் | அகம் 144-11 |
| அறிகுவள் | அறிவாள் | நற் 317-6 |
| ஆகுவள் | எய்துவள் | குறு 159-5 |
| புகுவள் | செல்கின்றாள் | புறம் 293-5 |
| செல்குவள் | செல்கின்றாள் | பரி 19-164 |
| கலங்குவள் | கலங்குவள் | கலி 27-24 |

தணிகுவள் (அகம் 22-6), பெறுகுவள் (நற் 351-9), வருகுவள் (குறு 113-6), செல்குவள் (பரி 19-64) போன்ற சொற்களில் ககரவொற்று காணப்படுவது குறிப்பிடத்தக்கதாகும். அதாவது தணிவள், பெறுவள், வருவள், செல்வள் என வரவேண்டியவை தணிகுவள், பெறுகுவள், வருகுவள், செல்குவள் எனக் ககரவெற்று பெற்று நிற்கின்றன. இந்நிலையில் சில வல்வினைஅடிகள் இக் ககர ஒற்றின் மூலம் மெல்வினையடிகளைப் போன்று மாற்றப் படுவதும் இங்கு உணரத்தக்கதாகும். எடுத்துக்காட்டாக உவப்டன், என்பள் போன்ற வல்வினை அடிகள் உவக்குவள் (அகம் 144-11), என்குவள் (நற் 6-6) என வகரம் பெற்று நிற்கின்றன. இதே நிலை ஆண்பால் விகுதியாகிய அன் இறப்பில்கால இடைநிலை

களுக்குப் பின்னர் வரும்பொழுது காணப்படுவது நினைவு கூரத்தக்கது.

தொல்காப்பியத்திலும் உயங்குவனள் (பொருள் 144-32) என வருவது காண்க.

### 3.2.1.2.5 -அல்- எதிர்மறைக்குப் பின்னர்

பழந்தமிழ் நூல்கள் அனைத்தையும் நோக்கும்போது ஏழு இடங்களில் மட்டுமே இச்சூழலில் அள் விகுதி வந்துள்ளது. பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு, பத்துப்பாட்டு, பரிபாடல், கலித்தொகை, குறள், சிலம்பு, மணிமேகலை ஆகிய நூல்களில் காணப்பெறவில்லை. கலித்தொகையில் ஓரிடத்தில் வினையாலணையும் பெயரில் வரும் சூழலை இங்குக் குறிப்பிடுதல் வேண்டும்.

| | | |
|---|---|---|
| பிழையலள் | (உயிர்) உய்ந்திராள் | அகம் 5-28 |
| வாழலள் | (உயிர்) வாழ்ந்திராள் | அகம். 12-14 |
| அழியலன் | நெகிழ்வாள் அல்லள் | நற் 188-9 |
| தேறலள் | அறிந்து கொண்டனள் அல்லள் | நற் 188-9 |
| அறியலன் | அறிந்தாளிலள் | குறு 337-5 |
| வரையலள் | மணந்து கொள்ளாள் | புறம் 343-12 |

இத்தகைய எடுத்துக்காட்டுக்களை நச்சினார்க்கினியரும் அவரை ஒட்டிக் கல்லாடரும் தருதல் காணத்தக்கது.

### 3.2.1.2.6 இறந்தகால எச்சங்களுக்குப் பின்னர் வரும் எதிர்மறை -இல்-லுக்குப் பின்னர்

இறந்தகால எதிர்மறையைக் குறிக்க இறந்தகால எச்சத்தை அடுத்து -இல்- இரண்டு இடங்களில் மட்டுமே வருகின்றது.

| | | |
|---|---|---|
| மெலிந்திலள் | நெகிழ்ந்தாளில்லை | குறு 182-7 |
| நின்றிலள் | நில்லாள் | சிலம்பு 9-2 |

முன்னர்க் குறிப்பிட்டது போன்று நச்சினார்க்கினியரும், கல்லாடரும் இவ்வகை எடுத்துக்காட்டுக்களைத் தந்து நிற்பர்.

### 3.2.1.2.7 குறிப்பு வினையடிகளுக்குப் பின்னர்

| | | |
|---|---|---|
| அல்லள் | அல்லள் | பதி 3-2 |
| அழிவுஇலள் | உயிர்த்திருப்பாள் | ஐங் 368-5 |

| | | |
|---|---|---|
| இலள் | இலள் | அகம் 118-14 |
| கூந்தலள் | கூந்தலுடையாள் | நற் 198-8 |
| அல்லள் | அல்லள் | குறு 43-2 |
| அல்லள் | அல்லள் | புறம் 346-2 |
| கையள் | கையை உடையள் | பத்து 5-14 |
| உவகையள் | உவகையினை உடையள் | பரி 7-18 |
| அல்லள் | அல்லள் | கலி 79-10 |
| வாழ்தல்அன்னள் | வாழ்தல் போலும் | குறள் 1124 |
| உளள் | உளள் | சிலம்பு 18-7 |
| அல்லள் | அல்லள் | மணி 2-49 |

3.2.1.2.8 வினையாலணையும் பெயர் விகுதிகளுக்குப் (-∅-, -அள்-, -(உ) ந்-) பின்னர்

| | | |
|---|---|---|
| உடன்றனள்ஆகி | ஊடலுற்றவளாய் | பதி 52-16 |
| அமர்த்தனள் | மாறுபட்டவள் | அகம் 390-13 |
| அழுதனள் | அழுதனளாகி | நற் 81-7 |
| செற்றனள் | கறுவுகொண்டவள் | சிலம்பு 20-41 |
| அழுதனள் | அழுதவள் | மணி 8-37 |
| ஒல்கினள் | அசையும் சாலினி | பதி 51-10 |
| அசையினள் | இளைப்பாறி யிருந்தோள் | அகம் 280-4 |
| அமரியள் | விரும்பினவள் | புறம் 339--12 |
| உயங்கினள் | வருந்தினள் | கலி 135-19 |
| தேடினள் | தேடுவாள் | சிலம்பு 25-85 |
| எய்தினள் | புகுந்தவள் | மணி 27-4 |
| மேவந்தவள் | விரும்பும் இளையவள் | புறம் 344-9 |
| நின்றவள் | நின்றவள் | பரி 7 -57 |
| துனிப்பவள் | ஊடுவாள் | பரி 21-22 |
| துறந்தவள் | துறக்கப்பட்டவள் | கலி 19-8 |
| உண்பவள் | உண்பவள் | கலி 73-4 |
| ஒல்குவனள் | தளர்ந்தனளாய் | அகம் 158-5 |
| வீங்குவனள் | விம்மி அழுபவள் | நற் 179-6 |
| அமர்ப்பனள் | போர் செய்பவள் | நற் 305-8 |

| | | |
|---|---|---|
| வருவனள் | வந்தவள் | நற் 339-6 |
| ஓர்ப்பனள் | கருதியவள் | பத்து 5-88 |
| நினைவனள் | நினைத்தவள் | பத்து 7-163 |
| நினைவனள் | நினைத்தவள் | கலி 44-18 |
| அறிகுநள் | அறிபவள் | பதி 11-3 |
| என்னுநள் | கூறுவாள் | அகம் 5-18 |
| உருட்டுநள் | உருட்டுபவள் | நற் 3247 |
| ஓரிவாங்குநள் | மயிரைப்பற்றி வளைப்பவள் | குறு 229-2 |
| புடைநள் | புடைத்து நீக்குவாள் | புறம் 326-4 |
| நினையுநள் | நினைத்தவள் | கலி 126-14 |
| வாழ்குவள் | உயிர்வாழ்வாள் | அகம் 18-10 |
| ஆற்றுவள் | ஆற்றுவள் | கலி 28 1 |
| துயிலலள் | துயில்கொள்ளுதல் இலள் | கலி 45-18 |
| கையள் | கையினைஉடையள் | ஐங் 259-4 |
| மதுகையள் | வலியுடையள் | அகம் 245-3 |
| கண்ணள் | கண்களையுடையள் | நற் 120-6 |
| அரியள் | அரியள் | குறு 120-6 |
| சுவையினள் | சுவை காண்பவள் | புறம் 371-22 |
| கண்ணள் | கண்ணையுடையவள் | கலி 57-23 |
| உடையள் | உடையள் | குறல் 51 |
| காப்பினள் | காவலையுடையவள் | சிலம்பு 14-23 |
| சிந்தையள் | நெஞ்சத்தை யுடையவள் | மணி 24-81 |

-அன்- சாரியை பொதுவாக இறந்தகால இடைநிலைகளுக்குப் பின்னரே பெருவரவிற்றாக வருவது வழக்கு. இருப்பினும் அகநானூறு, நற்றிணை, பத்துப்பாட்டு, கலித்தொகை ஆகிய நூல்களில் இச்சாரியை இறப்பில்கால இடைநிலைகளுக்குப் பின்னர் வருவது இங்குக் குறிப்பிடத்தக்காகும்.

### 2.2.2 -ஆள்

பழந்தமிழ் நூல்களில் காணப்படும் ஆண்பால் விகுதிகளில் ஆன் எவ்வாறு வரலாற்று அடிப்படையில் முக்கியமானதோ அது போன்றே பெண்பால் விகுதிகளில் -ஆள் வரலாற்று அடிப்படையில்

முக்கியமானதாகும் முன்பழந்தமிழில் -ஒள், ஆள் ஆகிய விகுதிகளில் -ஆள் பிறவற்றைவிட குறைவாகவே வரினும் பின்பழந்தமிழில் இந்நிலை மாறிவிடுதல் இங்குக் குறிப்பிடத்தக்கது. முன்பழந்தமிழ் நூல்களில் -ஒள் இதைவிட அதிகமாக வருவதும், பின்பழந்தமிழில் குறைந்து காலம் செல்லச் செல்ல -ஒள் வழக்கற்று விடுவதும் உணரற்பாலன. பழந்தமிழ் இலக்கியங்களில் -ஒள் பெருவழக்கிற்றாய் இருப்பினும், தொல்காப்பியம் -ஆள் உருபிலிருந்துதான் -ஒள் உருபு உருவாயிற்று எனக் கூறுவதும் இங்கு நினைவுகூரத்தக்கது.

அள், ஆள் ஆகிய இரு விகுதிகளும் அன், ஆன் ஆகிய ஆண்பால் விகுதிகளைப் போன்றே துணைநிலை வழக்கிலும் பதில் நிலை வழக்கிலும் வரும் தன்மையன.

-அள் இறந்த கால இடைநிலைகளை ஒட்டிவரும்-அன்-சாரியைக்குப் பின்னர் பெரும்பாலும் வர ஆள் விகுதியோ எதிர்மறை காட்டும் -∅-ஐ அடுத்து வருதலே பெரும்பான்மையாக உள்ளது. இந்நிலையை முன்பழந்தமிழ் நூல்களில் மிகத் தெளிவாகக் காணலாம். ஆனால் பின்பழந்தமிழ் நூல்களாகிய பரிபாடல், கலித்தொகை குறள், சிலம்பு, மணிமேகலை ஆகிய நூல்களில் ஆள் விகுதி கால இடைநிலைக்குப் பின்னர் பெருவரவிற்றாக வருவது கவனிக்கத் தக்கது. இவற்றையும் முறையே முன்பழந்தமிழ், பின் பழந்தமிழ் ஆகியவற்றின் கூறாகக் கருதலாம்.

பழந்தமிழ் நூல்களில் பல்வேறு கால இடைநிலைகளுக்குப் பின்வரும் ஆள் விகுதியைக் காட்டிலும் எதிர்மறை இடைநிலைகளுக்குப் பின்னர் வரும் ஆள் விகுதியே அதிகமாக வந்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். ஆனால் பின்பழந்தமிழ் நூல்களாகிய பரிபாடல், கலித்தொகை, குறள், சிலம்பு, மணிமேகலை ஆகிய நூல்களில் இந்நிலை மாறியுள்ளது. பின்பழந்தமிழின் சிறப்புத் தன்மையாக இம்மாற்றத்தினைக் கருதலாம். தன்மை ஒருமையில் வரும் ஏன் விகுதியும், முன்னிலை ஒருமையில் வரும் ஆய் விகுதியும், ஆண்பால் ஒருமையாக வரும் ஆன் விகுதியும் இத்தன்மை கொண்டவையே. பரிபாடலும், கலித்தொகையும் பின்பழந்தமிழ் நூல்கள் எனக் கருதப்படவேண்டும் என்ற எண்ணத்திற்கு ஆள் விகுதியின் ஆட்சியும் உரமிடுவதாகவே அமைகின்றது.

-ஆன்

| | எதிர்மறை | கால இடை நிலைகள் |
|---|---|---|
| பதி | 1 | — |
| ஐங் | 4 | 1 |
| அகம் | 38 | — |
| நற் | 19 | 1 |
| குறு | 7 | 2 |
| புறம் | 14 | – |
| பத்து | 2 | — |
| பரி | 6 | 24 |
| கலி | 18 | 86 |
| குறள் | 3 | 17 |
| சிலம்பு | 19 | 89 |
| மணி | 10 | 12 |

| | -அள் | | -ஆள் | |
|---|---|---|---|---|
| | கால இடைநிலை | எதிர்மறை | காலஇடைநிலை | எதிர்மறை |
| பதி | 5 | — | — | 1 |
| ஐங் | 38 | — | 1 | 4 |
| அகம் | 77 | 2 | — | 38 |
| நற் | 61 | 2 | 1 | 19 |
| குறு | 22 | 2 | 2 | 7 |
| புறம் | 13 | 1 | — | 14 |
| பத்து | 2 | — | — | 2 |
| பரி | 11 | — | 24 | 6 |
| கலி | 54 | 1 | 86 | 18 |
| குறள் | 4 | — | 17 | 3 |
| சிலம்பு | 58 | 1 | 89 | 19 |
| மணி | 58 | — | 12 | 10 |

### 3.2.2.1 உரையாசிரியர்கள்

அன் விகுதிக்கான எடுத்துக்காட்டுக்களை காட்டிச் செல்லு கின்ற இளம்பூரணர் (சூத். 6,202)

உண்டாள் உண்பாள்

உண்ணா நின்றாள்

போன்றவற்றையும், சேனாவரையர் (சூத். 6,205, 215)

உண்டாள் உண்பாள்

உண்ணாநின்றாள் கரியாள்

போன்றவற்றையும், நச்சினார்க்கினியர் (சூத். 6,207, 217)

| | | |
|---|---|---|
| உண்டாள் | உண்ணாநின்றிலாள் | உண்ணாள் |
| உண்டிலாள் | உண்கின்றிலாள் | கரியாள் |
| உண்பாள் | உண்ணாநின்றாள் | உண்கின்றாள் |
| உண்குவாள் | | |

போன்றவற்றையும், தெய்வச்சிலையார் (சூத். 6,19,208)

| | |
|---|---|
| உண்டாள் | உண்பாள் |
| உண்கின்றாள் | உண்ணாள் |
| திருவினாள் | உண்ணாநின்றாள் |

போன்றவற்றையும், கல்லாடனார் (சூத். 6,208, 217)

| | | |
|---|---|---|
| உண்டாள் | உண்கின்றலாள் • | நிலத்தால் |
| உண்டிலாள் | உண்பாள் | பொன்னன்னாள் |
| உண்ணா | உண்குவாள் | கரியாள் |
| நின்றாள் | உண்ணாள் | அல்லாள் |
| உண்கின்றாள் | உடையாள் | |
| உண்ணா | | |
| நின்றிலாள் | | |

ஆகியவற்றையும் எடுத்துக்காட்டுக்களாகக் காட்டிச் செல்லுவர். ஆனால் இந்த எடுத்துக்காட்டுகளுள் காணப்படுகின்ற உண்ணா நின்றாள் (இளம்., சேனா., நச்., கல்.) உண்கின்றாள் (நச்., தெய்., கல்.), உண்டிலாள் (நச்., கல்.) உண்ணாநின்றிலாள் (நச்.. கல்.) ஆகியவை எந்தப் பழந்தமிழ் இலக்கியங்களிலும் காணப்பட வில்லை. பொதுவாக உரையாசிரியர்கள் எல்லாவற்றிக்கும் உதாரணம் கொடுப்பதை ஒரு வழக்கமாகக் கொண்டார் போலும். இவ்வாறு பழந்தமிழ் இலக்கியங்களில் காணமுடியாத வைகளை எடுத்துக்காட்டுக்களாகத் தந்து செல்லும் உரையாசிரி

யர்கள், அவ்விலக்கியங்களில் காணப்படுகின்ற வருந்தினாள் (கலி 29-23), கூர்கிற்பாள் (கலி 10-13), வாழாதாள் (கலி 2-13), உணர் கல்லாள் (கலி 146-6) போன்ற எதையும் எடுத்துக்காட்டுக் களாகத் தராமலே சென்றுள்ளார்.

### 3.2.2.2 சூழல்கள்

இவ்விகுதி

1. இறந்தகால இடைநிலைகளுக்குப் பின்னரும்
2. இறப்பில் கால இடைநிலைகளுக்குப் பின்னரும்
3. -∅- எதிர்மறைக்குப் பின்னரும்
4. குறிப்பு வினையடிகளுக்குப் பின்னரும்
5. வினையாலணையும் பெயர் விகுதி-∅-க்குப் பின்னரும்

வரும்

#### 3.2.2.2.1 இறந்தகால இடைநிலைகளுக்குப் பின்னர்

முன்னரே குறிப்பிட்டபடி-ஆள், எதிர்மறை ஒட்டோடு பெரு வரவில் காணப்படுவதால் முன்பழந்தமிழ் நூல்களில் இறந்தகால இடைநிலைகள் மற்றும் இறப்பில்கால இடைநிலைகளோடு பயின்று வருதலுக்கு எடுத்துக்காட்டுக்கள் அதிகமாக இல்லை. பின்பழந் தமிழ் நூல்களில் பல்வேறு இறந்தகால இடைநிலைகளுக்குப் பின்னர் -ஆள் வருவதும், இறந்தகால இடைநிலைகளை அடுத்து வரும் சாரியைக்குப் பின்னர் -அள் வருவதும் இவற்றிடையே உள்ள துணைநிலை வழக்கைக் காட்டும்.

| | | |
|---|---|---|
| வேலன் தந்தாள் | வேன்மகளை அழைத்து வினவுவாள் | ஐங் 241-2 |
| தொடுத்தாள் | தொடுத்தாள் | பரி 11-104 |
| நோக்கினாள் | நோக்கினாள் | பரி 11-93 |
| அலந்தாள் | அலமந்தாள் | கலி 145-11 |
| உயங்கினாள் | வருந்தினாள் | கலி 143-18 |
| பெற்றாள் | பெற்றாள் | குறள் 1104 |
| ஊடினாள் | புலந்தாள் | குறள் 1314 |
| எழுந்தாள் | எழுந்தாள் | சிலம்பு 18-30 |

| | | |
|---|---|---|
| பாயினாள் | சென்றாள் | சிலம்பு 18-5 |
| ஒளித்தாள் | கரந்தொழிந்தாள் | மணி 18-79 |

### 3.2.2.2.2 இறப்பில்கால இடைநிலைகளுக்குப் பின்னர்

இறப்பில் கால இடைநிலைகளாகிய -வ்-, -ப்ப்- ஆகியவற்றின் பின்னர் இவ்விகுதி காணப்படுகின்றது. எனினும் நற்றிணை, பரி பாடல், கலித்தொகை, சிலம்பு ஆகிய இலக்கியங்கள் நீங்கலாக ஏனைய இலக்கியங்களில் இவ்விகுதி இச்சூழல்களில் காணப்பட வில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

| | | |
|---|---|---|
| செல்வாள் | செல்வாள் | நற் 20·-9 |
| ஒல்கி நுடங்குவாள் | அசைந்து ஆடுவாள் | பரி 21-57 |
| வாழ்வாள் | உயிர்கொண்டு இருப்பாள் | கலி 4-24 |
| ஒளி ஓடற்பாள் | ஒளிகெடுவாள் | கலி 10-9 |
| கூர்கிற்பாள் | நினைவுமிகுவாள் | கலி-10-13 |
| மாழ்குவாள் | மயங்குவாள் | சிலம்பு 18-33 |
| பாட்டு எடுப்பாள் | பாடுகின்றாள் | சிலம்பு 17-185 |

### 3.2.2.2.3 -∅- எதிர்மறைக்குப் பின்னர்

பதிற்றுப்பத்து நீங்கிய பிற பழந்தமிழ் நூல்களில் -∅-எதிர் மறையோடு -ஆள் வருதலைக் காணலாம். பிற சூழல்களில் வருவதிலும் -∅- எதிர்மறையோடு -ஆள் அதிகம் வந்துள்ளமை இச்சூழலே இதற்கு இயற்கையாக அமைந்துள்ளது என்பதைக் காட்டும். ஆண்பால் ஒருமை விகுதியாகிய -ஆன் இச்சூழலிலேயே அதிகமாகப் பயின்றுவருவதும், எனவே இதனையும் முன்பழந்தமிழ் நூல்களின் பண்பாகக் கொள்ளலாம் என்பதும் உணரற்பாலது.

| | | |
|---|---|---|
| காணாள் | காணப்பெறாள் | ஐங் 234-4 |
| உள்ளாள் | நினையாள் | அகம் 17-6 |
| ஆற்றாள் | ஆற்றாள் | நற் 106-6 |
| உண்ணாள் | பருகமாட்டாள் | குறு 396-1 |
| அணியாள் | சூடாள் | புறம் 242-3 |
| ஒல்லாள் | அமையாள் | பத்து 7-156 |
| நாணாள் | நாணுகின்றிலள் | பரி 12-56 |

| | | |
|---|---|---|
| செய்யாள் | செய்யாள் | கலி 115-10 |
| தொழாஅள் | தொழாள் | குறள் 55 |
| காணாள் | காணாள் | சிலம்பு 23-159 |
| வாரான் | வந்திலன் | மணி 1-129 |

பதிற்றுப்பத்தில் -∅-எதிர்மறை வினைமுற்று வடிவத்தில் இல்லை யாயினும் வினையாலணையும் பெயரில் ஒரு இடத்தில் காணப் படுகின்றது.

### 3.2.2.2.4 குறிப்பு வினையடிகளுக்குப் பின்னர்

நற்றிணை, சிலம்பு ஆகிய நூல்களில் இது காணப்படுகின்றது. எனினும் –அள் இச்சூழலில் -ஆள்-, –ஓள் இவற்றைக் காட்டிலும் அதிகமாகக் காணப்படுகின்றது.

| | | |
|---|---|---|
| கொடியாள் | கொடியளாயிரா நின்றாள் | நற் 97-5 |
| இடத்துளாள் | இடப்பக்கத்து உள்ளாள் | சிலம்பு 17-15 3 |

### 3.2.2.2.5 வினையாலணையும்பெயர் விகுதி-∅-க்குப் பின்னர்

வினையாலணையும் பெயர்களில் அள், ஆள், ஓள் ஆகிய விகுதிகள் பழந்தமிழ் நூல்களில் பல இடங்களில் வந்துள்ளன. முன்பழந்தமிழ் நூல்களில் -ஆள் விகுதியைவிட -ஓள் அதிகமாக வரினும் பின்பழந்தமிழ் நூல்களில் நிலைமை மாறி -ஆள் விகுதியே அதிகம் வரக் காண்கிறோம். தன்மை, முன்னிலை ஆகியவற்றிலும் வினையாலணையும் பெயர்கள் வந்தாலும், படர்க்கையிலேயே அவை அதிகம் வரக் காண்கின்றோம்.

| | | |
|---|---|---|
| தேடினாள் | தேடப்பட்ட பரத்தை | பரி 20-66 |
| நோக்கினாள் (மோதிரம்) | நோக்கப்பட்டவள் (மோதிரம்) | குறள் 1082 |
| தொட்டாள் | இட்டவள் | கலி 84-23 |
| ஈன்றாள் | (தன்னைப்) பயந்தாள் | குறள் 656 |
| அழுதாள் | அழாநின்ற மாலதி | சிலம்பு 9-23 |

| | | |
|---|---|---|
| செய்தாள் | செய்துவிட்டவள் | மணி 23-58 |
| ஓப்புவாள் | கடிவாள் | குறு 72-5 |
| திருத்துவாள் | சீர்திருத்துவாள் | பரி 21-24 |
| (நில் என்பான் | தடைசெய்வான் | பரி 11-104 |
| ஆடுவாள் | ஆடுகின்றவள் | கலி 39-1 |
| உழப்பாள் | அழுந்துகின்றவள் | கலி 130-17 |
| எழுவாள் | துயிலெழுவாள் | குறள் 55 |
| கடிவாள் | ஓட்டும் இவள் | சிலம்பு 7-22-2 |
| என்பாள் | கூறப்படுவாள் | சிலம்பு 1-29 |
| நடப்பாள் | நடப்பவள் | சிலம்பு 7-21-22 |
| எழுவாள் | எழுகின்ற கற்புடையவள் | மணி 22-59 |
| ஒல்லாள் | சிவப்பாறாள் | பதி 52-23 |
| ஓவாள் | நீங்காதவள் | அகம் 325-5 |
| ஆனாள் | அமையாள் | நற் 147-5 |
| ஒல்லாள் | உடம்படாளாய் | குறு 144-4 |
| ஆனாள் (ஆக) | அமையாள் (ஆக) | புறம் 144-6 |
| காணாள் | காணாள் | கலி 126-16 |
| இரங்காள் | இரங்காதவள் | மணி 25 103 |
| வாழாதாள் | வாழாதாள் | கலி 2-13 |
| உணர்கல்லாள் | அறியாள் | கலி 145-6 |
| இல்லாதாள் | இல்லாதாள் | குறள் 402 |
| (மட) நல்லாள் | மடப்பம் வாய்ந்த அவள் | அகம் 195-6 |
| தேமொழியாள் | இனியமொழியை உடைய காதலி | நற் 161-12 |
| ஆரத்தாள் | முத்துமாலை யுடைய. தலைவி | பரி 20 64 |
| நுசுப்பினாள் | இடையினையு டையாள் | கலி 1-7 |
| வனப்பினாள் | அழகினையுடையாள் | கலி 147-5 |
| நல்லாள் | உயர்ந்தவள் | குறள் 924 |

| | | |
|---|---|---|
| கண்ணாள் | கண்ணையுடையவள் | சிலம்பு 21-19 |
| திறத்தாள் | தன்மையுடையவள் | மணி 5-12 |

### 3.2.3 -ஒள்

-ஆள் விகுதியிலிருந்து -ஒள் பெறப்பட்டதாகத் தொல் (696) கூறும். ஆனால் பல பழந்தமிழ் நூல்களில் ஆள் விகுதியைக் காட்டிலும் ஒள் விகுதி நிரம்பக் கையாளப்பட்டுள்ளது குறிப்பிடத் தக்கதாகும். ஆயினும் பின்பழந்தமிழ் நூல்களில் ஒள், அள், விகுதிகளைக் காட்டிலும் ஆள் விகுதியே அதிகமாக் வந்துள்ளது. சிலம்பு, மணி ஆகிய பிற்காலத் தமிழ்நூல்களில் -ஒன், -ஓர் ஆகிய வையும் இந்நிலையிலேயே உள்ளது. -ஒன், -ஒள்-, ஓர் ஆகிய வற்றிற்கு - ஆன், -ஆள், -ஆர் ஆகியவை அடிப்படை வடிவங் களாகக் கருதப்படுகின்றன.

| | -ஆள் | -ஒள் |
|---|---|---|
| பதி | 1 | 3 |
| ஐங் | 5 | 45 |
| அகம் | 39 | :8 |
| நற் | 22 | 28 |
| குறு | 9 | 20 |
| புறம் | 14 | 23 |
| பத்து | 2 | 5 |
| பரி | 39 | 6 |
| கலி | 142 | 4 |
| குறள் | 39 | 0 |
| சிலம்பு | 144 | 16 |
| மணி | 61 | 34 |

#### 3.2.3.1 வினைமுற்றும் வினையாலணையும்பெயரும்

வினைமுற்றுக்களைக் காட்டிலும் வினையாலணையும்பெயர் களில்தாம் -ஒள் நிரம்ப இடம் பெற்றுள்ளது.

| | வினைமுற்றுக்கள் | வினையாலணையும் பெயர்கள் |
|---|---|---|
| பதி | 0 | 3 |
| ஐங் | 2 | 43 |
| அகம் | 6 | 52 |
| நற் | 8 | 20 |
| குறு | 2 | 18 |
| புறம் | 0 | 23 |
| பத்து | 0 | 5 |
| பரி | 1 | 5 |
| கலி | 1 | 3 |
| குறள் | 0 | 0 |
| சிலம்பு | 0 | 16 |
| மணி | 2 | 32 |

பின்பழந்தமிழ் நூல்களில் -ஒள் தன் இன்றியமையாமையை இழந்து, பின் வழக்கிழந்தது என்று கூறலாம். இடைக்காலத் தமிழ் நூல்களில் -ஒன், -ஒள், -ஒர் ஆகியவை வினையாலணையும் பெயர்களில்கூட மிகவும் அரிதாகவே காணப்படுகின்றன. வினை யாலணையும் பெயர்களைக் குறிக்க அவ் + அன், அவ் + அள் அவ் + அர் சேர்ந்து பயின்றுவரத் தொடங்கின.

### 3.2.3.2 சூழல்கள்

இவ்விகுதி

1. இறந்தகால இடைநிலைகளுக்குப் பின்னரும்
2. -ஆத்- எதிர்மறைக்குப் பின்னரும்
3. குறிப்பு வினையடிகட்குப் பின்னரும்
4. வினையாலணையும் பெயர் விகுதி - Ø-க்குப் பின்னரும்

வரும்.

#### 3.2.3.2.1 இறந்தகால இடைநிலைகளுக்குப் பின்னர்

பழந்தமிழ் நூல்களில் பதினைந்து இடங்களில்தான் இவ்விகுதி இச்சூழலில் காணப்படுகின்றது. -இ-க்குப் பின்னர் எட்டு இடங் களிலும், பிற இறந்தகால இடைநிலைகளோடு ஏழு இடங்களிலும் இவ்விகுதி காணப்படுகின்றது. இச்சூழலில் பதிற்றுப்பத்து, புறம்,

பத்துப்பாட்டு, குறள், சிலம்பு, மணி ஆகிய நூல்களில் ஓள் விகுதி காணப்படவில்லை. இக்குறிப்பிட்ட சூழலில் ஓள் விகுதிக்கு அதிக செல்வாக்கில்லை என்பது புலப்படுகின்றது. இறந்தகால இடைநிலைகளுக்குப் பின்னராவது பதினைந்து இடங்களில் வரும் இவ் விகுதி இறப்பில் கால இடைநிலைகளுக்குப் பின்னர் ஒரு இடத்தில் கூட வினைமுற்றுக்களில் காணப்படவில்லை என்பது குறிப்பிடத் தக்கது. ஆயினும், வினையாலணையும் பெயர்களில் இச்சூழலில் பெருவரவிற்றாகக் காணப்படுகின்றது.

| | | |
|---|---|---|
| வேட்டோள் | விரும்பியிருந்தாள் | ஐங் 1-3 |
| இறைஞ்சியோள் | வணங்கினள் | அகம் 86-29 |
| படர்தந்தோள் | சென்றனள் | அகம் 7-13 |
| என்றோள் | என்று கூறினள் | நற் 53-11 |
| நோக்கியோள் | நோக்கிநின்றாள் | நற் 55-9 |
| அணங்கியோள் | வருந்தச்செய்தனள் | குறு 119-4 |
| உறழ்ந்தோள் | மாற்றாள் | பரி 20 41 |
| இழந்தோள் | இழந்தாள் | கலி 100-20 |

-இ-மட்டுமே இறந்தகால இடைநிலையாக பயின்று வந்துள்ளது என்பதும், -இன்- எங்கும் காணப்படவில்லை என்பதும் குறிப்பிடத் தக்கன.

### 3.2.3.2.2 -ஆத்-எதிர்மறைக்குப் பின்னர்

பழந்தமிழ் நூல்கள் அனைத்தையும் நோக்கின் ஓரிடத்தில் மட்டுமே இவ்விகுதி வினைமுற்றில் -ஆத்- எதிர்மறைக்குப் பின்னர் வந்துள்ளது. ஆயின் வினையாலணையும் பெயராக மூன்றிடங் களில் காணப்படுகின்றது.

| | | |
|---|---|---|
| கூறாதோள் | கூறினாள் அல்லள் | நற் 27-12 |

### 3.2.3.23. குறிப்பு வினையடிகளுக்குப் பின்னர்

இச்சூழலில் நான்கு இடங்களில் இவ் விகுதி வந்துள்ளது.

| | | |
|---|---|---|
| தோளோள் | தோள்களை உடையள் | ஐங் 99-4 |
| ஊரோள் | ஊரின்கண்இருப்பவள் ஆவாள் | நற் 95-8 |
| ஊரோள் | ஊரிடத்தே உள்ளாள் | குறு 242-4 |
| மிக்கோள் | மிக்கவள் ஆவாள் | மணி 25-179 |

**3.2.3.2.4 வினையாலணையும் பெயர் விகுதி -Ø-க்குப் பின்னர்**

முன்பழந்தமிழ் நூல்களில் ஒள் விகுதி ஆள் விகுதியைக் காட்டிலும் நிறைந்த செல்வாக்கினைப் பெற்றுக் காணப்படுகின்றது என்பதையும் பின்பழந்தமிழ் நூல்களில் ஒள் விகுதி தன் செல்வாக்கினை இழந்து எண்ணிக்கையில் குறைந்து. தற்காலத் தமிழில் வழக்கிழந்து விட்டது என்பதையும் முன்னரே குறிப்பிட்டோம். பின்பழந்தமிழில் ஆள் விகுதி அள் விகுதியையும் பின்னடையச் செய்து முன்னணியில் காணப்படுகின்றது.

வினையாலணையும் பெயர்கள்

| | -அள் | -ஆள் | -ஒள் |
|---|---|---|---|
| பதி | 5 | 1 | 3 |
| ஐங் | 15 | 0 | 43 |
| அகம் | 75 | 20 | 52 |
| நற் | 24 | 7 | 20 |
| குறு | 26 | 4 | 18 |
| புறம் | 16 | 6 | 23 |
| பத்து | 2 | 0 | 5 |
| பரி | 8 | 17 | 5 |
| கலி | 59 | 79 | 3 |
| குறள் | 7 | 24 | 0 |
| சிலம்பு | 30 | 71 | 16 |
| மணி | 31 | 49 | 32 |

| | | |
|---|---|---|
| தொடங்கியோள் | தொடங்கியவள் | ஐங் 42–4 |
| ஒழிந்தோள் | கைவிடப்பட்ட காதலி | ஐங் 326-5 |
| அணங்கியோள் | வருந்திய காதலி | அகம் 1322–15 |
| என்றோள் | என்று கூறிய நம் தலைவி | அகம் 197–17 |
| கிடந்தோள் | படுத்திருந்தாள் | நற் 370–4 |
| அமர்ந்தோள் | நெஞ்சிடத்தே வீற்றிருந்த தலைவி | குறு 56-5 |
| ஒளித்தோள் | ஒளித்துக்கொண்டாள் | புறம் 339–14 |
| கிடந்தோள் | கிடக்கின்றவள் | பத்து 5-88 |
| பய ந்தோள் | ஈன்ற தாய் | பரி 3–16 |
| பரிந்தோள் | பிரியப்பட்டாள் | கலி 48–21 |
| அளித்தோள் | அருளியவள் | சிலம்பு 15-185 |

| | | |
|---|---|---|
| உணர்ந்தோள் | உணர்ந்த மணி மேகலை | மணி 30-2 |
| பெயர்வோள் | நீங்கும் அவள் | பதி 64-17 |
| ஊட்டுவோள் | ஊட்டுவாள் | ஐங் 128-3 |
| உழப்போள் | துன்பம் நுகரா நிற்கும் காதலி | ஐங் 477-2 |
| உறைவோள் | உறைவோள் | அகம் 64-17 |
| வருவோள் | வருபவள் | நற் 308-3 |
| பனிப்போள் | நடுங்கா நிற்பவள் | நற் 229-8 |
| உறைவோள் | உறையா நின்ற தலைமகள் | புறம் 278-7 |
| துழவுவோள் | சுற்றி வருபவள் | புறம் 278-7 |
| என்போள் | என்கின்றவள் | பத்து5-16 |
| புலம்புவோள் | வருந்திக் கூறினவள் | சிலம்பு 15-117 |
| பெயர்வோள் | மீண்டும் வருபவள் | சிலம்பு15-117 |
| எழுவோள் | எழுபவள் | மணி 9-8 |
| மெய் பெயர்ப் போள் | உயிர்விடுபவள் | மணி 26- 0 |
| வேண்டாதோள் | வேண்டாது இழப்பாள் | அகம் 146-13 |
| உண்ணாதோள் | உண்ணாதோள் | அகம் 207-17 |
| கடியோதோள் | விலக்காதிருந்தவள் | குறு 361-6 |
| புரையோள் | உயர்ந்தவள் | பதி 70-16 |
| நல்லோள் | நலம் முழுவதும் அமைந்த எம்பெரு மாட்டி | ஐங் 166-4 |
| இளையோள் | இளையோள் | அகம் 193-13 |
| நல்லோள் | நல்ல காதலி | நற் 137-2 |
| அரியோள் | அரியள் | குறு 128-4 |
| மாயோள் | மாமை நிற முடைய மனையாள் | புறம் 318-2 |
| செய்யோள் | சிவந்த நிற முடையவள் | பத்து 2-6 |
| மடவோள் | மடவோள் | கலி 21-13 |
| வெய்யோள் | விரும்பிய இவள் | சிலம்பு 10-96 |

### 3.2.4 - இ

பதிற்றுப்பத்து, பத்துப்பாட்டு, பரிபாடல், கலித்தொகை, குறள் ஆகிய நூல்களில் இவ்விகுதி காணப்படவில்லை. ஏனைய இலக்கியங்களிலும் கூட குறிப்புவினையாலணையும் பெயர்களிலேயே இவ் விகுதி காணப்படுகின்றது

| | | |
|---|---|---|
| கிளவி | சொற்களையுடைய காதலி | ஐங் 490-1 |
| முதுக்குறைவி | முதறிவுடையவள் | அகம் 17-9 |
| உறுவி | உற்றவள் | நற் 130-9 |
| உறைவி | தங்குகின்றவள் | குறு 192-2 |
| உறுவி | உறுவோள் | புறம் 161-1 |
| குழலி | கூந்தலையுடைய கண்ணகி | சிலம்பு 15-198 |
| குழலி | மணிமேகலை | மணி 21-4 |

### 3.2.5 -∅

பழந்தமிழ் இலக்கியங்களில் மேலே குறிப்பிடப்பட்ட -அள், -ஆள், இ ஆகிய விகுதிகள் மாட்டுமின்றி -∅ விகுதியும் பெண்பால் ஒருமையைக் காட்டி நிற்கின்றது. இவ்விகுதி பழந் தமிழ் இலக்கியங்களைப் பொருத்தமட்டில் பெண்பால் ஒருமையை மட்டுமன்றி ஆண்பால், ஒன்றன்பால், பலவின்பால் ஆகியவற்றை யும் காட்டி நிற்கின்றது என்பதனை முன்னரே குறிப்பிட்டோம். இவ்விகுதி பற்றிப் பேசுகின்ற தொல்காப்பியரும் (712), உரை எழுதவந்த உரையாசிரியர்களும் (இளம். 227, சேனா. 227, நச். 229, தெய். 221, கல். 229) இதே கருத்தினையே கொள்ளு கின்றனர். அவர்கள் செய்யும் என்னும் வாய்பாட்டு முற்றாகக் கொள்ளுகின்றனர். -∅ என்பது அவர்களுக்குத் தெரியாத ஒன்று.

சங்ககால இலக்கியங்களில் பரிபாடல் நீங்கலாக ஏனைய இலக்கியங்களில் இவ் விகுதி பெண்பாலை உணர்த்தி வந்துள்ளது எனினும் மற்ற பெண்பால் விகுதிகளாகிய அள், ஆள், ஒள் ஆகியவற்றைவிட மிகக் குறைவாகவே காணப்படுகின்றது. மேலும் இம் மூன்று விகுதிகளும் வினைமுற்றுக்களிலும் வினையாலணயும் பெயர்களிலும் வர -∅விகுதி மட்டும் வினைமுற்றுக்களில் மட்டுமே வரக் காண்கின்றோம்.

பதி (1), ஐங் (9), அகம் (27), நற் (5), குறு (8), புறம் (7), பத்து (2), பரி (0), கலி (29), குறள் (2), சிலம்பு (2), மணி (23) ஆகிய அனைத்துப் பழந்தமிழ் இலக்கியங்களிலும் நூற்றுப் பதினைந்து இடங்களில் Ø விகுதி பெண்பாலை உணர்த்தி நிற்கின்றது எனினும் பல இடங்களில் பெண்பால் பெயர்கள் வெளிப்படையாக (overtly) வருவதில்லை. எனினும் உரையாசிரியர்கள் அதுபோன்ற இடங்களில் பெண்பால் பெயர்களையோ அல்லது பெண்பால் சுட்டும் பதிலிடு பெயர்களையோ இட்டு உரை எழுதிச் செல்கின்றனர். இருப்பினும் ஒருசில இடங்களில் பெண்பால் பெயர்கள் வெளிப்படையாகவே எழுவாயாக நிற்கக் காண்கிறோம்.

### 3.2.5.1 சூழல்

இவ்விகுதி -உம்- இறப்பில்கால இடைநிலைக்குப் பின்னர் வரும்.

### 3.2.5.1.1 -உம்- இறப்பில்கால இடைநிலைக்குப் பின்னர்

"......... யுள்ளலு முரியள்
பாய லுய்யுமோ ..... ....."
நின்னை நினைத்து வருந்துதற்கும் உரியளாவாள்.
படுக்கைகண் கிடந்து வருந்தும் வருத்தத்தினின்றும்
உய்வாளோ. பதி 16-14

"............ யென் றோழி
............ நின்னு மஞ்சும்"
என் ஆருயிர்த்தோழி ............ நினக்கும்
பெரிதும் அஞ்சுபவளே ஐங் 205-1

"......... நின் மனையோள்
.... ...... புலக்கும்"
நின்னுடைய இல்லக்கிழத்தி
புலந்து கொள்வள் ஐங் 87-34

"... ......பெற்ற விவளுமா ரழுமே"
பெற்ற தலைவி அழுத வண்ணமே
இருக்கின்றனள் ஐங் 50-4

" ......... ......... ........ ....தாயும்

........ ......... ......... ........ ........

.... ........ ........ ........ ........

...... ... ... ......... அழுமே"

தாயும் ...... அழா நிற்பள் அகம் 165-13

"நோங் கொல் அளியள்"

வருந்தியிருப்பளோ

இரங்கத்தக்காள் அகம் 287-3

"...... ...... ...... மடந்தை

ஆய்வளைகூட்டும் அணியுமார்"

தலைவி வளையமாகப்

பூண்டு கொள்ளுவாள் நற் 60-11

"வருந்தும் ......... அரிவை"

காதலி வருந்தா நிற்பள் நற் 321-7

"முயங்கும் ..... யாய் ........."

தழுவிக் கொள்வாளாயினள் அன்னை குறு 244-8

"அம்மா அரிவையும் வருமோ"

தலைவியும் வருவாளோ குறு 63-3

" தலைப்புணைக் கொள்ளும்

_ கடைப்புணைக் கொள்ளும்

...... . ... ... .. ....

— ... தளிரன் னோளே"

மாந்தளிரை ஒத்த மேனியினை

உடைய நம் தலைவி தலைப்பைக் கைக்

கொள்ளா நின்றாள்

கடைப்பகுதியைப் பற்றா நின்றாள் குறு 222-1,2

" ......... தாயுமனந் திரியும்"

தாயும் மனம் வேறுபடும் புறம் 183-4

"...... சிறுமையள் இவளுந் தேம்பும்"
ஆற்றுதற்கரிய நோயுடையளாய்,
என் தோழியும் மெலியா நின்றாள் — பத்து 8-26

" ... காம மொருத்தி
உயிர்க்கும் உசாஅம் உலம்வரும்"
ஒருத்தி நெட்டுயிர்ப்பு கொள்ளும்,
உசாவும், நெஞ்சு சுழலும் — கலி 145-4

"................ ஒருத்தி
..................
..................
...உள்ளி அழூஉம் ...
மறந்தாள் போல் நகூஉம் ... "
ஒருத்தி அழா நிற்கும் அவனை
மறந்தாளைப் போல...ஒங்குவதும்
செய்யும் — கலி 145-8, 9

"...... நல்லாள் நகும்"
நல்லள் நகா நிற்கும் — குறள் 1040

"................ மாதவியும்
................................
..................
...... தொடங்கும்"
மாதவியும் தொடங்கினாள் — சிலம்பு 7-24-6

"................மணிமேகலா தெய்வம்
..................
..................
..................நா நீட்டும்"
மணிமேகலா தெய்வம்
நாவினை நிமிர்த்துப்
புகழா நிற்கும் — மணி 5-108

சங்ககால இலக்கியங்கள் அனைத்திலும் நூற்றுப் பதினைந்து இடங்களில் –Ø விகுதி பெண்பால் உணர்த்தி வருகின்றது எனினும், இவற்றுள் அகநானூற்றில் மூன்று இடங்களில் (சென்ம்,

அகம் 176-26; நோம், அகம் 287-3; 339 11) இவ்விகுதி - உ- இன்றி - ம் - முடன் வந்து நின்று பெண்பால் உணர்த்துகின்றது என்பதும், கலித்தொகையில் நான்கு இடங்களில் (அழூஉம், கலி 145-४; நகஉம் கலி 145-93, நகூஉம், கலி 147-9; அழூஉம், கலி 147-10) அளபெடையுடன் வந்து பெண்பாலை உணர்த்துகின்றது என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

## 3. 3 பட்டியல்கள்

### 3.3.1 பட்டியல் 1 : பெண்பால் விகுதிகள்

| | -அள் | -ஆள் | -ஒள் | Ø -உம்) | -இ |
|---|---|---|---|---|---|
| பதி | 8 | 1 | 3 | 1 | — |
| ஐங் | 73 | 5 | 45 | 9 | 5 |
| அகம் | 159 | 39 | 58 | 27 | 14 |
| நற் | 97 | 22 | 28 | 5 | 5 |
| குறு | 70 | 9 | 20 | 8 | 2 |
| புறம் | 38 | 14 | 23 | 7 | 2 |
| பத்து | 5 | 2 | 5 | 2 | — |
| பரி | 15 | 39 | 6 | — | — |
| கலி | 96 | 142 | 4 | 29 | — |
| குறள் | 14 | 39 | — | 2 | — |
| சிலம்பு | 90 | 144 | 16 | 2 | 41 |
| மணி | 98 | 61 | 34 | 23 | 11 |

**3.3.2 பட்டியல் 2: -அன்**

| | வினைமுற்று | | | | | | | | | | வினையாலணையும் பெயர் | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | | | | -Ø- | | | | | | | | | -அவ்- | | | |
| | இறந்த காலம் | | | இறப்பில் காலம் | | | நிகழ் காலம் | எதிர் மறை | | குறிப்பு வினை | இறந்த காலம் | | | இறப்பில் கால | | | | எதிர் மறை | குறிப்பு வினை | இறந்த காலம் | இறப்பில் காலம் | | குறிப்பு வினை |
| | -த்- | -இன்- | -இ- | -வ்- | -கும்- | -ப்- | -கின்று- | -அல்- | -இல்- | | -த்- | -இன்- | -இ- | -ப்- அன் | -வ்- அன் | -வ்- | (உ)ந்- | -அல்- | | இறந்த காலக் குறி | -இ- | (ப்)ப | |
| பதி | — | 1 | — | — | — | — | — | — | — | 2 | 2 | 2 | — | — | — | — | 1 | — | — | — | — | — | — |
| ஐங் | 20 | 11 | — | 4 | 1 | 1 | 1 | — | — | 20 | — | — | — | — | — | — | — | — | 15 | — | — | — | — |
| அகம் | 20 | 25 | — | 10 | 5 | — | — | 2 | — | 22 | 1 | 4 | — | — | 1 | 1 | 10 | — | 58 | — | — | — | — |
| நற் | 19 | 22 | — | 5 | 5 | — | — | 2 | — | 20 | 4 | — | — | 1 | 2 | — | 3 | — | 14 | — | — | — | — |
| குறு | 9 | 4 | 2 | 2 | 3 | — | — | 1 | 1 | 22 | — | — | 1 | — | — | — | 1 | — | 24 | — | — | — | — |
| புறம் | 5 | 3 | — | 2 | — | — | — | 1 | — | 11 | — | — | 1 | — | — | — | 1 | — | 13 | 1 | — | — | — |
| பத்து | — | — | — | — | — | — | — | — | — | 3 | — | — | — | 1 | 1 | — | — | — | — | — | — | — | — |
| பரி | 3 | — | — | — | 1 | — | — | — | — | 3 | — | — | — | — | — | — | — | — | — | 3 | 1 | 3 | 1 |
| கலி | 11 | 10 | — | 2 | 3 | — | — | — | — | 11 | — | 1 | — | — | 1 | 1 | 1 | 1 | 26 | 11 | 1 | 12 | 4 |
| குறள் | 2 | — | — | — | — | — | — | — | — | 5 | — | — | — | — | — | — | — | — | 3 | — | — | 2 | 2 |
| சிலம்பு | 33 | 16 | — | — | — | — | — | — | 1 | 10 | 5 | 2 | — | 2 | — | — | — | — | 20 | — | — | — | 1 |
| மணி | 37 | 16 | — | — | — | — | — | — | — | 14 | 3 | 1 | — | — | — | — | — | — | 26 | 1 | — | — | — |

## 3.3.3 பட்டியல் 3: -ஆள்



| | வினைமுற்று | | | | | | | | வினையாலணையும் பெயர் | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | இறந்த காலம் | | இறப்பில் காலம் | | | | எதிர் மறை | குறிப்பு | இறந்த காலம் | | | இறப்பில் காலம் | | எதிர்மறை | | | குறிப்பு |
| | -இன்- | -பிற- | -வ்- | -(ப்)ப்- | -கிற்ப்- | -குவ்- | -Ø- | — | -இன்- | -இ- | -பிற- | -வ்- | -ப்(ப்)- | -Ø- | -ஆத்- | -அல்- | — |
| பதி | — | — | — | — | — | — | — | — | — | — | — | — | — | 1 | — | — | — |
| ஐங் | — | 1 | — | — | — | — | 4 | — | — | — | — | — | — | — | — | — | — |
| அகம் | — | — | — | — | — | — | 19 | — | — | — | — | — | — | 19 | — | — | 1 |
| நற் | — | — | 1 | — | — | — | 13 | 1 | — | — | — | — | — | 6 | — | — | 1 |
| குறு | — | — | — | — | — | — | 5 | — | — | — | — | 2 | — | 2 | — | — | — |
| புறம் | — | — | — | — | — | — | 8 | — | — | — | — | — | — | 6 | — | — | — |
| பத்து | — | — | — | — | — | — | 2 | — | — | — | — | — | — | — | — | — | — |
| பரி | 5 | 8 | 3 | — | — | — | 6 | — | 1 | — | 3 | 3 | 1 | — | — | — | 9 |
| கலி | 6 | 34 | 9 | 1 | 2 | — | 11 | — | — | 12 | 15 | 3 | 4 | 5 | 1 | 1 | 38 |
| குறள் | 4 | 8 | — | — | — | — | 3 | — | 1 | — | 3 | 1 | — | — | — | — | 19 |
| சிலம்பு | 6 | 40 | 3 | 1 | — | 1 | 14 | 8 | — | — | 23 | 8 | 7 | 5 | — | — | 28 |
| மணி | — | 4 | — | — | — | — | 8 | — | — | — | 3 | 2 | 3 | 2 | — | — | 39 |

3.3.4 பட்டியல் 4 : -ஒன்

| | வினைமுற்று | | | | | வினையாலணையும் பெயர் | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | இறந்த காலம் | | இறப்பில் காலம் | எதிர் மறை | குறிப்பு | இறந்த காலம் | | | இறப்பில் காலம் | | எதிர் மறை | குறிப்பு |
| | -இ- | -ந்த்- | -ப்- | -ஆ- | — | -இ- | -ந்த்- | -இன்- | -வ்- | -(ப்)ப்- | -ஆ- | — |
| பதி | — | — | — | — | — | — | — | — | 1 | — | — | 2 |
| ஐங் | — | 1 | — | — | 1 | 1 | 15 | — | 10 | 2 | — | 15 |
| அகம் | 3 | 3 | — | — | — | 3 | 7 | 1 | 6 | 1 | 2 | 32 |
| நற் | 4 | 1 | — | 1 | 2 | — | 4 | — | 5 | 2 | — | 9 |
| குறு | 1 | — | — | — | 1 | — | 2 | 1 | 2 | — | 1 | 12 |
| புறம் | — | — | — | — | — | — | 2 | — | 2 | 1 | — | 18 |
| பத்து | — | — | — | — | — | — | 1 | — | — | 1 | — | 3 |
| பரி | — | 1 | — | — | — | — | 3 | — | — | — | — | 2 |
| கலி | — | 1 | — | — | — | — | 1 | — | 1 | — | — | 1 |
| குறள் | — | — | — | — | — | — | — | — | — | — | — | — |
| சிலம்பு | — | — | — | — | — | — | 8 | — | 2 | 4 | — | 2 |
| மணி | — | — | — | — | 2 | — | 8 | — | 7 | 6 | — | 11 |

# 4

# பலர்பால்

## 4.1 பலர்பால் வினைமுற்றுக்கள்

பலர்பால் பெயர்கள் எழுவாயாக வரும்போது அவற்றின் பயனிலையாக வரும் வினைமுற்றுக்கள் பலர்பால் விகுதிகளைக் கொண்டு நிற்கும். எனவே பிற விகுதிகளைப் போல இவ்விகுதிகளும் பலர்பால் பெயர்களின் பிரதிபலிப்பாகவே உள்ளன. இதே நிலையை வினையாலணையும் பெயர்களிலும் காணலாம்.

### 4.1.1 பலர்பால் பெயர்களும் பதிலிடுபெயர்களும்

பலர்பால் பெயர்கள் ஆண்பால், பெண்பால் ஆகிய இரண்டிற்கும் பொதுவாக உள்ளவை என்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். அரசர், அரசியர், காதலர் போன்ற பலர்பால் பெயர்கள் அவை காட்டும் பொருளால் ஆண், பெண் வேற்றுமையைக் காட்டுமேயன்றி அவற்றில் காணப்படும் பலர்பால் பெயர் விகுதிகள் இவ்வேற்றுமையைக் காட்டா. இவற்றைப் போன்றே பலர்பால் காட்டும் பதிலிடு பெயர்களும் ஆண், பெண் வேற்றுமையைக் குறிப்பதில்லை. எனவேதான் பலர்பால் பெயர் விகுதிகளும் பதிலிடு பெயர்களும் ஆண்பாலுக்கும், பெண்பாலுக்கும் பொதுவானவை எனக் கருதப்படுகின்றன.

பழந்தமிழ் மொழியில் காணப்படும்பலவேறு பொதுப்பெயர்களும், முறைப்பெயர்களும், இன்னும் பிறவும் இத்தன்மையனவே. இப் பெயர்களில் காணப்படும் பலர்பால் பண்பு வினைமுற்றிலும், வினையாலணையும்பெயரிலும் பிரதிபலித்து நிற்கக் காணலாம்.

#### 4.1.1.1 பெயர்கள்

"......... கானவர் கொய்தனர்" — ஐங் 270-2

"... ....பாண ரெல்லாம்
கள்வர் போல்வர் ...." குறு 127-5

" ... .... புரைதபு
வள்ளியோர்ப் படர்குவர் புலவர் ........" புறம் 154-4

" .. ........ ......இரவலர் வருவர் ........" புறம் 3-24

## 4.1.1.2 பதிலிடு பெயர்கள்

பலர்பால் பெயர்களைப் போன்றே பதிலிடுபெயர்களும் பழந் தமிழ் இலக்கியங்களில் ஏராளமாக உள்ளன. பழந்தமிழ் இலக் கியங்கள் அனைத்திலுமே அவர் என்ற பதிலிடுபெயர் காணப் படுகிறது. ஆனால் இவர் என்ற சொல்லோ பதிற்றுப்பத்து (1), குறுந்தொகை (1), புறநானூறு (11), குறள் (1), சிலப்பதிகாரம் (5), மணிமேகலை (6) ஆகிய நூல்களில் மட்டுமே காணப்படுகிறது, ஆனால் உவர் என்ற சொல் எந்த இலக்கியத்திலும் இல்லாமல் இருப்பதும், ஆனால் தொல்காப்பியம் இதனைக் குறிப்பிட்டுச் செல்லுவதும் இங்குக் குறிப்பிடத்தக்கன.

இப்பதிலிடுபெயர்கள் எழுவாயாக வர அவற்றைப் பிரதிப லித்துப் புலர்பால் விகுதிகள் வருதல் காணலாம்.

"பாணர் பாடுநர் பரிசில ராங்கவர்
தமதெனத் தொடுக்குவ ராயின் ......" புறம் 135-16

"சிலம்பு காணிய வந்தோர் இவரென" சிலம்பு 16-159

பெயர்களோ அல்லது பதிலிடுபெயர்களோ மறைந்து நிற்கும் நிலையிலும் வினைவிகுதிகள் வருதல் உண்டு.

" .... எதிர்ந்தனர் கொடையே" ஐங் 300-3

"மாவென மடலும் ஊரப" குறு 17-1

"ஈங்களம் வருபவோ... ...." குறு 336-2

இவ்வாறு மறைந்து வரும் இடங்கள் மிகக் குறைவாகவே உள்ளன.

சுட்டல்லாப் பதிலிடுபெயராகிய தாம் என்பதும் பலர்பால் விகுதி களை ஏற்றுவருவதைப் பழந்தமிழ் இலக்கியங்களில் காணலாம்.

"செல்ப என்ப தாமே.... ........" நற் 7-39

### 4.1.2 பலர்பால் விகுதிகளும் தொல்காப்பியமும்

பழந்தமிழில் பலர்பால் காட்டும் விகுதிகளாக அர், மார், ஆர், ஓர், ப, அர்கள், ஆர்கள், ஓர்கள் ஆகியவை காணப்படுகின்றன.

இவ்விகுதிகள் பற்றிப் பேச வந்த தொல்காப்பியர் கிளவி யாக்கத்திலும் (490), வினையியலிலும் (691, 692)

''ரஃகான் ஒற்றும் பகர இறுதியும்
மாரைக் கிளவி உளப்பட மூன்றும்
நேரத் தோன்றும் பலரறி சொல்லே'' (சூத். 490)

என்றும்,

''அர் ஆர் ப என வரூஉம் மூன்றும்
பல்லோர் மருங்கில் படர்க்கைச் சொல்லே'' (சூத். 691)

''மாரைக் கிளவியும் பல்லோர் படர்க்கை
காலக் கிளவியொடு முடியும் என்ப'' (சூத்.692)

என்றும் கூறிச் செல்வார். இந்நிலையில் -அர், -ஆர் -ப, -மார் ஆகிய நான்கும் பல்லோர் படர்க்கை விகுதிகளாகத் தொல்காப்பிய ரால் கருதப்பட்டன என எண்ணலாம். மேலும் ஓர் விகுதியும் தொல்காப்பியருக்கு உடன்பாடு என்பதை

''பால் அறி மரபின் அம்மூ ஈற்றும்
ஆ ஓ ஆகும் ... ... ... ... ...'' (சூத். 696)

என்னும் சூத்திரத்தால் அறியலாம்.

மார் விகுதியைத் தனி ஒரு விகுதியாகக் கருதுவதா அல்லது ஆர் விகுதியுடன் இணைத்துக் கொள்வதா என்ற ஆராய்ச்சி அறிஞர்களிடையே உண்டு.

### 4.1.3 தொல்காப்பியப் பயிற்சி

தொல்காப்பியத்தில் அர், ஆர், ஓர், ப ஆகிய விகுதிகள் பலர்பால் காட்டுவனாக உள்ளன. இவற்றுள் அர் விகுதி

1. -அன்- சாரியைக்குப் பின்னரும்
2. இறந்தகால இடைநிலை -இன்- னிற்குப் பின்னரும்
3. இறப்பில்கால இடைநிலைகளுக்குப் பின்னரும்

4. குறிப்பு வினையடிகளுக்குப் பின்னரும்

5. வினையாலணையும் பெயர் விகுதிகளுக்குப் பின்னரும் வரும்.

| | |
|---|---|
| உரைத்தனர் | பொ 310–15 |
| சொல்லினர் | பொ 632-4 |
| ஒப்பர் | பொ 145-23 |
| உரியர் | பொ 26 |
| அகத்தவர் | பொ 384-4 |
| பெரியவர் | பொ 75-10 |
| கேட்குநர் | பொ 497-2 |

ஆர் விகுதி

1. -Ø- எதிர்மறைக்குப் பின்னரும்

2. மகர ஒற்றை அடுத்து வரும் -அன்- சாரியைக்குப் பின்னரும் வரும்.

| | |
|---|---|
| உரையார் | பொ 184–1 |
| மொழிமனார் | சொல் 172-3 |

ஓர் விகுதி

1. வினையாலணையும் பெயர் விகுதி -Ø-க்குப் பின்னர் மட்டுமே வந்துள்ளது.

| | |
|---|---|
| கண்டோர் | பொ 43-9 |
| உணர்வோர் | சொல் 38?-1 |
| உணருமோர் | எழுத்து 194-3 |
| தேரோர் | பொ 75-4 |
| கொடியோர் | பொ 145-25 |

-Ø- விகுதி

1. இறந்தகால இடைநிலைகளுக்குப் பின்னர் வரும். என்றிசின் பொருள் 312-3

–ப விகுதி

1. வினை அடிகளுக்குப் பின்னர் வரும் -Ø-க்குப் பின்னர் வரும்.

| | |
|---|---|
| காண்ப | பொ 90-3 |
| மொழிப | எழுத்து 8-2 |

### 4.1.4 பெரும்பான்மை விகுதி

பலர்பால் காட்டும் -அர், -ஆர் போன்ற விகுதிகளில் அர் விகுதியே மிக அதிகமாக வருவதும், பின்னர் ஆர் விகுதியும், இதனையடுத்து ஓர் விகுதி காணப்படுவதும் இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். -அர் இரண்டாயிரத்து தொண்ணூற்று ஐந்து இடங்களிலும் இதனையடுத்து ஆர் விகுதி ஆயிரத்து இருநூற்று அறுபத்து ஒன்பது இடங்களிலும், ஓர் விகுதி ஆயிரத்து நூற்று எண்பத்து ஐந்து இடங்களிலும், பகரவிகுதி நூற்று எழுபத்தெட்டு இடங்களிலும் வந்துள்ளன. மார்விகுதி நான்கு இடங்களிலும், அர்கள் ஒரு இடத்திலும், ஆர்கள் இரு இடங்களிலும், ஓர்கள் ஏழு இடங்களிலும் வந்துள்ளன.

முன்பழந்தமிழ் நூல்களில் ஆர் விகுதியை விட ஓர் அதிகமாக காணப்படுகிறது. பின்பழந்தமிழ் நூல்களாகிய பரிபாடல், கலித்தொகை ஆகியவற்றில் ஆர் விகுதியே அதிகமாக வந்துள்ளது. ஆனால் மணிமேகலையில் -ஓர் கூடுதலாக உள்ளது.

முன்னர்க் குறிப்பிட்டபடி அர் விகுதியே பல பழந்தமிழ் நூல்களில் அதிகமாகப் பயின்று வந்துள்ளது. எனினும் கலித்தொகை, திருக்குறள் ஆகிய நூல்களில் ஆர் விகுதி அதிகமாக உள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கது. இந்நிலையையே -அன், -ஆன், -அள், -ஆள் ஆகிய விகுதிகளிலும் காணலாம்.

| | | | | |
|---|---|---|---|---|
| கு | அன் | 71 | ஆன் | 178 |
| ற | அள் | 14 | ஆள் | 39 |
| ள் | அர் | 263 | ஆர் | 504 |
| க | அன் | 143 | ஆன் | 208 |
| லி | அள் | 96 | ஆள் | 142 |
| | அர் | 203 | ஆர் | 252 |

இவ்விரு நூல்களிலும் ஆர் விகுதி அதிகமாக வருவதும், இதை ஒட்டியே இடைக்காலத் தமிழில் அது அதிகமாகப் பயின்று வருவதும், தற்காலத்தமிழில் ஆர் ஒன்றே நிலைபெற்று நிற்பதும் தமிழ் மொழி வரலாற்றில் குறிப்பிடத்தக்க ஒரு செய்தியாகும்.

## 4.2 விகுதிகள்

### 4.2.1 -அர்

### 4.2.1.1 உரையாசிரியர்கள்

இவ்விகுதிக்கு உதாரணம் கூறவந்த இளம்பூரணர் (சூத் 7, 203, 210)

| | | |
|---|---|---|
| உண்டனர் | நிலத்தர் | இல்லர் |
| உண்ணா நின்றனர் | பொன்னன்னர் | உளர் |
| உண்குவர் | கரியர் | வல்லர் |
| உடையர் | செய்யர் | நல்லர் |
| அல்லர் | தீயர் | |

போன்றவற்றையும், சேனாவரையர் (சூத். 7, 206, 213, 214, 215)

| | | |
|---|---|---|
| உண்டனர் | இலர் | தீயர் |
| உண்ணா | உளர் | உடையர் |
| நின்றனர் | வல்லர் | கரியர் |
| உண்பர் | நல்லர் | |
| அல்லர் | | |

போன்றவற்றையும், நச்சினார்க்கினியர் (சூத். 7, 208, 216, 217)

| | | |
|---|---|---|
| உண்டனர் | உண்கின்றிலர் | உளர் |
| உண்டிலர் | உண்பர் | வல்லர் |
| உண்ணா நின்றனர் | உண்குவர் | நல்லர் |
| | உண்ணலர் | தீயர் |
| உண்கின்றனர் | அல்லர் | உடையர் |
| உண்ணா நின்றிலர் | இலர் | கரியர் |

போன்றவற்றையும், தெய்வச்சிலையார் (சூத். 7, 199, 200)

| | |
|---|---|
| உண்டனர் | அவர் |
| உண்ணா நின்றனர் | இவர் |
| உண்பர் | நம்பியர் |

போன்றவற்றையும், கல்லாடனார் (சூத். 7, 209, 216, 217)

| | | |
|---|---|---|
| உண்டனர் | உண்பர் | பொன்னன்னர் |
| உண்டிலர் | உண்குவர் | கரியர் |

| | | |
|---|---|---|
| உண்ணா நின்றனர் | உண்ணலர் | அல்லர் |
| உண்ணா நின்றிலர் | உடையர் | |
| உண்கின்றிலர் | நிலதர் | |

போன்றவற்றையும் தந்து செல்கின்றனர்,

பழந்தமிழில் நிகழ்கால இடைநிலை அருகிக் காணப்பட நச்சினார்க்கினியர் போன்ற உரையாசிரியர்கள் அவற்றையும் இணைத்து எடுத்துக் காட்டுக்கள் தருவது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். இதைப் போன்றே உண்டிலர் போன்ற உதாரணங்களும் குறிப்பிடத்தக்கவை. இறந்த கால இடைநிலைகளை அடுத்து -இல்- வருவது ஒரு சில இடங்களில் காணப்படினும் -அர் விகுதிக்கு முன்னால் பழந்தமிழ் நூல்களில் காணப்படவில்லை. உரையாசிரியர்கள் சங்ககால இலக்கியங்களில் காணப்படும் அறியலர் (புறம் 165-5) அறிகிலர் (குறு. 152-1) போன்றவற்றைக் காட்டாமல் இருப்பதும் நினைவு கூரத்தக்கது. அஞ்சினர் (அகம் 26-16) போன்று-இன்- இடைநிலைக்குப் பின்னர் இவ் விகுதி வருவதையும் தந்திலர்.

வினையாலணையும்பெயர்களும் உரைகளில் இடம்பெறவில்லை. கண்டர் (சிலம்பு 2-54), இனியவர் (ஐங் 415-4), தீண்டலர் (கலி 102-10), நல்குநர் (கலி 23-10), பகர்வர் (ஐங் 271-1) தருவனர் (நற் 8-6), கொண்டனர் (புறம் 373-30) போன்ற வினையாலணையும் பெயர்கள் பழந்தமிழ் நூல்களில் வருகின்றன.

மேலும் தெய்வச்சிலையார் அவர், இவர் போன்ற பெயர்களையும் தருவார்.

### 4.2.1.2 சூழல்கள்

இவ்விகுதி பழந்தமிழ் நூல்களில்

1. -அன்- சாரியைக்குப் பின்னரும்
2. இறந்தகால இடைநிலை -இன்-னுக்குப் பின்னரும்
3. இறப்பில்கால இடைநிலைகளுக்குப் பின்னரும்

4. -அல்-, -இல்- ஆகிய எதிர்மறை இடைநிலைகளுக்குப் பின்னரும்
5. குறிப்பு வினையடிகளுக்குப் பின்னரும்
6. வினையாலணையும் பெயர் விகுதிகளுக்குப் பின்னரும் (-∅-, -அவ்-, -(உ)ந்-)

வரும்

#### 4.2.1.2.1 -அன்- சாரியைக்குப் பின்னர்

அன், அள் ஆகிய விகுதிகளைப் போன்றே அர் விகுதியும் -அன்- சாரியைக்குப் பின்னர் பயின்று வருதல் காணலாம் திருக்குறள் ஒழிந்த ஏனைய இலக்கியங்கள் அனைத்திலும் இச்சூழலில் இவ்விகுதி காணப்படுகின்றது. பொதுவாக இறந்தகால வினை முற்றுக்களில் -அன்- சாரியை காணப்படுமாயினும் ஒருசில இடங்களில் இறப்பில்கால முற்றுக்களிலும் இச்சாரியை உள்ளமை குறிப்பிடத்தக்க ஒரு செய்தியாகும். பதிற்றுப்பத்து, அகநானூறு, நற்றிணை, பத்துப்பாட்டு ஆகிய நூல்களில் ஒரிரு இடங்களில் இந்நிலையைக் காண்கின்றோம்.

| | | |
|---|---|---|
| அலந்தனர் | அலமந்து வருந்த ஆற்றனர் | பதி 71-8 |
| எதிர்ந்தனர் | நேர்வாராயினர் | ஐங். 303-3 |
| அறிந்தனர் | அறிவாராயினர் | அகம் 70-7 |
| புக்கனர் | சென்றுவிட்டனர் | நற் 67-9 |
| இருந்தனர் | உளர் | குறு 146-2 |
| பெற்றனர் | பெற்றார் | புறம் 62-19 |
| அமர்ந்தனர் | அமர்ந்தனர் | பத்து 6-581 |
| அயின்றனர் | உண்டனர் | பரி 5-45 |
| பாய்ந்தனர் | பாய்ந்தார் | கலி 101-14 |
| அணிந்தனர் | அணிந்தார் | சிலம்பு 2.72 |
| அறைந்தனர் | புடைத்தார் | மணி 13-45 |

போன்றவை இதற்கு எடுத்துக்காட்டுக்கள் ஆகும். முன்னர் குறிப்பிட்டபடி வகர இடைநிலைக்குப் பின்னரும் -அன்- சாரியை வருகின்றது.

| | | |
|---|---|---|
| ஒல்குவனர் | அசைந்து நடந்தனர் | பதி 78-5 |
| பெயர்வனர் | சென்றனர் | அகம் 301-21 |

| | | |
|---|---|---|
| ஏகுவனர் | செல்லாநிற்பர் | நற் 161-6 |
| அறைவனர் | சாற்றினர் | பத்து 6-362 |
| தொழுவனர் | புகழ்ந்தனர் | பத்து 6-466 |

### 4.2.1.2.2. -இன்- இறந்தகால இடைநிலைக்குப் பின்னர்

இச்சூழலிலும் அர் விகுதி திருக்குறள் ஒழிந்த ஏனைய நூல்களி அனைத்திலும் காணப்படுகின்றது.

| | | |
|---|---|---|
| நோக்கினர் | நோக்கினர் | பதி 89-17 |
| மாற்றினர் | விலக்கிவிட்டனர் | ஐங் 190-2 |
| வணங்கினர் | வணங்கினர் | அகம் 124-2 |
| அல்கினர் | தங்கிவிட்டனர் | நற் 49-6 |
| அடங்கினர் | துயின்றனர் | குறு 6-2 |
| ஆயினர் | ஆயினார் | புறம் 240-14 |
| ஓம்பினர் | பாதுகாப்பார் | பத்து 6-462 |
| அலங்கினர் | கலக்கமெய்தினர் | பரி 6-45 |
| கலங்கினர் | கலங்கிப் போனார் | கலி 102-24 |
| அடங்கினர் | அடங்கிவிட்டனர் | சிலம்பு 12-15 |
| கூடினர் | தொடர்புடையராயினர் | மணி 10-74 |

குறுந்தொகையில் ஒரு இடத்தில் அர் விகுதி -இ- க்குப்பின் வரக் காணலாம்.

ஆகியர் ஆகுவர் (ஆனார்) குறு 40-1

இதுபோன்றே பத்துப்பாட்டில் பெறீஇயர் என்னும் சொல்லும் இறந்தகாலத்தைக் காட்டும் சொல்லாக உள்ளது. பெற்றவர் என்ற பொருளில் வினையாலணையும்பெயராக இச்சொல் வந்துள்ளது.

### 4.2.1.2.3 இறப்பில்கால இடைநிலைகளுக்குப் பின்னர்

அர் விகுதி பகர, வகர இறப்பில்கால இடைநிலைகளோடு மகர விகுதிக்குப் பின்னரும் வருதல் காணலாம். இது வினைமுற்றாகப் புறநானூற்றில் மட்டுமே ஒரு இடத்தில் வந்துள்ளது. பதிற்றுப் பத்து (3), குறுந்தொகை (1), பத்துப்பாட்டு (1), பரிபாடல் (4) ஆகியவற்றில் வினையாலணையும் பெயராகவே வரக் காண்கிறோம்.

| | | |
|---|---|---|
| தெளிகுவர் | தெளிவர் | பதி 73-15 |
| போல்வர் | போன்றிருக்கின்றனர் | ஐங் 289-3 |
| ஏர் தேர்வர் | அழகு செய்விப்பார் | அகம் 283-5 |
| படர்குவர் | செல்வார் | அகம் 75-9 |
| அகல்வர் | அகலாநிற்பர் | நற் 24-9 |
| உண்பர் | உண்பர் | நற் 355-7 |
| ஏசுவர் | பழியாநிற்பர் | குறு 82-54 |
| வினவுவர் | கேட்பர் | புறம் 154-3 |
| கொட்குவர் | சுற்றித்திரிகின்றனர் | புறம் 250-6 |
| உரைப்பர் | கூறுவர் | புறம் 365-11 |
| ஈன்மர் | பெறுவார்கள் | புறம் 74-7 |
| வருகுவர் | வந்துவிடுவர் | பத்து 5-17 |
| இழிவர் | நீக்குவர் | பரி 6-32 |
| களிப்பர் | களியாநிற்பர் | பரி 6-103 |
| அஞ்சுவர் | அஞ்சுவர் | கலி 52-10 |
| காண்பர் | காண்பார் | கலி 110-22 |
| செய்வர் | செய்யாநிற்பர் | குறள் 640 |
| கேட்பர் | கேட்பர் | குறள் 607 |
| எய்துவர் | களவுசெய்வர் | சிலம்பு 16-181 |
| தெளிகுவர் | தெளிந்துநினைப்பார் | சிலம்பு 16-174 |
| உரைப்பர் | கூறுவாராயினர் | சிலம்பு 29-1-31 |
| என்பர் | கூறுவர் | சிலம்பு 17-29-4 |
| உயிர் ஈவர் | உயிரையே நீத்தொழிவர் | மணி 2-44 |
| அறிகுவர் | அறிந்துகொள்வர் | மணி 24-109 |

மேலே காட்டிய உதாரணங்களில் தெளிகுவர்,செய்குவர், வருகுவர் போன்ற சொற்களில் குகர ஒற்று வருவது குறிப்பிடத்தக்கதாகும்.

4.2.1.2.4 -அல்-, -இல்-எதிர்மறை இடைநிலைகளுக்குப் பின்னர்

| | | |
|---|---|---|
| துயில் அறியலர் | விழித்திருப்பார் | ஐங் 12-4 |
| வாரலர் | வருபவர் அல்லர் | நற் 215-12 |
| அறியலர் | அறிந்திலர் | குறு 290-2 |
| அறிகிலர் | அறிந்திலர் | குறு 152-1 |
| கொள்ளலர் | கொள்ளார் | புறம் 182-6 |
| மெய் தீண்டலர் | மெய்யைச் சேரார் | கலி 102-10 |

குறுந்தொகையில் காணப்படும் அறிகிலர் என்பதில் காணப் படும் ககர ஒற்று தெளிகுவர் போன்றவற்றில் காணப்படும் ஒற்றோடு வைத்து எண்ணத்தக்கதாகும். எனவே இவ்வொற்று உடன்பாட்டில் மட்டுமன்றி எதிர்மறையிலும் வந்துள்ளது என எண்ணலாம்.

### 4.2.1.2.5 குறிப்பு வினையடிகளுக்குப் பின்னர்

தெரிநிலை வினைமுற்றுக்கள் மட்டுமன்றி குறிப்பு வினைமுற் றுக்களிலும் இவ்விகுதி காணப்படுகின்றது.

| | | |
|---|---|---|
| வலத்தர் | வெற்றிவீரர் ஆவர் | பதி51-30 |
| உளர் | உளர் | ஐங் 293-5 |
| உடையர் | உடையினர் | அகம் 54-10 |
| மதுகையர் | வலிமையுடையர் | குறு 290-2 |
| மெய்யர் | மெய்யினையுடையர் | புறம் 359-5 |
| மனத்தினர் | மனத்தையுடையார் | பத்து 1-132 |
| இலர் | இலர் | பரி 4-54 |
| உளர் | உளர் | கலி 30-8 |
| இலர் | இலர் | குறள் 728 |
| உளர் | உளர் | சிலம்பு 5-115 |
| இலர் | இலர் | மணி 16-56 |

### 4.2.1.2.6. வினையாலணையும் பெயர் விகுதிகட்குப் பின்னர் (-∅-, -அவ் -, -உ (ந்)-)

முன்னர்க் குறிப்பிட்டபடி வினையாலணையும் பெயர்களிலும் இவ்விகுதி ஏராளமாக உள்ளது. கொண்டனர், எறிவனர், நோக் கினர், நசைவர், வேண்டுநர், பொருந்தார், இறவார், உடன்றவர் போன்ற சொற்கள் ஏராளமாக உள்ளன. இவை ஒவ்வொன்றும் தனித்தனிச் சூழல்களைக் கொண்டவை என்பது இங்கு உணரத் தக்கது. இத்தகைய எடுத்துக்காட்டுக்களைத் தொல்காப்பிய உரை யாசிரியர்கள் யாரும் தந்திலர்.

| | | |
|---|---|---|
| ஓம்பினர் | பாதுகாப்பவர் | பதி 72-4 |
| கெழீஇயினர் | கூடினர் | அகம் 93-2 |
| அறிந்தனர் | அறிவார் | புறம் 138-11 |
| பெறீஇயர் | பெற்றவர் | பத்து 1-168 |

| | | |
|---|---|---|
| பயின்றனர் | பயின்ற ஆடல் மகளிர் | பரி 16-12 |
| கூடினர் | கூடின கணவர் | கலி 23-12 |
| அஞ்சினர் | அஞ்சிய பகைவர் | சிலம்பு 26-21 |
| இட்டனர் | சுடுகாட்டில் அழித்தவர் | மணி 23-75 |
| என்மர் | என்றுஆற்றுவிப்பார் | குறு 345 6 |
| உண்மர் | உண்பாரும் | பதி 24-18 |
| தின்மர் | தின்பாரும் | பதி 24-18 |
| கொண்மர் | கொள்வாரும் | பத்து 6-514 |
| என்மர் | கூறுவோரும் | பரி 12-49,51,54 56 |
| புகுவனர் | செல்வார் | ஐங் 432-3 |
| பெயர்வனர் | செல்பவர் | அகம் 301-21 |
| அரிவனர் | அரிபவர் | நற் 8-6 |
| எறிவனர் | எறிபவர் | புறம் 369-3 |
| காப்பனர் | காப்பவர் | புறம் 337-15 |
| அறைவனர் | சாற்றுபவர் | கலி 104-26 |
| உடைப்பனர் | பிளப்பவர் | சிலம்பு 10-134 |
| காணுநர் | காண்போர் | பதி 19-26 |
| வருநர் | வருபவர் | ஐங் 335-6 |
| வாழ்நர் | வாழ்வார் | அகம் 143-11 |
| தோள்பெறுநர் | தோளைக் கூடுவார் | நற் 333-8 |
| வழங்குநர் | வழிப்போவார் | குறு 283-6 |
| வேண்டுநர் | வேண்டுமவர் | புறம் 366-17 |
| புடையுநர் | புடைத்தவர் | பத்து 10-328 |
| உள்ளுநர் | கருத்திற்கொள்பவர் | பரி 2-35 |
| நல்குநர் | அருளின கணவர் | கலி 23-10 |
| களையுநர் | களைவார் | குறள் 879 |
| ஆடுநர் | ஆடுகின்ற மாந்தர் | சிலம்பு 27-231 |
| அறிகுநர் | ஆராய்ந்து செய்யும் இயல்புடையார் | மணி 18-146 |
| பொருந்தலர் | பகைவர் | அகம் 206-12 |
| ஒவலர் | நீங்காத தாயர் | குறு 34-1 |

| | | |
|---|---|---|
| குவளையர் | குவளைப்பூவை உடையர் | பதி 58-2 |
| இரவலர் | இரவலர் | ஐங் 2-2 |
| தழையர் | தழையுடையர் | அகம் 331-5 |
| தோணியர் | தோணியர் | நற் 111-8 |
| இளையர் | இளமையுடையோர் | குறு 216-7 |
| இரவலர் | இரப்போர் | புறம் 54 4 |
| இலையினர் | இலையினை உடையார் | பத்து. 6-401 |
| இசையினர் | இசையை உடையார் | பரி 17-4 |
| ஏழையர் | பேதையர் | கலி 47-16 |
| தெள்ளியர் | அறிவுடையார் | குறள் 374 |
| இழையினர் | அழகியகலன்களை அணிந்தவர்கள் | சிலம்பு 20-13 |
| வான வாழ்க்கையர் | தேவர்கள் | மணி 20-36 |
| தின்றவர் | தின்றவர் | அகம் 54-15 |
| சேர்ந்தவர் | அடைந்தவர் | புறம் 22-27 |
| நின்றவர் | நின்ற மாந்தர் | பரி 12-36 |
| போர்மலைந்து எழுந்தவர் | போர் செய்தற்கு மாறுபட்டு எதிர் வந்தவர் | கலி 26-23 |
| இரந்தவர் | இரந்தவர் | குறள் 224 |
| முற்றியவர் | முற்றுகையிட்டவர் | குறள் 748 |
| மேலவர் | உயர்ந்தவர் | குறள் 1016 |
| இறந்தவர் | இறந்தொழிந்தவர் | சிலம்பு 30-139 |
| பிறந்தவர் | பிறந்தவர் | மணி 16-86 |
| மீன்கொள்பவர் | மீன் பிடிப்போர் | அகம் 296-8 |
| கொல்பவர் | கொல்பவருடைய | நற் 3048 |
| பிரிகிற்பவர் | பிரிபவர் | நற் 391-8 |
| பிரிகிற்பவர் | பிரியவல்லவர் | குறு 22-2 |
| கொள்பவர் | கொள்பவர் | புறம் 5-6 |
| வருபவர் | வருபவர்கள் | பரி 20-32 |
| அணிபவர் | அணிவார் | கலி 9-15 |
| படுப்பவர் | படுப்பார் | கலி 9-12 |

| | | |
|---|---|---|
| கொள்பவர் | மேற்கொண்டொழுகு வார் | குறள் 981 |
| என்னுமவர் | கருதுவார் | குறள் 653 |
| நோற்கிற்பவர் | பொறுப்பவர் | குறள் 159 |
| ஏற்பவர் | எதிர்ப்பவர் | சிலம்பு 25-166 |
| ஆற்றாதவர் | ஆற்றாதவர் | கலி 88-4 |
| காணாதவர் | கண்டறியாதமகளிர் | குறள் 1219 |
| இனியவர் | மனக்கினிய காதலர் | ஐங் 415 – 4 |
| இல்லவர் | இல்லில் உள்ளார் | அகம் 34-16 |
| நல்லவர் | நல்லர் | புறம் 187.3 |
| நல்லவர் | நல்ல மகளிர் | கலி 32-18 |
| இயலவர் | ஒத்தவர் | பரி 9-56 |
| அல்லாதவர் | அல்லாதார் | குறள் 1077 |
| விண்ணவர் | விண்ணவர் | சிலம்பு 5-168 |
| நாடவர் | நாட்டில்வாழ்பவர் | மணி 18-103 |

### 4.2.2 -மார்

#### 4.2.2.1 தொல்காப்பியமும் உரையாசிரியர்களும்

தொல்காப்பியர் பலர்பால் விகுதி பற்றிக் கூறும்போது மார் ஈறும் ஒரு விகுதி எனக் குறிப்பிடுவார் (460, 692). இதனை ஆர் ஈறாகக் கொள்ளுதல் கூடாதா என்ற வினா அறிஞர்களிடையே உண்டு. முதல் உரையாசிரியராகிய இளம்பூரணர் இது பற்றி எதுவும் கூறவில்லை. மார் என்பது ஒரு தனி ஈறு என்பதில் அவருக்கு ஐயம் எதுவும் இல்லை. ஆனால் சேனாவரையர் "மார் எதிர்காலம் பற்றிவந்த ஆரேயாம். ஈகான் ஒற்றெண அடங்குமெனின்; அற்றன்று " (சூத்.7) எனக் கூறுவார் இவரை அடியொற்றி நச்சினார்க்கினியரும் இதுபற்றிக் கூறும்போது "மார் ஈறு ஆர் ஈற்றின் அடங்காதாயிற்று" (சூத்.7) என்பார். தெய்வச்சிலையாரும் இக்கருத்தையே கொண்டுள்ளார். ஏன் இதனையும் செய்கு என் பதையும் வினைஎச்சமாகக் கொள்ளக்கூடாது என்று வினவி "வினை எச்சம் பால் தோன்றாது; இவை பால் தோன்றலின் முற்று எனல் வேண்டும்." (200) என்பார். சாஸ்திரியும் இது ஆர் ஈறா என்ற வினாவை எழுப்பவில்லை.

இவ்விகுதிக்கு உதாரணம் தரவந்த இளம்பூரணர் (சூத். 7, 204)

ஆர்த்தார் கொண்மார் வந்தார்

என்பதையும், சேனாவரையர் (சூத். 7, 207)

கொண்மார், சென்மார்
என்மார் வந்தார், கொண்மார் வந்தார்

போன்றவற்றையும், நச்சினார்க்கினியர் (சூத். 7, 209) சேனாவரையரைப் பின்பற்றி

ஆர்த்தார் கொண்மார்
என்மார் வந்தாரே ஈங்கு

போன்றவற்றையும், தெய்வச்சிலையார் (சூத். 7)

ஆ கொண்மார் வந்தார்

போன்றவற்றையும், கல்லாடனார் (சூத். 7, 210)

ஆர்த்தார் கொண்மார் வந்தார்
உண்மார், தின்மார்

போன்றவற்யையும் தந்து செல்வர். மேலும் இவர்கள் "பாடில் மன்னரைப் பாடன்மார் எமரே" போன்றவற்றைத் தந்து இவை ஆர் ஈறு என்றும் கூறுவர்.

### 4.2.2.2 மார் ஈறா ?

ஆனால் வேறு பல அறிஞர்கள் மார் ஈறு எனக் கொள்ளுவதை விட இதனை ம் + ஆர் எனப் பிரித்து மகரம் காலம் காட்டும் இடைநிலை என்று கருதலாம் எனக் கூறியுள்ளனர். கால்டுவெல் (856, 216-41), இராமஸ்வாமி ஐயர் (1938), வரதராசன் (1954) இளைய பெருமாள் (1958, 1964), இஸ்ரயேல் (1973) போன்றவர்கள் இதனை ஆர் ஈறாகவே கொள்ளுவர் இது பற்றிப் பின்னர்க் காண்போம்.

### 4.2.2.3 முற்றா எச்சமா?

முதலில் இது முற்றா அல்லது எச்சமா என்பது பற்றிப் பார்ப்போம். சங்க இலக்கியங்களைப் பொறுத்தமட்டில் மார் என்பது நூற்று மூன்று இடங்களில் வருகின்றது. அவற்றுள் எட்டு இடங்கள் பெயருடன் வருவன.

| | எச்சம் | வி. அ. பெயர் | வினை முற்று | தொழிற் பெயர் | எதிர்மறை முற்று | பெயர் |
|---|---|---|---|---|---|---|
| பதி | 3 | 0 | 0 | 0 | 0 | 0 |
| ஐங் | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| அகம் | 25 | 2 | 0 | 1 | 0 | 2 |
| நற் | 6 | 1 | 0 | 0 | 1 | 0 |
| குறு | 6 | 0 | 0 | 0 | 0 | 0 |
| புறம் | 10 | 3 | 0 | 0 | 3 | 3 |
| பத்து | 14 | 0 | 1 | 0 | 0 | 0 |
| பரி | 2 | 4 | 0 | 0 | 0 | 0 |
| கலி | 12 | 0 | 0 | 0 | 0 | 1 |
| குறள் | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| சிலம்பு | 1 | 0 | 0 | 0 | 0 | 2 |
| மணி | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |

தோழிமார் (அகம் 48-5), ஐமார் (புறம் 342) போன்ற இடங்களில் இது பலர்பால் காட்டும் பெயர் விகுதியாக வந்துள்ளது. மீதி உள்ள இடங்களில் இது வினையில் வந்துள்ளது. அவற்றிலும் பெருவாரியான இடங்களில் வினை கொண்டு முடிவதாக உள்ளது. பொதுவாக ஒரு வினைமுற்று அதே பால் காட்டும் மற்றொரு வினைமுற்றுடன் வருவது தமிழ் இலக்கியங்களில் காணப்படாத ஒரு பண்பு அன்று. எத்தனையோ இடங்களில் இவ்வாறு வருதல் காணலாம்.

இதனைப் பிற்கால இலக்கண அறிஞர்கள் முற்றெச்சம் என்பர், முற்று அமைப்பினைக் கொண்டு, ஆனால் பொருளில் எச்சப் பொருள் தரின் அதனையே இப்பெயரால் குறிப்பர் என எண்ணலாம்.

> "ஆடினிர் பாடினிர் செலினே"
> ஆடிப்பாடிச் சென்றால் — புறம் 109
> "உய்த்தனர் விடாஅர்"
> செலுத்தி விடார் — குறு 350

"...... அரிய வென்னார்
வந்தனர் தோழிநங் காதலோரே"
அரிய என்னாமல் வந்தார் நம் காதலர் ஐங் 352

போன்ற இடங்கள் இப்பண்பைக் காட்டும். ஆனால் இவை செய்து என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சமாகவே கருதப்படுகின்றன. ஆனால் 'மார் அவ்வாறன்றி, வினைகொண்டு முடியும் இடங்களில் எல்லாம் 'பொருட்டு' என்னும் பொருளில் வரும் செயவென் வாய்பாட்டு வினையெச்சம் போன்று பயன்படுதல் காணத்தக்கது.

"நல்விருந் தயர்மார் ஏமுற"
நல்ல விருந்தாற்றுதற்கு இன்பமுற அகம் 205
"அருங்கட னிறுமார் வயவ ரெறிய"
அருங்கடன் முடித்தற்கு எறிய புறம் 282

இந்நிலையில் இது பிற முற்றெச்சங்களைப் போலன்றி செயவென் வாய்பாட்டு எச்சம் போன்று வருதல் இதற்கும் பிறவற்றிற்கும் உள்ள வேறுபாடு ஆகும். இதற்குக் காரணமும் இல்லாமல் இல்லை. இதன்கண் இறந்காலம் காட்டும் இடைநிலைகள் இல்லை. மார் என்ற ஈற்றுச் சொல் எப்போதும் இறப்பில்காலத்தில் மட்டுமே வருகின்ற நிலையைக் காண்கிறோம்.

மேலும் பெரும்பான்மையான இடங்கள் வினைகொண்டு முடிதலாகவே உள்ளது. ஆனால் இந்நிலை பிற ஈற்று முற்றுக்களுக்கு இல்லை. இதனால்தான் தொல்காப்பியர் இதற்கெனத் தனிச் சூத்திரம் வகுத்து "காலக் கிளவியொடு முடியும் என்ப" என வியந்து கூறினார் என எண்ணலாம்.

பொருட்டு என்னும் எச்சப் பொருளில் பெரும்பாலான இடங்களில் இது வரினும் முற்றெச்சம் போல நின்று பால் காட்டி நிற்கின்ற நிலையில்தான் இதனை எச்சமாகக் கொள்ளுவதற்குத் தயங்கினார் தொல்காப்பியர் எனக் கருதலாம். சங்க இலக்கியங்களில் மிகப் பெரும்பான்மையான இடங்களில் இன்னொரு வினையுடன் வருவது தொல்காப்பியத்துக்கு அரண் செய்து நிற்கும். இதனால் தான் தெய்வச்சிலையார் முன்னர்க் குறிப்பிட்டது போன்று "இதனையும் செய்கு என்பதனையும் வினையெச்சம் என்றதனாற் குற்றம் என்னை எனின், வினை எச்சம் பால் தோன்றாது; இவை

பால் தோன்றலின், முற்று எனல் வேண்டும்'' என்றார். ஆனால் சில இடங்கள் இம்மாரீற்றுச் சொல் பிற பால் சொற்களுடன் வருதலை உணர்த்தி நிற்கின்றன.

''—— .... —கானவன்

கடவுள் ஓங்குவரை பேண்மார் வேட்டெழுந்து'' நற் 165

'' —.... — இளம்பெருஞ் சென்னி
குடிக்கடன் ஆகலிற் குறைவினை முடிமார்
செம்புறழ் புரிசைப்பாழி நூறி..——....'' அகம் 375

போன்ற இடங்களிலும், இளையபெருமாள் தரும்

''நனி விருந் தயர்மார் தேர்வரும்'' குறு 155

''ஈங்கே குமா ருளெனே'' குறு 173

''என்னகத் திடும்பை களைமார் நின்னொடு
'' ......... —— .... ....
துணையீ ரோதியென் தோழியும் வருமே'' அகம் 107

போன்ற இடங்களிலும் பலர்பால் எழுவாய் இல்லாமை காணத்தக்கது இந்நிலையில் இம்மாரீற்றுச் சொற்களை மாரீற்று வினையெச்சமாகவே கொள்ளுதல் வேண்டும். இவ்விடங்களில் எல்லாம் 'பொருட்டு' (பேண்மார் = வழிபடும் பொருட்டு; களைமார் = நீக்கும் பொருட்டு) என்ற பொருளைத் தந்து நிற்பதும் இது ஒரு வினையெச்சம் என்பதைக் காட்டும்.

அவன் உண்பான் வந்தான்

போன்றவற்றில் பால் தோன்றி நிற்பினும் இதனை யாரும் வினைமுற்றாகக் கொள்ளுவதில்லை. இதற்குக் காரணம் அவன் உண்பான் வந்தாள், அவர் உண்பான் வந்தார் போன்று பிற எழுவாய் ஏற்று வருதலே ஆகும். இந்நிலையை மார் ஈற்றுக்கும் பொருத்திப் பார்த்தால் அதுவும் பலர்பால் மட்டுமன்றிப் பிற பால் எழுவாய்களையும் கொண்டு நிற்கின்ற நிலையில் வினையெச்சமாகவே கொள்ள வேண்டும். எனவே மாரீறு எச்சமாகவும் வரும் எனக் கொள்ளுதல் பொருந்தும். உண்பான் என்பதில் காணப்படுவதைப் பான் ஈறு

என இலக்கண அறிஞர்கள் கொள்ளுதற்குக் காரணம் இதனை ஆன் ஈறாகக் கொள்ளக் கூடாது என்பதற்காகவே. இந்நிலையில் மாரீற்றை ஒரு வினையெச்சமாகக் கொள்ளுவதில் தவறில்லை. (அகத்தியலிங்கம், 1972)

### 4.2.2.4 வினையாலணையும் பெயர்

வினையெச்சமாக மட்டுமன்றி இவ்வீறு உடன்பாட்டு வினையாலணையும் பெயராகவும் (அகம் 2, நற் 1, புறம் 3, பரி 4) வினைமுற்றாகவும் (பத்து 1) பழந்தமிழ் இலக்கியங்களில் வந்துள்ளது.

"நோன்மார் அல்லர்........" நற் 208 6

"இவரே, புலனுழு துண்மார் புன்க ணஞ்சித்
தமதுபகுத் துண்ணுந் தண்ணிழல் வாழ்நர்" புறம் 46 4

"வில்லுழு துண்மார் நாப்ப ணொல்லென" புறம் 170-4

"...........தமியர் சென்மார்
நெஞ்சுண மொழிப... ......" அகம் 157-9

"...... ...ஓசை ஓர்மார்
திருத்திக் கொண்ட அம்பினர் .... " அகம் 171-9

போன்ற இடங்களில் இது வினையாலணையும் பெயராக உள்ளது

"..............செல்வர்
.........காண்மார்... " பத்து 6.443

என்பதில் இது வினைமுற்றாக வருகிறது. இந்நிலையில் இது பிற விகுதிகளைப் போன்றே காணப்படுகிறது.

பொருள் எழுதும் உரையாசிரியர்களும் 'உழுதுண்ணும் கற்றோரது' (புறம் 46), 'வில்லாகிய ஏரால் உழுதுண்பாருடைய' (புறம் 170), 'தனியராகச் செல்லும் தலைவர்' (அகம் 157), 'பொறுப்பவர் அல்லர்' (நற் 208), 'செல்வர் காண்டாராக' (பத்து. 6) என உரை எழுதுதல் காணத்தக்கது. பொறுப்பவர் அல்லர் என்பதை பொறுப்பார் அல்லர் எனப் பொருள்கொண்டு நோன்மார் என்பதை வினைமுற்றாகவும் கொள்ளலாம். எங்ஙனமாயினும் இது பயனிலையாகவே வந்துள்ளது. பிற வேற்றுமை உருபை ஏற்று எழுவாயாகவும் வருதல் காணத்தக்கது. இவ்விடங்களில் இவை வினை

கொண்டு முடிவதில்லை. பிற பலர்பால் விகுதிகளைப் போன்றே காணப்படுகின்றன. இதனால்தான் தொல்காப்பியம் இதனை பலர்பால் ஈறு என்று கருதுகிறது என எண்ணலாம்.

பெரும்பான்மையான இடங்களில் இது வினை கொண்டு முடிகின்ற காரணத்தால்தான் ''காலக்கிளவியொடு முடியும் என்ப'' எனத் தொல்காப்பியம் கூறிப்போந்தது எனக் கருதலாம்.

### 4.2.2.5 ஆரீறா?

தொல்காப்பியம் பலர்பால் காட்டும் விகுதிகளில் மாரீறும் ஒன்று எனக் கிளவியாக்கத்திலும், வினையியலிலும் கூறிப் போந்துள்ளமை முன்னர்க் குறிப்பிடப்பட்டது. முன்னர்க் குறிப்பிட்டது போன்று இளம்பூரணர் இதுபற்றி எந்த ஐயப்பாடும் இல்லாமல் இருந்த போதிலும் பிற உரையாசிரியர்கள் மாரீறு ஆரீற்றில் அடங்காதோ என்ற வினாவை எழுப்பியுள்ளனர். முதன் முதல் இந்த வினாவை எழுப்பிய சேனாவரையர் ''மார் எதிர்காலம் பற்றிவந்த ஆரேயாம். ரஃகான் ஒற்றெனெ அடங்கு மெனின்; அற்றன்று. ஆரேயாயின் கொண்மார் என்புழி மகரம் காலம் பற்றி வந்ததோர் எழுத்தாகல் வேண்டும்; உண்பார், வருவார் எனக் காலம் பற்றி வரும் எழுத்து முதனிலைக் கேற்றவாற்றான் வேறுபட்டு வருமன்றே; அவ்வாறன்றி உண்மார் வருவார் என எல்லா முதனிலை மேலும் மகரத்தொடு கூடி வருதலானும், வினை கொண்டு முடிதற்கேற்பதொரு பொருள் வேறுபாடுடைமையானும்ஆர் ஈறு அன்று வேறெனவே படும் என்பது'' (சூத்.7) எனக் கூறுவார். எனவே இவர் கருத்துப்படி (1) ப்,வ் போலன்றி மகர வொற்று எல்லா வினைகளுடனும் வருவதும், (2) வினையொடு முடிதலும் இதனை ஆர் ஈறு எனக் கொள்ளுவதற்குத் தடையாகவுள்ளன.

இதே கருத்தினைத்தான் நச்சினார்க்கினியரும் இவரைப் பின்பற்றிக் கூறியுள்ளார். தெய்வச்சிலையார் வினை கொண்டு முடிதல் என்பதை வேறொரு விதமாகக் கூறுவார். வினை கொண்டு முடியும் போது இவை ''கொண்மார் வந்தார்'' போன்றவற்றில் கொண்மார் என்பது 'கொள்ளும் பொருட்டு' என்னும் பொருளில் வருவதால் வினையெச்சமாக வருகின்ற நிலையில் ''மார் என்பது ரகரத்துள் அடங்காதோ வெனின், வினைக்கண் ஏனைய போல் முற்றிநில்லாது எச்சம்போல வருதலானும்___''

(சூத். 7) எனக்கூறுவார். மேலும் இவர் ''பெயர்க்கண் ஆர்ஈறாகி வருமிடத்துப் பன்மையுணர்த்தாத சொற்கள் மார் ஈறாகி வர வேண்டுதலானும் வேறுபடுத்தோதப்பட்ட தென்க' (சூத். 7) என்றும் கூறுவார். இதற்குக் காரணம் இத்தகைய விகுதிகள் பெயரிலும் வரும் என்று இவர் எண்ணியதுதான். இதனால் தான் இவர் தாய்மார், தங்கைமார் ஆகிய எடுத்துக்காட்டுக்களை யும் தந்துள்ளார். இவ்விகுதிகள் வினையில்தான் வருவன என்பது நன்கு விளக்கப் பட்டுள்ளமையின் (அகத்தியலிங்கம், 1983b) இக்கார ணம்பொருந்தாது என எளிதில் கூறிவிடலாம். இந்நிலையில் மகர வொற்று எல்லா வினையடிகளுடனும் வருவதும், இவ்வீற்றுச் சொற்கள் வினை கொண்டு முடிவதுமே இதனைத் தனியொரு ஈறாக் கொள்ளவேண்டியதற்குக் காரணங்கள் என எண்ணலாம்.

### 4.2.2.6 எச்சமே

முன்னர்க் குறிப்பிட்டது போன்று மாரீறு எழுபத்தொன்பது இடங்களில் வினையுடன்தான் வருகின்றது. இவை அனைத்துமே ''பொருட்டு''என்னும் பொருளில்தான் உள்ளது. செயவென் எச்சத் தைப் போன்று வருவதால்தான் தெய்வச்சிலையார் ''முற்றில்லாது எச்சம் போல வருதலானும்'' எனக் கூறினார். பல இடங்களில் (74) இவ்வீற்று வினைகளின் எழுவாயாகப் பலர்பால் பெயர்கள் வரினும் சில இடங்களில் வேறு பெயர்களும் வரும் நிலையில் இதனை முற்றெச்சம் போலக் கொள்ள முடியாது என்பதும், மார் ஈற்று எச்சம் எனவே கொள்ளவேண்டும் என்பதும் முன்னரே நிறுவப்பட்டுள்ள நிலையில் இதனை வினையொடு வரும் இடங் களைப் பொறுத்தமட்டில் மாரீற்று வினைமுற்று எனக் கொள்ளுதல் முடியாது. எனவே எச்சமாக வருவதை எச்சமாகவே கொள்ள வேண்டும்.

நான் கொண்மார் வந்தேன்

போன்றவற்றில் வரும் மார் எச்ச விகுதியேயாகும். வினைமுற்று விகுதியன்று. 'ஏகுமார் உளனே' போன்றவை எச்சம் என்பதையே காட்டி நிற்கும்.

சங்க இலக்கியங்களில் சில இடங்களில் இவ்வீற்றுச் சொற் கள் வினையாலணையும்பெயர்களாகவும், வினைமுற்றாகவும்

வந்துள்ளது என்பது முன்னரே காட்டப்பட்டது. இவ்விடங்களில் இவ் விற்றுச் சொற்கள் வினை கொண்டு முடியவில்லை. பிற வினைமுற்று விகுதிகளைப் போலவே உள்ளன. இங்கு இச்சொற்கள் அனைத்தும் இறப்பில் காலத்தையே காட்டி நிற்கின்றன.

### 4.2.2.7 எதிர்மறை முற்று

பழந்தமிழ் இலக்கியங்களில் இச்சொல் எதிர்மறையில்

பாடன்மார் எமரே (புறம் 375 21)

போன்ற இடங்களில் வந்துள்ளமை காண்கிறோம். இதனை ஆர் ஈறு எனக் கொண்டால் இவ்வீறு அல் எதிர்மறைக்குப்பின்னர் வருவது சிக்கலாகவே உள்ளது. மகரத்தைக் காலம் காட்டும் இடைநிலையாகக் கொள்ளும்போது எதிர்மறைக்குப் பின்னர் கால இடைநிலை வருவதாகக் கொள்ள வேண்டும் இது தமிழ்மொழியமைப்புக்குப் பொருந்துவதாக இல்லை. தமிழ் வினைச் சொற்களில் பொதுவாகக் கால இடைநிலையோ அல்லது எதிர்மறையோதான் வரும். இரண்டும் இணைந்து வருதல் வழக்கமன்று

காணான், காணலன் காண்கிலன் போன்றவற்றில் எதிர்மறை ஒட்டினைக் காண்கிறோம். ஆனால் கால இடைநிலைகள் இல்லை. இது போன்றே

வந்தான், கண்டனன், செய்வன்.

போன்றவற்றில் எதிர்மறையைக்காட்டும் ஒட்டுக்களைக் காணமுடிவதில்லை. எனினும்

கண்டிலன், செய்திலன்

போன்றவற்றில் இரண்டும் காணப்படுகின்றன. இவை கண்டு + இலன் எனக் கருதப்படவேண்டும் என விளக்கி நிற்கலாம். இவ்வாறு இரண்டும் காணப்படினும் கால இடைநிலை முன்னும் அதன் பின்னர் எதிர்மறையும் காணப்படுகின்றன. ஆனால் காணன்மார் போன்றவற்றில் எதிர்மறைக்குப் பின்னர் மகரவொற்று காணப்படுவது மகர ஒற்றைக் கால இடைநிலையாகக் கொள்ளுவதற்குத் தடையாகவே உள்ளது.

சேனாவரையரும் இத்தகைய எதிர்மறைச் சொற்கள் ''பாடுவார், காண்பார், என்னும் ஆரீற்று முற்றுச்சொல்லின் எதிர்மறையாய் ஒருமொழிப் புணர்ச்சியான் மகரம் பெற்று நின்றன.

மாரீறுமின், இவை பாடாதொழிவார், காணாதொழிவார் என எதிர்மறைப் பொருண்மையுணர்த்து மாறில்லையென்க'' (சூத். 207) என்பார். நச்சினார்க்கினியரும், 'நிலவன் மாரே புலவர்' (புறம் 375-18) ''பாடின் மன்னரைப் பாடன்மார் எமரே'' (புறம் 375-21 ''நோய்மலி வருத்தம் காணன்மார் எமரே'' (நற் 64-13) ஆகியவற்றைத் தந்து 'இவை 'நிலவுக, பாடுக, காண்க' என்னும் வியங்கோட்குஎதிர்மறை என்று உணர்க'' (சூத். 209) என்பார். இவ்வாறு வியங்கோளின் எதிர்மறை என்று கூறுவற்குக் காரணம் இவை மார் ஈற்றுச் சொல்லல்ல எனக் காட்டுவதற்கே எனக் கொள்ளலாம். ''நிலவுக'' போன்றவற்றின் எதிர்மறை 'நிலவற்க' போன்றவையே. எனினும் மாரீறு அல்ல என மறுக்க வேண்டியுள்ளமையின் இவ்வாறு கூறினார் எனக் கருதலாம்.

### 4.2.2.8 பெயர் கொண்டு முடிதல் அவசியமா ?

இவ்வாறு இரு பெரும் உரையாசிரியர்களும் மறுப்பதற்குக் காரணம் மாரீறு வினைகொண்டே முடியும்; பெயர் கொண்டு முடியாது என எண்ணியதால்தான் எனக் கருதலாம்.

''முன்னையனவேயன்றி மாரீற்றுச் சொல்லும் பல்லோர் படர்க்கையையுணர்த்தும். அஃது அவை போலப் பெயர் கொள்ளாது வினை கொண்டு முடியும்'' எனச் சேனாவரையரும், ''அஃது அவை போலப் பெயர் கொள்ளாது வினை கொண்டு முடியும்'' என நச்சினார்க்கினியரும் கூறுதல் இங்கு எடுத்துக் காட்டத்தக்கன. இதனால்தான் பெயர் கொண்டு முடியும் இடங்களைக் கண்டதும் அவை மாரீறு அல்ல என மறுத்துள்ளனர்.

ஆனால் தெய்வச்சிலையாரோ இவற்றை மாரீறு எனக்கொண்டு சூத்திரத்திற்குப் பொருள் எழுதும்போது ''அது பெயரோடு முடிதலேயன்றி வினையோடும் முடியும் என்று சொல்லுவார்'' எனக் கூறி (காலக் கிளவியொடும் முடியும் என்ப என எடுப்பார்) இவ்வெடுத்துக்காட்டுக்களுக்குத் தகுதி காண்பார். 'பெயரொடு முடிதலேயன்றி' எனக் கூறும்போது பெயரோடு முடிதலே 'பெரும்பான்மை என்ற பொருள் படக் காண்கிறோம். ஆனால் பழந்தமிழ் இலக்கியங்களில் வினையோடுதான் பெரும்பான்மையாக முடிகிற

பண்பைக் காண்கிறோம். எனவே தெய்வச்சிலையார் கருத்தும் பொருந்துவதாக இல்லை.

இம்மகரம் காலம் காட்டும் இடைநிலையாக இருக்க முடியாது என்பது முன்னரே கூறப்பட்டது. உரையாசிரியர்களும் இதனை எழுத்துப்பேறு என்கின்றனர். எழுத்துப்பேறு எனக் கொள்ளுவதற்கும் தடையாகவே உள்ளது. ஏதாவது ஒரு காரணம் இருந்தாலன்றி அவ்வாறு கூறமுடியாது. இவ்வாறு கூறுவது இயற்கையாக இல்லை. இந்நிலையில் இதனை மார் ஈறு எனக்கொள்ளுதலே பொருத்தம் என்பார் சண்முகம் (இதுபற்றிய விவாதத்தில்). இது சரியெனவே படுகின்றது. மகரம் வருவதற்குரிய சூழ்நிலை எதுவும் இல்லை. இந்நிலையில் இதனை மாரீறு எனவே கொள்ளுதல் வேண்டும்.

அடுத்து அர், ஆர், ப என்பவை பெயர் கொண்டு முடிய வேண்டுமா என்பதும் ஆராய்தற்குரியது. வினைமுற்றுக்கள் அனைத்தும் பெயர் கொண்டு முடிய வேண்டிய அவசியம் இல்லை. அவற்றிற்கெனத் தனி எழுவாய்கள் அமைந்திருக்க வேண்டுமேயன்றி, அவை பெயர் கொண்டு முடிய வேண்டியதில்லை. "பாடன் மார் எமரே" போன்றவையும் 'எமர் பாடன்மார்' என்பதன் திரிபே அன்றி வேறில்லை.

கண்ணன் வந்தான்

போன்றவை

வந்தான் கண்ணன்

என மாறி நிற்கின்றனவேயன்றி எப்போதும் இவ்வாறு பெயர் கொண்டு முடிய வேண்டும் என்ற கட்டாயம் எதுவும் இல்லை. தொல்காப்பியம் இவ்வாறு எங்கும் கூறியதாகத் தெரியவில்லை. இந்நிலையில் உரையாசிரியர்கள் "அஃது அவைபோல பெயர் கொள்ளாது........." எனக் கூறுவதும் பொருத்தமாக இல்லை. (காண்க; அகத்தியலிங்கம், 1972).

### 4.2.2.9 மூன்று நிலைகள்

எனவே இதுகாறும் கூறியவற்றால் மூன்றுவித நிலைகளைக் காணலாம்.

(1) கொண்மார்வந்தார்

போன்ற இடங்களில் இது மார் ஈற்று வினையெச்சம்.

(2) தமியர் சென்மார்
நெஞ்சுண மொழிப

போன்று வினையாலணையும் பெயர்களாகவும் வினைமுற்றாகவும் வரும் இடங்களில் -ம்- கால இடைநிலையாக வரும்போது இது ஆர் ஈறு.

(3) காணன்மார் எமரே

போன்று எதிர்மறைக்குப் பின்னர் வரும்போது மார் ஈற்று முற்று.

இளையபெருமாள் சுட்டிக் காட்டுவது போல் இதனை மாரீறு எனக் கொண்டால் -மர் வரும் என்மர் போன்றவற்றையும் மர் விகுதியாகக் கொள்ள வேண்டி வருமே என எண்ண வேண்டிய தில்லை. என்மர் போன்றவை என் + ம் + அர் என எடுக்கப் படவேண்டியவையே. அவை மர் ஈறு அல்ல.

### 4.2.2.10 சூழல்

இவ் விகுதி -அல்- எதிர்மறைக்குப் பின்னர் வரும்.

இது நற்றிணையில் ஒரு இடத்திலும், புறநானூற்றில் மூன்று இடங்களிலும் வரக் காண்கிறோம்.

### 4.2.2.10.1 -அல்- எதிர்மறைக்குப் பின்னர்

| | | |
|---|---|---|
| காணன்மார் | காணாதொழிவார் | நற் 64-13 |
| நிலவன்மார் | இலராயொழிவார் | புறம் 375-18 |
| பாடன்மார் | பாடாதொழிவார் | புறம் 375-21 |
| கேளன்மார் | கேளாதொழிவார்கள் | புறம் 389-17 |

### 4.2.3 - ஆர்

முன்னர்க் குறிப்பிட்டது போல பழந்தமிழ் இலக்கியங்களில் காணப்படும் விகுதிகளில் இதுவும் முக்கியமான ஒரு விகுதியாகும். ஒரு சில இடங்களில் இதுவும் அர் விகுதியும் பதில்நிலை வழக்கில் வரினும் (வருவர், வருவார்) பெரும்பாலான இடங்களில் துணைநிலை வழக்கிலேயே இவை வருகின்றன. -அன்- சாரியையை அடுத்து அர் விகுதி வர இதுவோ எதிர்மறையிலும். பிற இடங்களிலும் வரக் காணலாம். இறப்பில் கால இடைநிலைக்குப் பின்னர் இரு விகுதிகளும் வருதல் உண்டு. இந்நிலையை மிகக் குறைந்த சில இடங்களிலேயே காண்கிறோம்.

பொதுவாக இவ்விகுதி- Ø- எதிர்மறைக்குப் பின்னரே அதிக மான இடங்களில் வந்துள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கது. இதனைக் கீழே உள்ள பட்டியல் காட்டும்.

-ஆர்

| | எதிர்மறை | பிற |
|---|---|---|
| பதி | 23 | 13 |
| ஐங் | 21 | 0 |
| அகம் | 47 | 4 |
| நற் | 25 | 3 |
| குறு | 59 | 11 |
| புறம் | 48 | 9 |
| பத்து | 4 | 1 |
| பரி | 11 | 74 |
| கலி | 37 | 215 |
| குறள் | 68 | 436 |
| சிலம்பு | 27 | 80 |
| மணி | 25 | 28 |

மேலே காட்டிய பட்டியலைக் கூர்ந்து நோக்கின் முன்பழந்தமிழ் நூல்களில் எல்லாம் ஆர் விகுதி எதிர்மறையில் அதிகமாக வர, பின்பழந்தமிழ் நூல்களிலோ, பிற சூழல்களிலோதான் அதிகமாக வரக் காண்கின்றோம். கலித்தொகையில் 1:6 எனவும், பரிபாடலில் 1:7 எனவும், திருக்குறளில் 1:7 எனவும் வந்துள்ளது. சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய நூல்களிலும் இந்நிலையே காணப்படுகின்றது. இதனால்தான் இந்நூல்களைப் பின்பழந்தமிழ் நூல்கள் எனக் கருதுகிறோம். புறநானூறு போன்ற நூல்களில் ஆர் விகுதி பெரும்பான்மையாக எதிர்மறைக்குப் பின்னரே வருவது இங்கு உணரத்தக்கது. முன்னர்க் குறிப்பிட்டபடி ஏன், ஏம், ஆன், ஆள் போன்ற விகுதிகளிலும் இதே நிலையைத்தான் காண்கிறோம். ஆனால் இதுபற்றி உரையாசிரியர்கள் எதுவும் கூறவில்லை.

பழந்தமிழ் நூல்களில் இந்நிலை ஒரு ஒழுங்காகவே காணப்படு கின்றது.

### 4.2.3.1 உரையாசிரியர்கள்

இவ்விகுதிக்கான எடுத்துக்காட்டுக்களைத் தரவந்த இளம் பூரணர் (சூத். 7, 203)

உண்டார் உண்ணாநின்றார் உண்பார்

போன்றவற்றையும், சேனாவரையர் (சூத். 7, 206)

உண்டார் உண்பார்
உண்ணாநின்றார் கரியார்

போன்றவற்றையும், நச்சினார்க்கினியர் (சூத். 208, 217)

உண்டார் உண்ணாநின்றிலார் உண்ணார்
உண்டிலார் உண்கின்றிலார் கரியார்
உண்ணாநின்றார் உண்குவார்
உண்கின்றார்

போன்றவற்றையும், தெய்வச்சிலையார் (சூத். 199, 200)

உண்டார் உண்பார்
உண்ணா உண்ணார்
நின்றார்

போன்றவற்றையும், கல்லாடனார் (சூத். 7, 209, 216, 217)

உண்டார் உண்கின்றிலார் உடையார்
உண்டிலார் உண்பார் நிலத்தார்
உண்ணாநின்றார் உண்குவார் பொன்னன்னார்
உண்கின்றார் உண்ணார் கரியார்
உண்ணா அல்லார்
நின்றிலார்

போன்றவற்றையும் தந்து சென்றுள்ளனர்.

ஆனால் பழந்தமிழ் நூல்களை ஆராயின் இவ்வுரையாசிரி யர்கள் கூறிச் சென்ற ஒரு சில உதாரணங்கள் அவற்றில் காணப்படுவதில்லை என்பதும், அங்கே காணப்படும் சில இவர் களால் தரப்படவில்லை என்பதும் நன்கு விளங்கும்.

உரையாசிரியர்கள் தரும் நிகழ்கால வினைமுற்றுக்கள் பழந் தமிழ் நூல்களில் காணப்படாதது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். உண்ணாநின்றார், (இளம்., சேனா., நச்., தெய்., கல்.) உண்கின் றார் (நச்., கல்.) ஆகியவை பழந்தமிழ் இலக்கியங்களில் காணப் படாதவை. இது போன்றே அமைகல்லார் (ஐங் 457-3) போன்ற உதாரணங்களையும் இவர்களிடம் காண முடிவதில்லை.

### 4.2.3.2 சூழல்கள்

இவ்விகுதி

1. இறந்தகால இடைநிலைகளுக்குப் பின்னரும்
2. இறப்பில்கால இடைநிலைகளுக்குப் பின்னரும்
3. -∅-எதிர்மறைக்குப் பின்னரும்
4. குறிப்பு வினையடிகளுக்குப் பின்னரும்
5. வினையாலணையும் பெயர் விகுதி-∅-க்குப் பின்னரும்

வரும்.

#### 4.2.3 2.1 இறந்தகால இடைநிலைகளுக்குப் பின்னர்

இவ்விகுதி -இன்- உள்ளிட்ட பல்வேறு இறந்தகால இடை நிலைகளுக்குப் பின்னர் வருதல் காணலாம். முன்னர்க் குறிப் பிட்டபடி முன்பழந்தமிழ் நூல்களில் பெரும்பான்மையாக -∅- எதிர்மறை இடைநிலைகளுக்குப் பின்னர் வருகின்ற நிலையில் ஐங்குறுநூறு, நற்றிணை, குறுந்தொகை, பத்துப்பாட்டு, மணிமே லை ஆகிய நூல்களில் இச்சூழலில் வரவில்லை என்பது குறிப் பிடத்தக்கது. இது வருகின்ற பிற நூல்களிலும் ஒரு சில இடங்களி லேயே வரக் காண்கிறோம். பதிற்றுப்பத்து (2), அகம் (2), புறம்(1) ஆகிய நூல்களில் இது மிகக் குறைவாகவே உள்ளது. அகநானூற் றில் உயர்வு ஒருமையாகவே வந்துள்ளது.

| | | |
|---|---|---|
| பூண்டார் | பூண்டார் | பதி 8 (பதிகம்) |
| ஆயினார் | ஆயினர் | பதி 3 (பதிகம்) |
| கொண்டார் | கொண்டார் | புறம் 112-5 |
| ஊடினார் | வெறுத்தார் | ரி 20-67 |
| இகந்தார் | இகழ்ந்தார் | கலி 112-14 |
| தந்தார் | உண்டாக்கினார் | குறள் 1182-1 |

| | | |
|---|---|---|
| கற்றார் | கற்றார் | குறள் 722 |
| வளர்த்தார் | வளர்த்தார் | சிலம்பு 17-13-2 |
| போயினார் | போயினர் | சிலம்பு 24-1-9 |

### 4.2.3.2.2 இறப்பில்கால இடைநிலைகளுக்குப் பின்னர்

இச்சூழலிலும் இது மிக அருகியே காணப்படுகின்றது. பதிற்றுப் பத்து, ஐங்குறுநூறு, புறநானூறு, மணிமேகலை ஆகிய நூல்களில் காணப்படவில்லை. இன்னும் சில நூல்களில் வினையாலணையும் பெயர்களில் மட்டுமே காணப்படுகின்றது.

மேலும் இது பத்துப்பாட்டில் மகர இடைநிலையை அடுத்து வருவதும் குறுந்தொகையில் இவ்விடைநிலைக்குப்பின் -அன்- சாரியை அடுத்து வருவதும் குறிப்பிடத்தக்கது.

| | | |
|---|---|---|
| என்மனார் | என்று கூறி நிற்பர் | குறு 234-3 |
| அறிவார் | அறியவல்லார் | நற் 269-9 |
| காண்மார் | காண்பார் | பத்து 6-443 |
| ஊட்டுவார் | உண்ணச் செய்யா நிற்பர் | பரி 10-94 |
| புடைப்பார் | புடையா நிற்பர் | பரி 9-46 |
| என்பார் | என்று வாழ்த்தா நிற்பர் | பரி 10-86 |
| காண்பார் | காண்பார் | கலி 63-1 |
| ஆவார் | ஆவார் | குறள் 1299 |
| துறப்பார் | துறப்பார் | குறள் 378 |
| அவைப்பார் | குற்றுவார் | சிலம்பு 29-26-2 |
| காண்கிற்பார் | காணவல்லார் | சிலம்பு 16-183 |

### 4.2 3.2.3 -∅-எதிர்மறைக்குப் பின்னர்

முன்னர்க் குறிப்பிட்டபடி இச்சூழலில்தான் மிகப் பெரும் பான்மையான இடங்களில் முன்பழந்தமிழ் நூல்களில் இவ்விகுதி காணப்படுகின்றது. ஆனால் பின்பழந்தமிழ் நூல்களிலோ இந் நிலையில் மாற்றம் ஏற்பட்டிருக்கக் காண்கின்றோம். புறநானூற்றில் 5:1 என்ற விகிதத்தில் இது காணப்பட, திருக்குறளிலோ 1:7 என்ற விகிதத்தில் எதிர்மறைக்குப் பின்னரும் பிற சூழலுக்குப் பின்னரும் இவ்விகுதி காணப்படுகின்றது. இந்நிலையும் முன்

பழந்தமிழ் என்றும் பின்பழந்தமிழ் என்றும் பிரிக்கப்படும் பிரிவுகளுக்கு அரண் செய்து நிற்கும்.

| | | |
|---|---|---|
| என்னார் | நினையார் | பதி 46-14 |
| புனையார் | புனையமாட்டார் | ஐங் 187-3 |
| இரங்கார் | இரக்கமுறார் | அகம் 327-17 |
| எய்தார் | அடைபவர் அல்லர் | நற் 314-1 |
| அறிதலும் | அறிதலையும் | |
| அறியார் | செய்யார் | குறு 276-4 |
| ஆனார் | அமையார் | புறம் 337-16 |
| என்னார் | சொல்லார் | பத்து 8-18 |
| எய்தார் | பெறுவாரல்லர் | பரி 19-92 |
| அஞ்சார் | அஞ்சார் | குறள் 201 |
| அறிகிலார் | அறிதலிலர் | குறள் 1139 |
| கொள்ளார் | கொள்ளார் | சிலம்பு 10-144 |
| செல்லார் | செல்வாரல்லர் | மணி 3-52 |

**4.2.3.2.4 குறிப்புவினை அடிகளுக்குப் பின்னர்**

| | | |
|---|---|---|
| கீழல்லார் | சிறியராகார் | குறள் 973 |

**4.2.3.2.5 வினையாலணையும் பெயர் விகுதி-∅-க்குப் பின்னர்**

அர் விகுதி வினைமுற்றுக்களிலும், வினையாலணையும் பெயர்களிலும் காணப்படினும் முன் பழந்தமிழ் நூல்களில் முற்று வினைச் சொற்களே அதிகமாகக் காணப்படுகின்றன. ஆனால் பின் பழந்தமிழ் நூல்களில் வினையாலணையும் பெயர்களே அதிகமாக உள்ளன. இந்நிலையும் இப்பிரிப்பின் இன்றியமையாமையை விளக்கும். ஐங்குறுநூற்றில் இருபது வினைமுற்றுக்களிலும், ஒரு வினையாலணையும் பெயரிலும் இவ்விகுதி காணப்பட, திருக்குறளில் ஐம்பத்தொரு வினை முற்றுக்களிலும், நானூற்று ஐம்பத்து மூன்று வினையாலணையும் பெயர்களிலும் இவ்விகுதி உள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கது.

| | வினைமுற்று | வினையாலணையும் பெயர் |
|---|---|---|
| பதி | 15 | 21 |
| ஐங் | 20 | 1 |

| | வினைமுற்று | வினையாலணையும் பெயர் |
|---|---|---|
| அகம் | 31 | 20 |
| நற் | 25 | 3 |
| குறு | 48 | 22 |
| புறம் | 30 | 27 |
| பத்து | 4 | 1 |
| பரி | 36 | 49 |
| கலி | 38 | 214 |
| குறள் | 51 | 453 |
| சிலம்பு | 39 | 68 |
| மணி | 8 | 45 |

| | | |
|---|---|---|
| கண்டார் | கண்டார் | குறு 75-1 |
| பாடிச்சென்றார் | பாடி வந்தோர் | புறம் 337-4 |
| சிறந்தார் | பெண்மையிற் சிறந்த மகளிர் | பரி 10-52 |
| கொன்றார் | சிதைத்தார் | குறள் 110 |
| செய்தார் | செய்தவர் | சிலம்பு 7-38-4 |
| இறந்தார் | இறந்துபட்டார் | மணி 24-104 |
| கொள்வார் | பாதுகாப்பார் | பதி 6-9 |
| அறிவார் | அறிபவர்கள் | குறு 375-4 |
| வருவார் | வாராநிற்பர் | பரி 9-51 |
| கொள்வார் | தழுவுவார் | கலி 105-35 |
| அறிவார் | அறிவார் | குறள் 1072 |
| போல்வார் | போல்வார் | சிலம்பு 21-34 |
| போவார் | பறந்துசெல்வார் | மணி 20-118 |
| ஒன்னார் | பகைவர் | பதி 20-10 |
| எண்ணார் | எண்ணார் | அகம் 309-9 |
| பேணார் | போற்றாதவர் | குறு 115-1 |
| எறியார் | எறிந்துபோர் தொடுக்காதவர் | புறம் 301-8 |
| பணியார் | வழிபடாதோர் | பத்து 6-230 |

| | | |
|---|---|---|
| சேரார் | பகைவராகிய அவுணர்கள் | பரி 2-48 |
| தங்கார் | தாழ்ந்து நில்லார் | கலி 106 24 |
| கல்லார் | கல்லாதார் | குறள் 140 |
| தொழார் | வணங்கார் | சிலம்பு 29-29..2 |
| ஒழியார் | ஒழியாத சான்றோர்கள் | மணி 23-137 |
| நள்ளாதார் | நள்ளாதார் | புறம் 125-5 |
| உணராதார் | அறியாதவர்கள் | கலி 124-1 |
| தீர்க்கலார் | தீர்க்கமாட்டார் | கலி 140-17 |
| சேராதார் | சேராதார் | குறள் 10 |
| சிதைக்கலாதார் | கெடுக்காத அரசர் | குறள் 880 |
| அனையார் | அத்தன்மையர் | நற் 216-10 |
| சாயலார் | சாயலைஉடைய மகளிர் | புறம் 395-13 |
| அணியார் | இயற்கை அழகினை உடைய மகளிர் | பரி 17-36 |
| இலார் | இல்லாதார் | கலி 25-20 |
| காதலார் | காதலையுடையார் | குறள் 1099 |
| சுண்ணத்தார் | சுண்ணத்தினர் | சிலம்பு 1-57 |
| அல்லார் | இல்லாதவர் | மணி 23-31 |

மகர ஒற்றையடுத்து வரும் வினையாலணையும் பெயர் விகுதிக்குப்பின்னரும் இது வருதல் காணலாம். இது புறத்தில் 3 இடங்களிலும் (பன்மை), அகத்தில் இரண்டு இடங்களிலும் (1 பன்மை + 1 ஒருமை), நற்றிணையில் ஒரு இடத்திலும் (உயர்வு ஒருமை), பரிபாடலில் நான்கு இடங்களிலும் (பன்மை) வரக் காண்கிறோம்.

| | | |
|---|---|---|
| ஒர்மார் | உணர்வார் | அகம் 171-9 |
| உண்மார் | உண்ணும் கற்றோரது | புறம் 46-3 |
| உண்மார் | உண்பாருடைய | புறம் 170-4 |
| கன்மார் | கற்பார் | புறம் 169-9 |
| என்மார் | என்று பாராட்டுவாரும் | பரி 11-115 |

| | | |
|---|---|---|
| என்மார் | என்று வேணடிக் கொள்வாரும் | பரி 11-117,119 121 |

## 4.2.4 ஓர்

ஆர் விகுதியுடன் ஓர் விகுதியும் பழந்தமிழ் நூல்களில் காணப் படுகின்றது. தொல்காப்பியம் ஆர் விகுதியிலிந்து ஓர்விகுதி உருவாகின்றது எனக் கூறியிருப்பினும் முன்பழந்தமிழ் நூல்களில் ஓர் விகுதியே ஆர் விகுதியைக் காட்டிலும் மிக அதிகமாகக் காணப் படுகின்றது. இந்நிலையைக் கீழ்க்காணும் பட்டியல் நன்குக் காட்டும். இதே நிலையைத்தான் -ஆன், -ஒன் -ஆர் -ஓர் ஆகிய விகுதிகளில் காண்கிறோம்.

| | -ஆர் | -ஓர் |
|---|---|---|
| பதி | 36 | 47 |
| ஐங் | 21 | 46 |
| அகம் | 51 | 157 |
| நற் | 28 | 71 |
| குறு | 70 | 93 |
| புறம் | 57 | 226 |
| பத்து | 5 | 84 |
| பரி | 85 | 37 |
| கலி | 252 | 31 |
| குறள் | 504 | 20 |
| சிலம்பு | 107 | 153 |
| மணி | 53 | 220 |

ஓர் விகுதி வினையாலணையும் பெயர்களிலேயே அதிகமாக வருகின்றது என்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். எடுத்துக் காட்டாகக் குறுந்தொகையில் காணப்படும் தொண்ணூற்று மூன்று இடங்களில் எண்பத்தொண்பது இடங்கள் வினையாலணையும் பெயர்களிலேயே காணப்படுகின்றது. காலப்போக்கில் இதன் இடத்தை அர் விகுதி (வந்தவர்) பெற்றுவிட்ட நிலையைக் காண் கின்றோம்.

-ஓர்

| | வினையாலணையும் பெயர் | வினைமுற்று |
|---|---|---|
| பதி | 47 | 0 |
| ஐங் | 46 | 0 |
| அகம் | 154 | 3 |
| நற் | 65 | 6 |
| குறு | 89 | 4 |
| புறம் | 211 | 15 |
| பத்து | 82 | 2 |
| பரி | 34 | 3 |
| கலி | 31 | 0 |
| குறள் | 18 | 2 |
| சிலம்பு | 152 | 1 |
| மணி | 220 | 0 |

### 4.2.4.1 உரையாசிரியர்கள்

இவ்விகுதிக்கு உதாரணம் கூறவந்த உரையாசிரியர்கள் 'பாசிலை வாடா வள்ளியங்காடிறந்தோரே' (குறு. 216) (சேனா.211) 'சான்றோர் அல்ல தோழி' (தெய். 105) ஆகியவற்றைத் தருவர். நச்சினார்க்கினியரும் (சூத்.213) சேனாவரையர் தரும் உதாரணத் தையே தந்து நிற்பார். கல்லாடனாரோ (சூத். 214) தெய்வச்சிலை யார் தருவதற்குப் பாடபேதமாக உள்ள ''சென்றோர் அன்பிலர் தோழி'' என்பதை உதாரணமாகத் தருவார். உரையாசிரியர்கள் அனைவரும் இறந்தகாலத்தில் வரும் வினையாலணையும்பெயர் களையே உதாரணமாகத் தந்து நிற்கின்றனர் முன்னர்க் குறிப் பிட்டபடி இவ்விகுதி வினையாலணையும் பெயரில் மட்டுமன்றி வினை முற்றிலும் வருதல் காணத்தக்கது. இது மட்டுமல்லாமல் வேறு பல சூழல்களிலும் இது வருதல் உண்டு. வாழுமோர் (பதி 71-27), மொழிவோர் (புறம் 377-21), தள்ளாதோர் (புறம் 18-30), நும்மோர் (புறம் 65-8), ஆள்கின்றோர் (மணி 26-18), விடாதோர் (புறம் 358-7), படியோர் (அகம் 22-5), அன்னோர் (புறம் 360-11) போன்ற எடுத்துக்காட்டுக்கள் ஏராளமாகப் பழந்தமிழில் காணப்

படுகின்றன. இந்நிலையில் தொல்காப்பிய உரையாசிரியர்கள் ஒருவகை உதாரணத்தையே தந்து நின்றனர் எனக் கருதலாம்.

### 4.2.4.2. சூழல்கள்

ஓர் விகுதி பலவேறு சூழல்களில் காணப்படுகின்றது.

1. இறந்தகால இடைநிலைகட்குப் பின்னரும்
2. இறப்பில்கால இடைநிலைகட்குப் பின்னரும்
3. எதிர்மறை -ஆத்- இடைநிலைக்குப் பின்னரும்
4. குறிப்பு வினையடிகளிலும்
5. வினையாலணையும் பெயர்களிலும்

வரும்.

### 4.2.4.2.1 இறந்தகால இடைநிலை களுக்குப் பின்னர்

இச்சூழலில் இது ஒரு சில நூல்களிலேயே (அகம் 3, நற் 5, குறு 3, புறம் 9) காணப்படுகின்றன. குறுந்தொகையில் உயர்வு ஒருமையாகவே வருதல் காணலாம். அகத்திலும் நற்றிணையிலுங்கூட ஒவ்வொரு இடத்திலேயே பன்மையில் வந்துள்ளது. வினையாலணையும் பெயராக இச்சூழலில் இது எல்லா நூல்களிலும் காணப்படுவதும் இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

| | | |
|---|---|---|
| சென்றோர் | சென்றோர் | அகம் 387-20 |
| சிறந்திசினோர் | சிறந்தோரேயாவர் | நற் 337-2 |
| படைத்திசினோர் | படைத்தவராவர் | புறம் 16-23 |
| இருந்தோர் | இருந்தார் | புறம் 219-4 |

### 4.2.4.2.2 இறப்பில்கால இடைநிலைகளுக்குப் பின்னர்

| | | |
|---|---|---|
| உலமருவோர் | சுழல்வோர் | புறம் 51-11 |
| இழப்போர் | இழப்பர் | புறம் 203-8 |
| செல்வோர் | போவார் | பத்து 4-39 |
| நுகர்வோர் | நுகராநிற்பர் | பரி 10-32 |
| கைப்படுவோர் | அகப்படுவோர் | சிலம்பு 5-132 |

### 4.2.4.2.3 -ஆத்- எதிர்மறைக்குப் பின்னர்

| | | |
|---|---|---|
| அறியாதோர் | அறியாதோர் | புறம் 360-10 |

### 4.2.4.2.4 குறிப்பு வினையடிகளுக்குப் பின்னர்

| | | |
|---|---|---|
| நற்பாலோர் | நல்வினையுடையர் | குறு 246-8 |

**4.2.4.2.5 வினையாலணையும் பெயர் விகுதி -∅-க்குப் பின்னர்**

| | | |
|---|---|---|
| சேர்ந்தோர் | பொரவந்தார் | பதி 42-5 |
| உடற்றியோர் | மாறுபட்டோர் | பதி 71-8 |
| பிரிந்தோர் | பிரிந்த மகளிர்கள் | ஐங் 223-5 |
| இருந்தோர் | இருந்தோர் | அகம் 173-3 |
| நோக்கியோர் | பார்க்கப் பெற்றார் | அகம் 326-13 |
| இருந்தோர் | இருந்தோர் | நற் 214-2 |
| ஒட்டியோர் | நட்புகொள்ள விரும்புவோர் | நற் 32-9 |
| பிரிந்தோர் | பிரிந்தோர் | குறு 146-2 |
| முன்னியோர் | நினைந்து வருபவர் | குறு 7-6 |
| விட்டோர் | விட்டவர் | புறம் 357-7 |
| உடற்றியோர் | சினப்பித்தவர் | புறம் 4-19 |
| கலந்தோர் | நட்புகொண்டோர் | பத்து 6-220 |
| மாறியோர் | விற்றவர்கள் | பத்து 2-2.4 |
| உயந்தோர் | உயர்ந்தோர் | பரி 2-24 |
| வணங்கியோர் | வணங்கத்தகுந்தோர் | பரி 5-72 |
| அழிந்தோர் | அழிந்தோர் | கலி 5-7 |
| முரணியோர் | மாறுபட்டோர் | கலி 132-4 |
| கற்றோர் | கற்றவர் | குறள் 393 |
| நின்றோர் | நின்றோர் | சிலம்பு 10-135 |
| வைத்தோர் | இறந்தோர் | மணி 25-167 |
| விளங்கியோர் | விளங்கிய செல்வர் | மணி 13-104 |
| உடற்றிசினோர் | பொருவார் | பதி 72-16 |
| கண்டிசினோர் | கண்ட சான்றோர் | ஐங் 85-5 |
| உரைந்திசினோர் | தங்கியிருந்தார் | அகம் 200-5 |
| அறிந்திசினோர் | அறிந்துகொள்வார் | குறு 18 3 |
| மாய்ந்திசினோர் | மாய்ந்தோர் | புறம் 27-6 |
| இரப்போர் | இரவலர் | பதி 52-11 |
| கொள்வோர் | கொள்வோர் | ஐங் 187-4 |
| உறைவோர் | இருப்போர் | அகம் 151-1 |
| இரப்போர் | இரப்பவர்கள் | அகம் 389-11 |
| பிரிவோர் | பிரிபவர் | நற் 636-11 |
| காப்போர் | காப்பவர் | நற் 182-8 |

| | | |
|---|---|---|
| கழல்வோர் | உரைப்போர் | குறு 152-11 |
| புணர்ப்போர் | சேர்த்துவைப்போர் | குறு 146-2 |
| எண்ணுவார் | எண்ணும் மகளிர் | புறம் 386-14 |
| புரப்போர் | ஈவோர் | புறம் 196-6 |
| பாயல் | துயில் கொள்ளு | |
| வளர்வோர் | வோர் | பத்து 6-630 |
| காப்போர் | காப்போர் | பத்து 10-343 |
| ஏந்துவோர் | ஏந்தி நிற்போர் | பரி 11-50 |
| உரைப்போர் | கூறுவோர் | பரி 2 35 |
| செல்வோர் | போவார் | கலி 6-2 |
| என்போர் | சொல்லப்படுவார் | குறள் 30 |
| பகர்வோர் | விற்போர் | சிலம்பு 6-135 |
| கொடுப்போர் | விற்போர் | சிலப்பு 5.62 |
| வாழ்வோர் | வாழ்வோர் | மணி 14-86 |
| அளிப்போர் | கொடுப்போர் | மணி 5-62 |
| ஆள்கின்றோர் | ஆட்சி செய்கின்ற வர்கள் | மணி 26-18 |
| உடலுமோர் | மாறுபாடுறுவோர் | அகம் 316-17 |
| நினையுமோர் | கருதுகின்றவர் | நற் 104-2 |
| நிற்குமோர் | நிற்கும் வீரர் | புறம் 297-10 |
| வேயுமோர் | சூடிக்கொள்வோர் | பரி 12-16 |
| படியோர் | வணங்கார் | அகம் 22-5 |
| படியோர் | வணங்காதார் | பத்து 10-423 |
| உணராதோர் | உணராத பிறர் | பதி 51-24 |
| பாராதோர் | வாராதொழிவார் | அகம் 50-8 |
| அறியாதோர் | அறியாதவர் | நற் 174-8 |
| அறியாதோர் | அறியாதோர் | குறு 170-1 |
| அடங்காதோர் | பகைவர் | புறம் 35-34 |
| தொடியோர் | தொடியணிந்தமகளிர் | பதி 79-6 |
| நல்லோர் | புதிய பரத்தையர் | ஐங் 61-4 |
| கொடியோர் | கொடியோர் | அகம் 97-8 |
| உடையோர் | உடைய மன்னர்கள் | நற் 150-5 |
| இளையோர் | இளஞ்சிறார் | குறு 61-3 |
| அன்னோர் | அவ்வறியாதார் | புறம் 360-11 |

| | | |
|---|---|---|
| மொழியோர் | மொழியினை உடையோர் | பத்து 6-418 |
| மிசையோர் | மெல்லிய நடையை உடையோர் | பரி-12-26 |
| புரிசையியல் | மதிலையுடைய | |
| உள்ளோர் | ஊரிற் காவலாளர் | கலி 81 25 |
| நூலோர் | நூலுடையார் | குறள் 322 |
| குலத்தோர் | மரபினோர் | சிலம்பு 23-2 |
| அறவோர் | அறவோர் | மணி 5-55 |

மணிமேகலையில் மட்டுமே ஒரே ஒரு இடத்தில் நிகழ்கால இடைநிலை -கின்று- காணப்படுவது இங்குக் குறிப்பிடத்தக்கது

**4.2.5=ப**

**4.2.5.1 தொல்காப்பியமும் உரையாசிரியர்களும்**

பலர்பால் விகுதி பற்றிப் பேசவந்த தொல்காப்பியர் இரு சூத்திரங்களில் (490, 491) பகர இறுதி பற்றிக் குறிப்பிடுவார்.

இப்பகரத்தைப் ப்+அ எனப் பிரித்துப் பகரம் எதிர் காலத்தைக் காட்டும் இடைநிலை எனவும், அகரத்தைப் பலர்பால் எனவும் கொள்ளலாம். எனினும் தொல்காப்பியர் பகர இறுதியே பலர்பால் ஈறு எனக் கருதினமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். தொல்காப்பி உரையாசிரியர்களும் அவரை அடியொற்றிப் பகர இறுதியே பலரறி சொல் எனக் குறிப்பிட்டுச் செல்வர்.

இச்சூத்திரங்களுக்கு உரைகண்ட இளம்பூரணர் (சூத். 208) உண்ப, தின்ப என்ற உதாரணங்களையும் அவரை அடுத்துச் சேனாவரையர் (சூத். 209) உண்ப என்ற உதாரணத்தையும் தருவர். அதோடு பகரம் உகரம் பெற்றும் பெறாதும் வரும் எனக்கூறி உரிஞுப, உகுப்ப வருகுப ஆகிய எடுத்துக்காட்டுக்களையும் தருவார் அவர். இதே நிலையினை நச்சினார்க்கினியத்திலும் காணலாம். அதோடு இவர் உண்ணாதொழிப, உண்ணாநிற்ப ஆகியவற்றையும் தருவார். தெய்வச்சிலையார் உண்ப என்ற ஒரு உதாரணத்தையே தந்து நிற்பார். கல்லாடனாரும் நச்சினார்க்கியரைப் பின்பற்றி உண்ப. உண்குப. உண்ணாநிற்ப, ஒழிப, தவிர்ப, உண்ணாதொழிப ஆகிய எடுத்துக் காட்டுக்களைத் தந்து நிற்பார்.

### 4.2.5.2 பகரமா, அகரமா?

உண்ப, மொழிப போன்ற சொற்களில் காணப்படும் பகர ஒற்றினைக் கால இடைநிலையாகக் கொண்டு அகரத்தை பலர் பால் விகுதியாகக் கொள்ளலாமா? என்ற கேள்வி எழுவது இயற்கை. உண்ப போன்ற சொற்களில் -ப்- இறப்பில்கால இடை நிலையாக வருவது இயற்கை என்றாலும் கூட ஆகுப, மொழிப, பெறுப போன்றவற்றில் ப் வருவது இயற்கையன்று. காரணம் பகரமும் வகரமும் துணைநிலை வழக்கில் வரும் மாற்றுருபுகள் என்பதை நாம் அறிவோம், ஆகு, மொழி, பெறு போன்ற வினைகள் மெல்வினைகள். இவை பொதுவாக வகர ஒற்றினையே இறப்பில்கால ஒட்டாகக் கொண்டு வரும். ஆகுவர், மொழிவர், பெறுவர் போன்ற வினைமுற்றுக்கள் வகர ஒற்றினையே கொண்டு நிற்றல் காணத்தக்கது. ஆனால் மொழிப, ஆகுப, ஒழிப போன்ற வற்றில் பகர ஒற்றே வருகின்றது (செ. வை. சண்முகம் 1978:86). இதனால்தான் மொழிப போன்றவற்றில் காணப்படும் பகர ஒற்றி னையும் அகரத்தினையும் இணைத்துத் தொல்காப்பியர் பகர ஒற்றே என்று எடுத்து இவ்விடங்களில் -∅- கால இடைநிலை யாக வருகிறது எனக் கொண்டார் என எண்ணலாம். கால இடை நிலையில் ஒரு ஒழுங்கினைக் கொண்டு பால்காட்டும் விகுதிகள் மாற்றத்தைக் காட்டுகின்றார் எனக் கருதலாம்.

மொழிப என்பதை

மொழி-∅-ப

எனவும், பலவின்பால் காட்டும் செய்வ போன்றவற்றை

செய்-∅-வ

எனவும் பிரித்து நிற்பார். -∅- வேறு இடங்களிலும் வருதல் உண்டு (செய்யாய்).

கால இடைநிலைகள் மெல்லினையில் வகர ஒற்றினையும் வல்லினையில் பகர ஒற்றினையும் கொண்டு வரும் என்ற விதி யோடு பலர்பால் காட்டும் பகரத்திற்கு முன்னரும் பலவின்பால் காட்டும் வகரத்தின் முன்னரும் -∅- மாற்றுருபைக் கொண்டு வரும் எனவும் கூற முடியும். ஆனால் ப் + அ எனப் பிரிப்பின் பலர் பால் காட்டும் அகரத்திற்கு முன்னர் எல்லா வினைகளுக்கு முன்ன ரும் பகர ஒற்று இறப்பில் கால இடைநிலையாக வரும் எனவும்

கூடுதலாக ஒரு விதி கூற வேண்டும். இந்நிலையைத் தொல்காப்பியர் விரும்பாததால்தான் பகரம் என்றும் வகரம் என்றும் கொண்டு) இவை முறையே பலர்பாலையும், பலவின்பாலையும் காட்டும் என்று கொண்டார் எனக் கருதலாம். ஆனால் ஆகுப (புறம் 7,10), செய்ப (புறம் 239, 19) போன்ற சொற்கள் பலவின்பாலிலும் வருவது விதிவிலக்காகவே கொள்ளப்படுதல் வேண்டும்.

அகரம் என எடுக்கின் அகரம் பலவின்பாலையும், பலர்பாலையும் காட்டும் எனக் கருதவேண்டும். இவற்றை எல்லாம் தடுப்பதற்காகவே தொல்காப்பியர் பகரம் எனக் கொண்டார் எனக் கருதலாம்.

### 4.2.5.3 சூழல்

இவ்விகுதி -Ø- இறப்பில்கால இடைநிலைக்குப் பின்னர் வரும்

#### 4.2.5.3.1 -Ø- இறப்பில்கால இடைநிலைக்குப் பின்னர்

| | | |
|---|---|---|
| தருப | தருவர் | பதி 59-12 |
| பெறுப | பெறுவார்கள் | ஐங் 137-3 |
| கழறுப | இகழ்வர் | அகம் 76-6 |
| அறிப | அறிந்திடுப்பர் | நற் 226-9 |
| சூடுப | சூடிக்கொள்வர் | குறு 17-2 |
| எண்ணுப | எண்ணுவர் | புறம் 116-8 |
| தீர்ப்ப | தீராநிற்பர் | பரி 8-123 |
| உண்ப | உண்பர் | கலி 63-11 |
| என்ப | என்று சொல்லுவர் | குறள் 63 |
| என்ப | என்று கூறுவர் | மணி 30-85 |

### 4.2.6 இரட்டைப் பன்மை விகுதிகள்

தமிழ் மொழி வரலாற்றில் இரட்டைப் பன்மை விகுதிகள் பலவற்றைக் காண்கிறோம். பழந்தமிழ் இலக்கியங்களில் இத்தகைய விகுதிகள் மிகக் குறைவாகவே உள்ளன. எனினும் காலப் போக்கில் இவை பெருவரவிற்றாக மாறியுள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கது.

தற்காலத் தமிழில் காணப்படும் நாங்கள், எங்கள், நீங்கள், உங்கள் அவர்கள் போன்ற பதிலிடு பெயர்கள் இரட்டைப் பன்மைச் சொற்களே. இவற்றில் காணப்படும் மகர ஒற்று, -அர், -கள் ஆகியவை பன்மை காட்டும் விகுதிகளே. இவற்றுள்-கள் பிற விகுதிகளுடன் இணைந்து நின்று இரட்டைப் பன்மைச் சொற்களை உருவாக்கியுள்ளது.

தற்காலத் தமிழில் அண்ணன்மார்கள், தம்பிமார்கள் போன்ற சொற்களும் வெள்ளாளர்கள், நாடார்கள் போன்ற சொற்களும் நாடார்கள்மார் போன்ற சொற்களும் நாடார்கள்மார்கள் போன்ற சொற்களும் காணப்படுகின்றன. இரட்டைப் பன்மை மட்டுமன்றி மூன்று, நான்கு பன்மை விகுதிகளையும் காண்கிறோம் (அகத்திய லிங்கம், 1979: 180-185).

பண்டைத் தமிழில் கள் விகுதி அஃறிணைப் பன்மை காட்டும் விகுதியாகவே இருந்துள்ளது, மட்டுமன்றி இது வர வேண்டும். என்ற நியதியும் இல்லை.

தொல்காப்பியம்,

> ''கள்ளொடு சிவணும் அவ்வியற் பெயரே
> கொள்வழி யுடைய பலஅறி சொற்கே'' (654)

என்னும் சூத்திரத்தில் இதுபற்றிக் கூறும். இதனால்தான் பின்னர் வந்த இலக்கணிகள் அஃறிணைப் பெயர்களைப் பால் பகா அஃறிணைப் பெயர்கள் எனக் குறிப்பிட்டனர். இது பற்றிப் பின்னர் (அஃறிணைப் பன்மை) காண்போம். இத்தகைய கள் விகுதி பின்னர் உயர்திணைச் சொற்களிலும் வரத் தொடங்கின. தொல்காப்பியர் காலத்திலேயே மக்கள் என்ற சொல்லில் இது வந்துள்ளதைக் காணலாம்.

இதனால்தான் பின்னர் எழுந்த நூல்களிலும் கள் விகுதி உயர்திணைப் பெயர்களில் வரத் தொடங்கிற்று. பரிபாடலில் ''வாளிகள்'' என்ற சொல்லில் முதன் முதலில் காணப்படுகின்றது. பொதுவாகத் திணையை நிர்ணயிப்பது விகுதிகள் அல்ல என்ற நிலையில் கள் விகுதி வரினும் திணை மாறாத நிலையில்தான் உயர் திணையில் இது வரப் புறப்பட்டது எனக் கருதலாம்,

பன்மை காட்டும் விகுதிகளில் பல உயர்வு ஒருமையையும் காட்டும் நிலையில், அதிலிருந்து பன்மையைப் பிரித்து அறியும் பொருட்டு முதன் முதலில் கள் விகுதி ரகர ஒற்று இறுதியைக் கொண்ட பெயர்களுடன் வந்து நின்றது. பண்டைத் தமிழ் இலக்கியங்களில், காதலர், நாடர் போன்ற சொற்கள் உயர்வு ஒருமையைக் காட்ட இவற்றிலிருந்து பன்மையைப் பிரித்தறியும் பொருட்டு கள் விகுதியை இணைத்த நிலையில்தான் இரட்டைப் பன்மைச் சொற்கள் உருவாயின எனக் கருதலாம் (வரதராசன் 1943). இந்நிலையில்தான் அரசர்கள் (கலி. 25, 3). என்னோர்கள் (கலி. 100-25), களிர்கள் (கலி. 149-8) போன்ற சொற்கள் உருவாயின. பின்னர் ஒப்புமையாக்கத்தாலும் ஐவர்கள் (கலி. 26-6) போன்ற சொற்கள் எழுந்தன.

பின்னர் இவற்றின் பிரதிபலிப்பாகப் பதிலிடு பெயர்களிலும் இரட்டைப் பன்மைச் சொற்கள் உருவாயின. எங்கள் (கலி 22-20) யாங்கள் (சிலம்பு. 25, 62) தங்கள் (சிலம்பு 23,175) போன்ற சொற்கள் உள்ளன.

பின்னர் வினையிலும் இத்தகைய விகுதிகள் உருவெடுத்தன என நம்பலாம். இதனை வினையாலணையும் பெயர், ஏவல் வினை ஆகியவற்றில் காண முடியும் (அகத்தியலிங்கம், 1983a).

### 4.2.6.1 விகுதிகள்

இத்தகைய இரட்டைப் பன்மை விகுதிகளாக அர்கள், ஆர்கள், -ஓர்கள் ஆகியவை பண்டைத் தமிழ் நூல்களில் காணக்கிடக்கின்றன. இவை பின்பழந்தமிழ் நூல்களாகிய கலித்தொகை, குறள், சிலம்பு, மணிமேகலை ஆகியவற்றில் மட்டுமே உள்ளன. மேலும் இவ்விகுதிகள் வினையாலணையும் பெயர்களிலேயே வந்துள்ளன. வினைமுற்றில் ஏவல் வினையாக வரும் நண்ணுமின்கள் என்பது ஏவல் வினையின் கீழ் எடுத்துக் கொள்ளப்படும்.

#### 4.2.6.1.1 -அர்கள்

##### 4.2.6.1.1.1 சூழல்

இது

1. வினையாலணையும்பெயர் விகுதி-அவ்-வுக்குப் பின்னர் வரும்.

| | | |
|---|---|---|
| மற்றையவர்கள் | மற்றவர்கள் | குறள் 263 |

4.2.6.1.2 -ஆர்கள்

4.2.6.1.2.1 சூழல்

இது

(1) வினையாலணையும் பெயர் விகுதி -Ø-க்குப் பின்னர் வரும்.

| | | |
|---|---|---|
| வாழ்வார்கள் | வாழ்வார்களுக்கு | கலி 145-17 |
| ஊன் கணினார்கள் | ஞானக்கண்இல்லாத மாந்தர் | மணி 21-128 |

4.2.6.1.3 -ஓர்கள்

4.2.6.1.3.1 சூழல்

இது

(1) வினையாலணையும் பெயர் விகுதி -Ø-க்குப் பின்னர் வரும்.

| | | |
|---|---|---|
| என்னோர்கள் | எத்தன்மையுடையோர்களுடைய | கலி 100-23 |
| உடன்வயிற்றோர்கள் | உடன்பிறந்தவர் | சிலம்பு 10-22 |
| வானோர்கள் | தேவர்கள் | சிலம்பு 24-23-4 |
| என்போர்கள் | கூறுவோர்களும் | மணி 21-95, 97 99, 100 |

## 4.3 பட்டியல்கள்

### 4.3.1 பட்டியல் 1: பலர்பால் விகுதிகள் (பன்மை + உயர்வு ஒருமை)

| | -அர் | -மார் | -ஆர் | -ஓர் | -ப | -அர்கள் | -ஆர்கள் | -ஓர்கள் |
|---|---|---|---|---|---|---|---|---|
| பதி | 153 | — | 36 | 47 | 7 | — | — | — |
| ஐங் | 58 | — | 21 | 46 | 20 | — | — | — |
| அகம் | 333 | — | 51 | 157 | 36 | — | — | — |
| நற் | 107 | 1 | 28 | 71 | 12 | — | — | — |
| குறு | 125 | — | 70 | 93 | 20 | — | — | — |
| புறம் | 307 | 3 | 57 | 226 | 25 | — | — | — |
| பத்து | 141 | — | 5 | 84 | — | — | — | — |
| பரி | 100 | — | 85 | 37 | 3 | — | — | — |
| கலி | 203 | — | 252 | 31 | 21 | — | 1 | 1 |
| குறள் | 263 | — | 504 | 20 | 29 | 1 | — | — |
| சிலம்பு | 222 | — | 107 | 153 | — | — | — | 2 |
| மணி | 83 | — | 53 | 220 | 5 | — | 1 | 4 |

4.3.2 பட்டியல் 2: பலர்பால் விகுதிகள் (பன்மை) 

| | -அர் | -மார் | -ஆர் | -ஓர் | -ப | -அர்கள் | -ஆர்கள் | -ஓர்கள் |
|---|---|---|---|---|---|---|---|---|
| பதி | 153 | — | 36 | 47 | 7 | — | — | — |
| ஐங் | 23 | — | 2 | 34 | 18 | — | — | — |
| அகம் | 214 | — | 15 | 89 | 30 | — | — | — |
| நற் | 45 | 1 | 14 | 38 | 4 | — | — | — |
| குறு | 62 | — | 32 | 41 | 18 | — | — | — |
| புறம் | 307 | 3 | 57 | 226 | 25 | — | — | — |
| பத்து | 141 | — | 5 | 84 | — | — | — | — |
| பரி | 100 | — | 85 | 37 | 3 | — | — | — |
| கலி | 158 | — | 205 | 29 | 18 | — | 1 | 1 |
| குறள் | 234 | — | 456 | 20 | 29 | 1 | — | — |
| சிலம்பு | 220 | — | 81 | 153 | — | — | — | 2 |
| மணி | 82 | — | 53 | 220 | 5 | — | 1 | 4 |

4.3.3 பட்டியல் 3: -அர்

| | வினைமுற்று | | | | | | | | | | | | குறிப்பு |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | இறந்தகாலம் | | | இறப்பில்காலம் | | | | | | | எதிர்மறை | | |
| | -அன்- | -இன்- | -ஆ- | -வ்- | -குவ்- | -ப்ப்- | -ப்- | -ம்- | -வ்- + அன்- | | -அல்- | -இல்- | |
| பதி | 2 | 4 | — | — | 1 | — | — | — | 1 | | — | — | 11 |
| ஐங் | 2 | 2 | — | 1 | — | — | — | — | — | | 1 | — | 2 |
| அகம் | 5 | 3 | — | 4 | 2 | — | — | — | 1 | | — | — | 9 |
| நற் | 5 | 4 | — | 7 | — | — | 1 | — | 1 | | 1 | — | — |
| குறு | 3 | 2 | 1 | 3 | — | — | — | — | — | | 2 | 1 | 6 |
| புறம் | 22 | 10 | — | 12 | 6 | 1 | — | 1 | — | | 6 | — | 50 |
| பத்து | 5 | 4 | — | — | 1 | — | — | — | 3 | | — | — | 30 |
| பரி | 1 | 2 | — | 1 | — | 2 | — | — | — | | — | — | 7 |
| கலி | 3 | 1 | — | 5 | — | — | 1 | — | — | | 1 | — | 5 |
| குறள் | — | — | — | 26 | — | 17 | 7 | — | — | | — | — | 47 |
| சிலம்பு | 22 | 31 | — | 11 | 3 | — | 2 | — | — | | — | — | 12 |
| மணி | 4 | 5 | — | 7 | 7 | — | — | — | — | | — | — | 1 |

(தொடர்ச்சி......)

| | -Ø- | | | | | | | | | | | | -அவ்- | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | இறந்த காலம் | | | இறப்பில் காலம் | | | | | | | எதிர் மறை | குறிப்பு | இறந்த காலம் | | | இறப்பில் காலம் | | | எதிர் மறை | | குறிப்பு |
| | -அன்- | -இன்- | -இ- | -ல்- | -உல்- | -ல்+அன்- | -ப்ப்+அன்- | -உ(ந்)- | -இ- | -ம்- | -அல்- | | -இ- | -ய்- | -அற்- | -ப்(ப்)- | -கற்ப்- | -ம்- | -ஆக்- | -கல்+ஆக்- | |
| பதி | — | 1 | — | 1 | — | — | — | 37 | 2 | 3 | — | 90 | — | — | — | — | — | — | — | — | — |
| ஐங் | — | — | — | 1 | — | 1 | — | 4 | 1 | — | — | 7 | — | — | — | — | — | — | — | — | 1 |
| அகம் | — | 4 | — | 5 | — | 2 | — | 66 | — | — | 1 | 107 | — | — | 1 | 3 | — | — | — | — | 1 |
| நற் | — | — | — | — | — | 3 | — | 8 | — | — | — | 9 | — | — | — | 5 | 1 | — | — | — | — |
| குறு | — | — | — | — | — | — | — | 13 | 1 | 1 | 1 | 27 | — | — | — | — | 1 | — | — | — | — |
| புறம் | 2 | 3 | — | 17 | 1 | 2 | 1 | 69 | 3 | — | — | 93 | — | — | 3 | 3 | — | — | — | — | 2 |
| பத்து | — | 1 | 1 | 2 | — | — | — | 31 | — | 1 | — | 62 | — | — | — | — | — | — | — | — | — |
| பரி | 1 | 2 | — | 4 | — | — | — | 18 | — | 4 | — | 45 | — | — | 7 | 5 | — | — | — | — | 1 |
| கலி | — | 5 | — | — | — | 1 | — | 13 | — | — | — | 45 | — | — | 31 | 19 | — | — | 3 | 1 | 24 |
| குறள் | — | — | — | — | — | — | — | 4 | — | — | — | 20 | 2 | 1 | 11 | 35 | 3 | 1 | 19 | 1 | 40 |
| சிலம்பு | — | 6 | — | — | — | 7 | 1 | 23 | — | — | — | 86 | — | — | 6 | 1 | — | — | — | — | 9 |
| மணி | 3 | 1 | — | — | 1 | — | — | 15 | — | — | — | 35 | — | — | 2 | — | — | — | — | — | 1 |

| | | |
|---|---|---|
| ஈத்தது | ஈத்தது | பதி 61-12 |
| கூறியது | கூறிய சொற்கள் | ஐங் 479-5 |
| முன்னியது | கருதியதை | அகம் 28-12 |
| வந்தது | வந்த சேவல் | நற் 182-3 |
| செய்தது | செய்த தீங்கு | குறு 173-5 |
| உள்ளியது | நினைந்த பரிசிலை | புறம் 206 3 |
| கொண்டது | பெற்ற பொருள் | புறம் 333-19 |
| உள்ளியது | நினைத்தது | பரி 18-9 |
| கூறியது | சொல்லிய சொல் | கலி 133-11 |
| உள்ளியது | கருதிய பேறு | குறள் 309 |
| சொன்னது | சொன்ன செய்தி | சிலம்பு 18-15 |
| போனது | போன பொருள் | மணி 16-99 |
| புரைவது | ஒப்பாகும் பொருள் | பதி 17-1 |
| ஆகுவது | நிகழ்வது | ஐங் 247-1 |
| ஒப்பது | இசைவது | அகம் 200-14 |
| உறுவது | உண்டாகும் நிகழ்ச்சி | அகம் 151-13 |
| என்பது | என்று கூறுகின்ற வாய்மொழி | நற் 32-4 |
| என்பது | என்பது | குறு 151-6 |
| உறுவது | அடையும் பயன் | குறு 199-1 |
| கொள்வது | கொள்ளலாவது | புறம் 23-6 |
| என்பது | என்பதனை | புறம் 186-3 |
| நிகழ்வது | உலகியல்பு | பரி 20-40 |
| என்பது | என்பது | பரி 12-63 |
| உள்ளுவது | நினைக்கின்ற காரியம் | கலி 4-15 |
| மாய்ப்பது | போக்கும் வெள்ளம் | கலி 146-15 |
| பயக்கிற்பது | பயன்தரும் ஒன்று | கலி 59-17 |
| ஆவது | வரக்கடவது | குறள் 427 |
| ஒப்பது | ஒக்கும் நன்மை | குறள் 536 |
| உறுவது | மேல்வரும் துன்பம் | சிலம்பு 13-171 |
| என்பது | என்னும் உண்மை | சிலம்பு 26-216 |
| பெறாதது | பெறாத குறை | கலி 61-9 |
| உறாதது | உறாததுன்பத்தினை | சிலம்பு 19-6 |

| | | |
|---|---|---|
| உ நித்தம் | | |
| அல்லாதது | அழியாத பொருள் | மணி 29-30 |
| கையது | கையிடத்தேயுள்ளது | பதி 57-7 |
| அல்லது | தீவினை | ஐங் 7-2 |
| கையது | கையில் உள்ளது | அகம் 337-9 |
| நல்லது | நல்ல காரியம் | நற் 16-3 |
| அனையதாகி | போன்றதாகி | குறு 307-1 |
| வெளியது | வெள்ளிய ஆடை | புறம் 385-7 |
| நும் கையது | நும்மிடத்துள்ள கலையை | பத்து 2-152 |
| நல்லது | அறம் | பரி 10-88 |
| நல்லது | நல்லதொரு தொழில் | கலி 112-10 |
| இல்லது | இல்லாதது | குறள் 53 |
| குடியது | குடிமக்களைஉடையது | சிலம்பு 1`-28 |
| இயல்பினது | தன்மையுடையது | மணி 1-40 |

## 6.2.2 -து

பழந்தமிழில் இவ்விகுதி வினைமுற்றுக்களிலும் வினையாலணையும் பெயர்களிலும் வரினும் வினைமுற்றுக்களிலேயே அதிகம் காணப்படுகிறது. வினைமுற்றுக்களில் -ஆ- எதிர்மறைக்குப் பின்னரும், குறிப்புவினையடிகளுக்குப் பின்னரும் வருகிறது. வினையாலணையும் பெயர்களில், குறிப்பு வினையாலணையும் பெயர்களுடனேயே அதிகம் பயின்று வருகின்றது.

| | வினைமுற்று | | வினையாலணையும் பெயர் | |
|---|---|---|---|---|
| | -ஆ-எதிர்மறை | குறிப்பு | -ஆ-எதிர்மறை | குறிப்பு |
| பதி | 2 | 3 | — | 5 |
| ஐங் | 4 | 20 | — | 11 |
| அகம் | 9 | 40 | 4 | 46 |
| .ற் | 12 | 39 | — | — |
| குறு | 14 | 44 | 1 | 25 |
| புறம் | 22 | 45 | 3 | 60 |

| | | | | |
|---|---|---|---|---|
| பத்து | 2 | 6 | — | — |
| பரி | — | — | — | — |
| கலி | 22 | 11 | — | 41 |
| குறள் | 13 | 16 | — | 14 |
| சிலம்பு | 14 | 21 | — | 2 |
| மணி | 5 | 2 | — | — |

**6.2.2.1 உரையாசிரியர்கள்**

உரையாசிரியர்கள் -அது விகுதிக்கான எடுத்துக்காட்டுக் களினின்றும் இவ்விகுதிக்கான எடுத்துக்காட்டுக்களைப் பிரித்துக் கூறாது இணைத்தே தந்து செல்கின்றனர். இளம்பூரணர் இதற் குரிய உதாரணங்கள் எதுவும் தருவதில்லை.

**6.2.2 சூழல்கள்**

இவ்விகுதி

1. -ஆ-எதிர்மறைக்குப் பின்னரும்
2. குறிப்பு வினையடிகளுக்குப் பின்னரும்
3. குறிப்பு வினையாலணையும் பெயர் விகுதி -Ø- க்குப் பின்னரும் வரும்.

**6.2.2.2.1 -ஆ- எதிர்மறைக்குப் பின்னர்**

| | | |
|---|---|---|
| தலையாது | பெய்யாதொழியும் | பதி 20-26 |
| நலியாது | வருத்தாது | ஐங் 325-3 |
| அமைகல்லாது | அமைதியுற மாட்டாது | ஐங் 457-4 |
| தோன்றாது | தோன்றல் பெறாது | அகம் 239-2 |
| ஒல்லாது | ஆகாது | நற் 204-12 |
| ஆனாது | தவிர்ந்திலது | குறு 53 5 |
| உதவாது | பயன்படாது | புறம் 18-26 |
| உரறாது | இடியாது | பத்து 4-42 |
| கிடவாது | தங்காது | கலி 135-8 |
| வேண்டாது | மதியார் | |
| (உலகு) | உயர்ந்தோர் | குறள் 607 |
| நில்லாது | நிற்கமாட்டாது | சிலம்பு 28-150 |
| அறியாது | அறியாது | மணி 24-172 |

ஆ- எதிர்மறை எப்போதும் இறப்பில் காலத்தையே சுட்டிவருவது குறிப்பிடத்தக்கது. எனினும் நற்றிணையில் ஓரிடத்தில் வாராது (173-6) என்பது இறந்த காலத்தில் அமைந்துள்ளதாக உரையாசிரியர் குறிப்பிட்டுள்ளார். பல்வேறு எச்சங்களில் (காணாது, காணாத போன்றவற்றில்) எதிர்மறை உருபாக -ஆத்- வருவதைக் காணமுடிகின்றது. ஆயினும் இங்கு எதிர்மறை உருபாக -ஆத்- எனக் கொள்ளாமல் -ஆ- என்றே கருதுவது ஒருமை விகுதிகளைக் கொண்டுள்ள வினைமுற்றுக்களிலிருந்து எச்சங்களை வேறுபடுத்திக்காட்ட உதவுகின்றது.

### 6.2.2.2.2 குறிப்பு வினையடிகளுக்குப் பின்னர்

| | | |
|---|---|---|
| இனிது | இனிதாயிருந்தது | பதி 12-9 |
| அது | இயலாது | ஐங் 86-3 |
| பெரிது | பெரிதாக உள்ளது | அகம் 36-23 |
| கொடிது | கொடியதாயிரா நின்றது | நற் 2-10 |
| அரிது | அரிது | குறு 58-6 |
| எளிது | எளிது | புறம் 54-4 |
| வறிது | சிறிது | பத்து 3-50 |
| இனிது | இனிது | கலி 49-11 |
| இனிது | இனிமையுடைத்து | குறள் 64 |
| பெரிது | பெரிது | சிலம்பு 13-10 |
| அரிது | இயலாது | மணி 25-12 |

### 6.2.2.2.3 வினையாலணையும் பெயர் விகுதி-∅-க்குப் பின்னர்

| | | |
|---|---|---|
| இயையாது | இயலாதது | அகம் 335-3 |
| வாடாது | வாடாதது | குறு 388-2 |
| ஒல்லாது | இயலாத பொருள் | புறம் 1968 |
| செவ்விது | செம்மை நெறிக்கண் | பதி 22-8 |
| அரிது | அரிய பேராற்றல் | ஐங் 338-5 |
| அரிது | அரியதனை | அகம் 10-7 |
| அரிது | அரியதை | குறு 29-4 |

| | | |
|---|---|---|
| கொடிது | தீத்தொழிலே | புறம் 17-5 |
| கொடிது | கொடுந் தொழில் | கலி 8-2 |
| இனிது | இன்பம் | குறள் 99 |
| சிறிது | சிறியது | சிலம்பு 15-149 |

**6.2.3 -∅**

பழந்தமிழ் இலக்கியங்களில் மேலே குறிப்பிடப்பட்ட -அது, -து ஆகிய விகுதிகள் மட்டுமின்றி, -∅ விகுதியும் ஒன்றன் பாலைக் காட்டி நிற்கின்றது. தொல்காப்பியம் இதனை -உம் எனக் கூறும். இது ஒன்றன்பாலை மட்டுமின்றி ஆண்பால், பெண்பால் ஒருமையினையும், பலவின்பாலையும் காட்டி நிற்கின்றது என்பதையும் இக்கருத்து தொல்காப்பியர்க்கும் தொல்காப்பியத்திற்கு உரை எழுதவந்த உரையாசிரியர்களுக்கும் உடன்பாடே என்பதனையும் முன்னரே குறிப்பிட்டோம்.

சங்ககால இலக்கியங்கள் அனைத்தையும் நோக்க ஒன்றன் பால் விகுதிகளைப் பொறுத்தமட்டில் -அது, -து விகுதிகளை அடுத்து -∅ விகுதியே அதிகமாக வருகின்றது. கலித்தொகையில் மட்டும் நூற்றுத்தொண்ணூற்று இரண்டு இடங்களில் -அது பயின்றுவர இவ் விகுதியோ நூற்று முப்பத்தாறு இடங்களில் ஒன்றன்பால் உணர்த்தி நிற்கின்றது. மற்ற அனைத்து விகுதிகளும் வினைமுற்று, வினை யாலணையும் பெயர் ஆகிய இரண்டிலும் வர இவ்விகுதி மட்டும் வினைமுற்றுக்களில் மட்டிலுமே வரக் காண்கின்றோம். இதே நிலையைத்தான் ஆண்பால், பெண்பால், பலவின்பால் ஆகியவற்றை உணர்த்தி நிற்கின்ற பொழுதும் காண்கின்றோம். எனினும், மேலே கூறியது போன்று ஆண்பால், பெண்பால், பலவின்பால் ஆகியவற்றைச் சுட்டி நிற்பினும் ஒன்றன் பாலையே அதிகமான இடங்களில் இவ்விகுதி சுட்டி நிற்கின்றது. புறநானூற்றில் மட்டும் ஆண்பால், பெண்பால் ஆகியவற்றை முறையே முப்பத்தைந்து இடங்களிலும் ஏழு இடங்களிலும் சுட்டி நிற்க ஒன்றன்பாலில் மட்டும் நாற்பத் தெட்டு இடங்களில் வருகின்றது. இதுபோன்றே கலித்தொகையில் ஒன்றன்பாலை நூற்றுமுப்பத்தாறு இடங்களில் உணர்த்தி நிற்கும். இவ்விகுதி ஆண்பாலை ஐம்பத்தைந்து இடங்களிலும், பெண்பாலை இருபத்தொன்பது இடங்களிலுமே உணர்த்தி நிற்கக் காண்கின்

றோம். இதுபோன்றே இதர இலக்கியங்களிலும் இவ்விகுதி அதிக மான இடங்களில் ஒன்றன்பாலை உணர்த்தி நிற்டதைக் கீழுள்ள பட்டியல் மூலம் அறியலாம்.

| | ஆண்பால் | பெண்பால் | ஒன்றன்பால் |
|---|---|---|---|
| பதி | 1 | 1 | 3 |
| ஐங் | 19 | 9 | 37 |
| அகம் | 11 | 27 | 51 |
| நற் | 4 | 5 | 33 |
| குறு | 3 | 8 | 40 |
| புறம் | 35 | 7 | 48 |
| பத்து | 3 | 2 | 9 |
| பரி | 4 | 0 | 12 |
| கலி | 55 | 29 | 136 |
| குறள் | 3 | 2 | 50 |
| சிலம்பு | 12 | 2 | 25 |
| மணி | 20 | 23 | 71 |

மேலே கூறப்பட்டது போன்று பல இடங்களில் இவ்விகுதி ஒன்றன்பால் உணர்த்தி நிற்கின்றது எனினும், பல இடங்களில் ஒன்றன்பால் பெயர்கள் வெளிப்படையாக (overtly) வருவதில்லை. எனினும் உரையாசிரியர்கள் அதுபோன்ற இடங்களில் ஒன்றன் பால் பெயர்களையோ அல்லது ஒன்றன்பால் சுட்டும் பதிலிடு பெயர்களையோ இட்டு உரை எழுதிச்செல்கின்றனர். இருப்பினும் ஒரு சில இடங்களில் ஒன்றன்பால் பெயர்கள் வெளிப்படையாக எழுவாயாக இருக்கக் காண்கின்றோம்.

### 6.2.3.1 சூழல்

இவ் விகுதி

-உம்- இறப்பில்கால இடைநிலைக்குப் பின்னர் வரும்.

### 6.2.3.1.1 -உம்- இறப்பில்கால இடைநிலைக்குப் பின்னர்

"...........எறியும்

| | |
|---|---|
| .......... - நின் றழங்குரன் முரசே'' | பதி 30-43 |
| '' ... - நின் னல்லிசை மிகுமே'' | பதி 38-2 |
| '' ... ......இசைக்குமவர் தேர்மணிக் குரலே'' | ஐங் 102-4 |
| '' ........இவ்வூர் | |
| .......... கூறும்'' | ஐங் 110-4 |
| ''...... .. நினையுமென் னெஞ்சே'' | ஐங் 311-4 |
| ''பெருமை என்பது கெடுமோ........ _'' | அகம் 30-12 |
| ''... ... ....கரை பொழி யும்மே'' | அகம் 128-4 |
| ''..........ஞாளி மகிழும்'' | அகம் 122-8 |
| '' ..........சுழலும்... ..... | |
| ... ..... | |
| ........ காடே'' | நற் 48- |
| ''படுங்காற் பையுள் தீரும் .........'' | நற் 209-7 |
| ''ஒண்தார் அகலமும் உண்ணுமோ... '' | குறு 362-7 |
| ''இகலும் நங் காமத்துப் பகையே'' | குறு 257-6 |
| '' உலகமுங் கெடுமே'' | புறம் 184-11 |
| '' குன்றந் தேன்சொரி யும்மே'' | புறம் 10-6 |
| ''மாரி தலையும் _ '' | பத்து 10-23 |
| ''..........ஏற்கும் குன்று'' | பரி 18-8 |
| ''... ...ஏற்பிக்கும் | |
| தென்னவன் வையை ____'' | பரி 20-96 |
| ''பாம்பும் __ உய்யும்...... '' | கலி 140-22 |
| ''நெஞ்சமும் எஞ்சும் ........'' | கலி 118-23 |
| ''_ - தனிக்குரு குசவுமே'' | கலி 121-16 |
| ''அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்<br>கடுத்தது காட்டும் முகம்'' | குறள் 706 |
| ''தீயினாற் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே<br>நாவினாற் சுட்ட வடு'' | குறள் 129 |

"நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்" குறள் 28

"... ___ அலவுமென் நெஞ்சு" சிலம்பு 18-17

"மான்மணி வீழும் ___ ... _" சிலம்பு 17-4-2

"கொடுவரி மறுகுங் குடிஞை கூப்பிடும்
இடிதரு முளியமும் ......" சிலம்பு 13-31

"காவிரிப் பட்டினங் கடல்கொளும்... _ ..." மணி 28-135

" _____ வெரூஉப்பகை நீங்கும்" மணி 12-95

சங்க கால இலக்கியங்கள் அனைத்திலும் ஐநூற்றுப் பதினைந்து இடங்களில் -Ø விகுதி ஒன்றன்பாலை உணர்த்தி வருகின்றது. இவற்றுள் புறநானூற்றில் ஒரு இடத்திலும் (போன்ம், 19-6) குறுந்தொகையில் பதினொரு இடங்களிலும் (ஆம், 185-4; 225-7; 319-8; 388-7; நோம், 4-1, 4-1, 4-4, 202-1, 202-1, 202-5 வேம், 103-1) அகநானூற்றில் ஏழு இடங்களிலும் (ஆம், 98-21, 325-22, 371-11; போன்ம், 248-9, 253-8, 332-5, 371-12) ஐங்குறு நூற்றில் இரு இடங்களிலும் (நோம், 59-9, ஆம், 379 2) கலித் தொகையில் ஏழு இடங்களிலும் (ஆம், 39-34 (5), தகைம், 5-9, புரைம், 54-2) உ இன்றி, -ம்- முடன் வந்துநின்று ஒன்றன்பாலை உணர்த்துகின்றது என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

## 6.2.4 –று

இவ்விகுதியை -து விகுதியின் மாற்று வடிவமாகக் கொள்ள லாம். அதாவது -து விகுதியே உருபுப் புணர்ச்சியின் காரணமாக –று என மாற்று வடிவம் கொண்டு வருகின்றது. எனினும் இங்குத் தனியாகத் தரப்படுகின்றது.

இவ்விகுதி வினைமுற்றுக்களிலேயே அதிகம் வரக் காண்கி றோம். வினையாலணையும் பெயராகப் புறத்தில் மட்டும் ஒரே ஒரு இடத்தில் வந்துள்ளது.

| | வினைமுற்று | வினையாலணையும் பெயர் |
|---|---|---|
| பதி | 6 | — |
| ஐங் | 48 | — |
| அகம் | 76 | — |
| நற் | 73 | — |
| குறு | 85 | — |
| புறம் | 61 | 1 |
| பத்து | 5 | — |
| பரி | 21 | — |
| கலி | 44 | — |
| குறள் | 3 | — |
| சிலம்பு | 25 | — |
| மணி | — | — |

**6.2.4.1 உரையாசிரியர்கள்**

இவ்விகுதிக்கான எடுத்துக்காட்டுக்களைக் காட்டிச் செல்லு கின்ற இளம்பூரணர் குறிப்புவினை அடிகளை மட்டுமே தந்து சென்றுள்ளார் (சூத். 216).

| | |
|---|---|
| கோடின்று | நாயன்று |
| செவியின்று | நரியன்று |

சேனாவரையர் (சூத் 217, 220)

| | | |
|---|---|---|
| புக்கன்று | சென்றன்று | இன்று |
| உண்டன்று | கூயின்று | அன்று |
| வந்தன்று | போயின்று | கோடின்று |

ஆகிய எடுத்துக்காட்டுக்களையும், நச்சினார்க்கினியர் (சூத். 222)

| | | |
|---|---|---|
| புக்கன்று | வந்தன்று | கூயின்று |
| புக்கின்று | வந்தின்று | போயின்று |
| உண்டன்று | சென்றன்று | இன்று |
| உண்டின்று | சென்றின்று | அன்று |
| | | நன்று |

ஆகியவற்றையும் காட்டி நிற்பர். மேலும் நச்சினார்க்கினியர் இந்த றகர உகரம் உயர்திணையிலும் வருவதை சுட்டிக் காட்டிச் செல்லுகிறார். "றகர உகரம் தாலி களைந்தன்றும் இலனே"

(புறம் 77-7) எனவும் 'வியந்தன்று இழிந்தன்று மிலனே' (புறம்7-10) எனவும், உயர்திணைக்கண்ணும் வந்ததால் எனின், அவை 'களைந்தான், வியந்தான், இழிந்தான் என்பனவற்றிற்கு மறையாய் களைந்திலன், வியந்திலன், இழிந்திலன் என நிற்கின் றவை 'களைந்தன்றுமிலன், வியந்தன்றுமிலன், இழிந்தன்றுமிலன்' என முற்றுவினைத் திரிசொல்லாய் நின்றன'' என கூறிச் செல்லு கிறார். தெய்வச்சிலையார் (சூத். 213)

இன்று அன்று

ஆகியவற்றைத் தருவார். கல்லாடனரும் (சூத். 222) குறிப்பு வினை முற்றுக்களை மட்டுமே எடுத்துக் காட்டுக்களாகத் தந்து செல் லுகிறார்.

கோடின்று, நன்று

அன்று

### 6.2.4.2 சூழல்கள்

இவ்விகுதி

1. -அன்- சாரியைக்குப் பின்னரும்
2- -இன்- இறந்தகால இடைநிலைக்குப் பின்னரும்
3. குறிப்பு வினை முற்றுக்களுக்குப் பின்னரும்
4. வினையாலணையும் பெயர் விகுதி -Ø-க்குப் பின்னரும்

வரும்.

### 6.2,4.2.1 -அன்- சாரியைக்குப் பின்னர்

| | | |
|---|---|---|
| அலைத்தன்று | வருத்துகின்றது | பதி 16-20 |
| வந்தன்று | வந்தது | ஐங் 101-3 |
| (கம்) என்றன்று | கம் என்று மணம் வீசு கின்றது | அகம் 23-5 |
| தந்தன்று | தந்தது | நற் 152-2 |
| அமைந்தன்று | அமைந்தது | குறு 313-5 |
| அறிந்தன்று | அறிந்தது | புறம் 47-7 |
| அமர்ந்தன்று | பொருந்திற்று | பத்து 1-102 |
| உடைத்தன்று | உடைத்தொழித்தது | பரி 6-23 |
| அறைந்தன்று | சாற்றிற்று | கலி 141-4 |
| தீர்ந்தன்று | விட்டது | குறள் 612 |

இச்சூழலில் பிற்காலப் பழந்தமிழ் நூல்களாகிய சிலம்பு, மணிமேகலை ஆகியவற்றில் இவ்விகுதி வராதது நோக்கத்தக்கது. குறளில் கூட மூன்று இடங்களிலேயே இவ்விகுதி வருகிறது.

### 6.2.4.2.2 -இன்- இறந்தகால இடைநிலைக்குப் பின்னர்

இதன் பின்னர் -று, -த்து ஆகிய இரண்டும் பதில்நிலை வழக்கில் உள்ளன.

| | | |
|---|---|---|
| தொடங்கின்று | தொடங்கியது | ஐங் 75-2 |
| உயங்கின்று | வருந்திற்று | அகம் 17-3 |
| ஓவின்று | அடங்கிவிட்டது | நற் 319-1 |
| ஆகின்று | ஆகியது | குறு 15-4 |
| போயின்று | நீங்கப்பெற்றது | புறம் 380-16 |
| கழீஇயின்று | கழுவிற்று | பரி 20-5 |
| ஓடின்று | ஓடிற்று | கலி 102-20 |
| ஆகின்று | ஆயிற்று | சிலம்பு 24-11 |

### 6.2.4.2.3 குறிப்பு வினையடிகளுக்குப் பின்னர்

சங்ககாலத் தமிழ் நூல்கள் அனைத்தையும் நோக்க அகநானூறு (11), குறுந்தொகை (23), குறள் (1), சிலம்பு (16) ஆகியவற்றில் மொத்தமாக ஐம்பத்தொரு இடங்களில் இவ்விகுதி இச்சூழலில் பயின்று வருகின்றது.

| | | |
|---|---|---|
| நன்று | நன்று | அகம் 77-2 |
| பொய்க்குவது அன்று | பொய் சொல்லாதது | குறு 26-5 |
| அளவின்று | அளத்தற்கரிய ஆழமுடையது | குறு 3-2 |
| பாற்றன்று | முறைமைத்தன்று | குறள் 825 |
| அன்று | அன்று | சிலம்பு 8-63 |

### 6.2.4.2.4 வினையாலணையும் பெயர் விகுதி-∅-க்குப் பின்னர்

புறநானூற்றில் மட்டுமே ஒரு இடத்தில் இவ் விகுதி இச்சூழலில் வரக் காண்கிறோம்.

| | | |
|---|---|---|
| நன்று | நல்வினையை | புறம் 213-22 |

## 6.2.5 -த்து

-து விகுதியைப் போலவே இவ்விகுதியும் வினைமுற்றுக்கள் வினையாலணையும் பெயர்கள் ஆகிய இரண்டிலும் பயின்று வரினும், கலித்தொகை நீங்கலாக ஏனைய இலக்கியங்களில் வினை முற்றுக்களுடனேயே அதிகம் பயின்று வருகின்றது.

-த்து

| | வினைமுற்று | வினையாலணையும் பெயர் |
|---|---|---|
| பதி | 5 | 1 |
| ஐங் | 7 | 2 |
| அகம் | 15 | 5 |
| நற் | 24 | 1 |
| குறு | 35 | 2 |
| புறம் | 25 | 8 |
| பத்து | 7 | 1 |
| பரி | 2 | — |
| கலி | 12 | 22 |
| குறள் | 33 | — |
| சிலம்பு | 15 | 1 |
| மணி | 2 | — |

தொல்காப்பியர் -த்து விகுதியைப் பற்றித் தனிப்பட்ட முறையில் கூறாததால் இதனைத் -து விகுதியுடனேயே இணைத்துக் கூறு கிறார் எனக் கொள்ளலாம். இவ்விகுதி இறந்தகால இடைநிலை யாகிய -இன்- னுடன் சேர்ந்து வரும் பொழுதும், சாரியையாகிய -அன்- னுடன் சேர்ந்து வரும் பொழுதும், குறிப்பு வினையடியாகிய -அல்-போன்றவற்றுடன் சேர்ந்து வரும் பொழுதும் உருபுப் புணர்ச் சியின் காரணமாக -ற்று என மாற்றம் பெற்று வருகின்றது. ஆனால் -து இந்த சூழ்நிலைகளில் வரும் பொழுதெல்லாம் -று என்றே மாற் றம் பெற்று நிற்கக் காணுகின்றோம். எனவே -த்து விகுதி -து விகுதியுடன் இணைத்துக் கூறப்படாமல் தனியாகவே இங்கு விளக் கப்படுகின்றது.

### 6.2.5.1 உரையாசிரியர்கள்

இவ்விகுதிக்கான எடுத்துக்காட்டுளைக் காட்டிச் செல்லுகின்ற

இளம்பூரணர் (சூத். 213, 216)

கூயிற்று கோடுடைத்து
தாயிற்று செவியுடைத்து

போன்றவற்றையும், சேனாவரையர் (சூத். 217, 213)

கூயிற்று உடைத்து
போயிற்று நெடுஞ்செவித்து

போன்றவற்றையும், நச்சினார்க்கினியர் (சூத். 219, 222)

கூயிற்று உடைத்து அணித்து
போயிற்று நெடுஞ்செவித்து சேய்த்து

போன்றவற்றையும், தெய்வச்சிலையார் (சூத். 210)

கூயிற்று

போன்றவற்றையும், கல்லாடனார் (சூத். 219)

கூயிற்று உடைத்து மேற்று
தாயிற்று செம்மற்று வைகற்று
கோடுடைத்து குறுங்கோட்டிற்று செலவிற்று

போன்றவற்றையும் தருவர்.

### 6.2.5.2 சூழல்கள்

இவ்விகுதி

1. -இன்- இறந்தகால இடைநிலைக்குப் பின்னரும்
2. -அன்- சாரியைக்குப் பின்னரும்
3. குறிப்பு வினையடிகளுக்குப் பின்னரும்
4. வினையாலணையும் பெயர் விகுதி -Ø-க்குப் பின்னரும்

வரும்.

### 6.2.5.2.1 -இன்- இறந்தகால இடைநிலைக்குப் பின்னர்

பதிற்றுப்பத்து, நற்றிணை, பத்துப்பாட்டு, மணிமேகலை ஆகிய இலக்கியங்கள் நீங்கலாக ஏனைய இலக்கியங்கள் அனைத்திலும் வினைமுற்றில் இவ்விகுதி இச்சூழலில் வருகின்றது. எனினும் சங்ககால இலக்கியங்கள் அனைத்தையும் நோக்க இருபத்து மூன்று இடங்களிலேயே (ஐங் 1, அகம் 1, குறு 3, புறம் 1, பரி 1,

கலி 7, குறள் 3, சிலம்பு 6) இவ்விகுதி இச்சூழலில் காணப்படு கின்றது.

| | | |
|---|---|---|
| அருளிற்று | திருவருள் புரிந்தது | ஐங் 394-2 |
| எல்லிற்று | வந்துவிட்டது | அகம் 362·7 |
| நிலையிற்று | நிலைபெற்றது | குறு 143-3 |
| நிலையிற்று | நிலைபெற்றது | புறம் 39-9 |
| ஆயிற்று | ஆயிற்று | பரி 7-35 |
| கூடிற்று | கூடிவிட்டது | கலி 147-55 |
| தங்கிற்று | நிலைபெற்றது | குறள் 613 |
| காட்டிற்று | காட்டிற்று | சிலம்பு 4-2 |

### 6.2.5.2.2 -அன்- சாரியைக்குப் பின்னர்

சங்ககால இலக்கியங்கள் அனைத்தையும் நோக்க இவ்விகுதி கலித்தொகையில் ஒரு இடத்தில் மட்டுமே இச்சூழலில் வருகின்றது

| | | |
|---|---|---|
| கண்டற்று | கண்டது | கலி 62-26 |

### 6.2.5.2.3 குறிப்பு வினையடிகளுக்குப் பின்னர்

| | | |
|---|---|---|
| தகைத்து | தன்மையுடைய தாயிற்று | பதி 60-1 |
| சேய்த்து | தொலைவின் கண்ணுள்ளது | ஐங் 443-1 |
| உடைத்து | உடையது | அகம் 99-14 |
| யாணர்த்து | புதுவருவாயினை யுடையது | நற் 38-3 |
| அளித்து | இரங்கற்குரியது | குறு 153-3 |
| உரித்து | உரித்து | புறம் 213-11 |
| உடைத்து | உடைத்து | பத்து 10-453 |
| இயல்பிற்று | தன்மையுடையது | பரி 7-48 |
| உடைத்து | உடைத்து | கலி 4-22 |
| சிறுமைத்து | சிறுமையுடைத்து | குறள் 889<br>குறள் 1020 |
| உடைத்து | பொலிவுடைத்து | சிலம்பு 13-97 |
| பெயர்த்து | பெயர் உடையது | மணி 10-68 |

அற்று, பாற்று போன்ற குறிப்பு வினைச்சொற்கள் பலவேறு கால எச்சங்களின் பின்னர் வருதல் கண்கூடு. குறளில் இவை இருபத் தைந்துக்கும் மேற்பட்ட இடங்களில் வரக் காணலாம்.

| | | |
|---|---|---|
| எறிந்தற்று | எறிந்த தன்மைத்து | கலி 83-30 |
| பொழிந்தற்று | பொழிந்ததன்மைத்து | கலி 100-11 |
| மருட்டிற்று | மயக்கினாற் போலும் | குறள் 1020 |
| செய்தற்று | செய்தாற்போலும் | குறள் 1030 |

**6.2.5.2.4 குறிப்பு வினையாலணையும் பெயர் விகுதி -Ø-க்குப் பினனர்**

| | | |
|---|---|---|
| நசைத்து | விரும்பப்படுவது | பதி 67-20 |
| பதுக்கைத்து | பதுக்கைகளை யுடைத்து | ஐங் 362-1 |
| பதுக்கைத்து | பதுக்கைகளை உடையது | அகம் 151-11 |
| கருவித்து | தொகுதிகளையுடையது | நற் 328-9 |
| அளவைத்து | அளவிற்கு உட்பட்டது | குறு 102-2 |
| செவித்து | செவிக்கண்ணது | புறம் 68-3 |
| உரித்து | உரிய தொழில் | பத்து 10-240 |
| அளித்து | அளித்தக்க | கலி 110-19 |
| நீர்த்து | நீர்மையுடைத்து | சிலம்பு 23-115 |

**6.2.6 -உ**

சங்ககால இலக்கியங்கள் அனைத்தையும் நோக்க இவ்விகுதி ஐம்பத்தாறு இடங்களில் பயின்று வரக் காண்கின்றோம்.

தொல்காப்பியர் இவ்விகுதி பற்றி ஏதும் கூறவில்லை. உரையாசிரியர்களும் இவ்விகுதிக்கான எடுத்துக்காட்டுக்கள் ஏதும் தராமலேயே செல்கின்றனர். இவ்விகுதி வினைமுற்றில் மட்டுமே பயின்று வருகின்றது.

**6.2.6.1 சூழல்**

இவ்விகுதி

1. இறந்தகால இடைநிலைகளுக்குப் பின்னர் வரும்.

**6.2.6.1.1 இறந்தகால இடைநிலைகளுக்குப் பின்னர்**

| | | |
|---|---|---|
| அற்று | கெட்டது | பதி 71-19 |
| அலர்ந்து | மலர்ந்து | ஐங் 346-2 |
| உலந்து | முடிந்தது | அகம் 317-1 |
| இறந்து | நீங்கிற்று | புறம் 325-2 |

| | | |
|---|---|---|
| வீழ்ந்து | பெய்தது | குறள் 42-2 |
| கோத்து | கொண்டது | பரி 7-33 |
| இறுத்து | வந்துவிட்டது | சிலம்பு 4-20 |

இவ்வாய்வாளரின் பேச்சுமொழியில் இவ்வாறான வழக்கு உள்ளதை இங்கு நினைவு கூருதல் பொருந்தும்.

அது வந்து
அது இருந்து

போன்றவற்றை எடுத்துக் காட்டாகக் கொள்ளலாம்.

### 6.2.7 -டு

தொல்காப்பியர் இவ்விகுதியையும் ஒன்றன்பால் விகுதியாகக் கூறியிருப்பினும் சங்க கால இலக்கியங்களில் உண்டு (புறம் 9-5) காந்தட்டு (குறு. 1-4) போன்ற எடுத்துக் காட்டுக்களே காணப்படு கின்றன. இவைகளில் உண்டு என்ற எடுத்துக்காட்டே அதிகம் காணப்படுகின்றது.

### 6.2.7.1 உண்டு என்னும் வினைமுற்று

உண்டு என்னும் வினைமுற்று அஃறிணை ஒருமையிலேயே பெரும்பாலும் வந்துள்ளது எனினும், பன்மையிலும் மிக மிக அரி தாக வந்துள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கது.

"நனந்தலை யுலகஞ் செய்தநன் றுண்டெனின்"

பதி 63-18

"கனவாண்டு மருட்டலும் உண்டே" அகம் 158-11

என்பன போன்று அஃறிணை ஒருமையில் பல இடங்கள் வர அஃறிணைப் பன்மையில் முன்பழந்தமிழில் ஒரு இடத்திலும் பின்பழந் தமிழில் ஒரு இடத்திலும் மட்டுமே வரக் காண்கிறோம். குறுந் தொகையில்

"குருகும் உண்டுதான் மணந்த ஞான்றே" குறு 25-5

என வருவதும் இதற்கு உரை எழுதும் உரையாசிரியர் "நாரைகளும் ஆண்டுளவாயின" என எழுதிச் செல்லுவதும், மணிமேகலையில்

"போக புவன முண்டென .... " மணி 27-45

என வருவதும் அதற்கு உரை எழுதும் ஆசிரியர் "வேறு உலகங் களும் உண்டு" எனப் பன்மையில் எழுதுவதும் குறிப்பிடத்தக்கவை.

மட்டுமின்றி இச்சொல் சிலப்பதிகாரத்தில் உயர்திணைப் பன்மையிலும் வருவதைக் காண்கிறோம்.

"பெண்டிரும் உண்டுகொல் பெண்டிரும் உண்டுகொல்
கொண்ட கொழுந ருறுகுறை தாங்குறூஉம்
பெண்டிரும் உண்டுகொல் பெண்டிரும் உண்டுகொல்
சான்றோரும் உண்டுகொல் சான்றோரும் உண்டுகொல்
ஈன்ற குழவி எடுத்து வளர்க்குறூஉம்
சான்றோரும் உண்டுகொல் சான்றோரும் உண்டுகொல்"
சிலம்பு 19-51

எனவும்,

" ——— ஈங்கிவர்க்
குண்டோ வுலகத் தொப்போரென்றக்
கருந்தொழிற் கொல்லன் சொல்ல ——— " சிலம்பு 16-201

எனவும் வருதல் காண்க.

பழந்தமிழ் நூல்களில் உண்டு என்பது ஆண்பாலுடனோ அல் லது பெண்பாலுடனோ வருதலைக் காணமுடியவில்லை. முதன்முத லில் பலர்பாலிலும் பின்னர் இது ஐம்பால் இருதிணைச் சொற்களுட னும் வந்த நிலையில்தான் நன்னூலார்

"வேறில்லை யுண்டைம் பான்மூ விடத்தன" (சூத். 339)

எனக் கூறிப் போந்தார் எனக் கருதலாம். இதற்கு உரை எழுது வோரும்

| | |
|---|---|
| யான், யாம் <br> நீ, நீர், நீவிர் <br> அவன், அவள், அவர் <br> அது, அவை | } உண்டு |

என எடுத்துக்காட்டுக்கள் தந்து சென்றுள்ளனர்.

### 6.2.7.2 உரையாசிரியர்கள்

இதற்கு எடுத்துக்காட்டுக்களைத் தந்து செல்கின்ற உரையா சிரியர்கள் குறுந்தாட்டு (இளம். 213; சேனா. 217; நச். 219) உண்டு

(தெய். 211), கொடுந்தாட்டு (கல். 219) போன்றவற்றைத் தந்து செல்கின்றனர். குறுந்தாட்டு, கொடுந்தாட்டு போன்ற எடுத்துக் காட்டுக்கள் எந்த இலக்கியங்களிலும் காணப்படவில்லை. முன்னரே குறிப்பிட்டபடி 'உண்டு' என்ற எடுத்துக்காட்டே அதிகம் காணப்படுகின்றது (பதி 1, அகம் 16, நற் 8, குறு 4, புறம் 18, பத்து 2, பரி 2, கலி 27, குறள் 17, சிலம்பு 41, மணி 29). தொல்காப்பியரும் 'உண்டு' என்ற வடிவத்தில் வரும் -டு வை மையமாக வைத்தே -டு வையும் ஒரு விகுதியாகச் சேர்த்திருக்கலாம்.

### 6.2.7.3 சூழல்

இவ்விகுதி

1. குறிப்பு வினையடிகளுக்குப் பின்னர்வரும்.

### 6.2.7.3.1 குறிப்பு வினையடிகளுக்குப் பின்னர்

| | | |
|---|---|---|
| உண்டு | நிலைபெறும் | பதி 63-18 |
| உண்டு | உளது | அகம் 271-17 |
| உண்டு | உண்டு | நற் 382-9 |
| காந்தட்டு | காந்தளை உடையது | குறு 1-4 |
| உண்டு | உண்டு | புறம் 110-6 |
| உண்டு | உளது | பத்து 8-22 |
| உண்டு | உளது | பரி 3-58 |
| உண்டு | உண்டு | கலி 6-11 |
| உண்டு | உண்டு | குறள் 469 |
| உண்டு | உளது | சிலம்பு 30-59 |
| உண்டு | உளது | மணி 3-64 |

## 6.3 பட்டியல்கள்

### 6.3.1 பட்டியல் 1: அஃறிணை ஒருமை விகுதிகள்

| | -அது | -த்து | -உ | -று | -து | -டு | -∅ (-உம்) |
|---|---|---|---|---|---|---|---|
| பதி | 6 | 6 | 1 | 6 | 10 | 1 | 3 |
| ஐங் | 29 | 9 | 21 | 48 | 35 | — | 37 |
| அகம் | 122 | 20 | 12 | 76 | 99 | 16 | 51 |
| நற் | 74 | 25 | — | 73 | 51 | 8 | 33 |
| குறு | 47 | 37 | 12 | 85 | 84 | 5 | 40 |
| புறம் | 118 | 33 | 3 | 62 | 130 | 18 | 48 |
| பத்து | 12 | 8 | — | 5 | 8 | 2 | 9 |
| பரி | 28 | 2 | 1 | 21 | — | 2 | 12 |
| கலி | 192 | 34 | — | 44 | 74 | 27 | 136 |
| குறள் | 143 | 33 | — | 3 | 43 | 17 | 50 |
| சிலம்பு | 150 | 16 | 6 | 25 | 37 | 41 | 25 |
| மணி | 77 | 2 | — | — | 7 | 29 | 71 |

6.3.2 பட்டியல் 2 : -அது

| | வினைமுற்று | | | | | | | | | | வினையாலணையும் பெயர் | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | இறந்தகாலம் | | | | இறப்பில் காலம் | | | | எதிர் மறை | குறிப்பு | இறந்த காலம் | இறப்பில் காலம் | | | எதிர் மறை | குறிப்பு |
| | -இ- | -ன்- | -ட்- | ஏனை | -த்- | -த்கு- | -(ப்)ப்- | -கின்று- | -த்- | | இறந்த காலத் தொகை | -த்- | -த்தும்- | -(ப்)ப்- | -த்- | |
| பதி | — | — | — | 1 | — | 1 | — | — | — | — | 1 | 1 | — | — | — | 2 |
| ஐங் | — | — | — | 3 | 2 | — | 2 | — | — | 3 | 5 | 6 | — | — | — | 8 |
| அகம் | — | — | — | 5 | 8 | — | — | 3 | — | 25 | 21 | 28 | — | 7 | — | 25 |
| நற் | — | — | — | 7 | 16 | — | — | 3 | 1 | 8 | 14 | — | — | — | — | 16 |
| குறு | 2 | — | — | 5 | 5 | — | — | — | — | 9 | 11 | 9 | — | 2 | — | 4 |
| புறம் | — | — | — | 8 | 12 | — | 13 | — | — | 14 | 18 | 17 | — | 4 | — | 32 |
| பத்து | 2 | — | — | — | 2 | — | — | — | — | 5 | — | — | — | — | — | 3 |
| பரி | 3 | — | — | 7 | 1 | — | — | — | — | 1 | 10 | — | — | 2 | — | 4 |
| கலி | 3 | — | 1 | 16 | — | — | — | — | — | — | 67 | 39 | 1 | 27 | 1 | 37 |
| குறள் | — | — | — | 8 | 2 | — | — | — | — | 32 | 31 | 19 | — | 19 | — | 32 |
| சிலம்பு | 6 | 3 | — | 43 | 4 | 1 | — | — | — | 9 | 55 | 28 | — | 21 | 2 | 18 |
| மணி | 6 | — | 1 | 26 | — | — | 1 | 1 | — | 12 | 20 | — | — | — | 4 | 6 |

### 6.3.3 பட்டியல் 3: -த்து

| | வினைமுற்று | | | வினையாலணையும் பெயர் |
|---|---|---|---|---|
| | இறந்த காலம் | | குறிப்பு | குறிப்பு |
| | -இன்- | -அன்- | | |
| பதி | — | — | 5 | 1 |
| ஐங் | 1 | — | 6 | 2 |
| அகம் | 1 | — | 14 | 5 |
| நற் | — | — | 24 | 1 |
| குறு | 3 | — | 32 | 2 |
| புறம் | 1 | — | 24 | 8 |
| பத்து | — | — | 7 | 1 |
| பரி | 1 | — | 1 | — |
| கலி | 7 | 1 | 4 | 22 |
| குறள் | 3 | — | 30 | — |
| சிலம்பு | 6 | — | 9 | 1 |
| மணி | — | — | 2 | — |

### 6.3.4 பட்டியல் 4: -உ

| | வினைமுற்று |
|---|---|
| | இறந்த காலம் |
| | இறந்த கால விகுதி |
| பதி | 1 |
| ஐங் | 21 |
| அகம் | 12 |
| நற் | — |
| குறு | 12 |
| புறம் | 3 |
| பத்து | — |
| பரி | 1 |
| கலி | — |
| குறள் | — |
| சிலம்பு | 6 |
| மணி | — |

### 6.3.5 பட்டியல் 5: -று

| | வினைமுற்று | | | | வினையாலணையும் பெயர் |
|---|---|---|---|---|---|
| | இறந்த காலம் | | | குறிப்பு | குறிப்பு |
| | -அன்- | -இன்- | -பிற- | | |
| பதி | 5 | — | 1 | — | — |
| ஐங் | 39 | 9 | — | — | — |
| அகம் | 47 | 18 | — | 11 | — |
| நற் | 48 | 25 | — | — | — |
| குறு | 46 | 16 | — | 23 | — |
| புறம் | 49 | 12 | — | — | 1 |
| பத்து | 5 | — | — | — | — |
| பரி | 16 | 5 | — | — | — |
| கலி | 29 | 15 | — | — | — |
| குறள் | 2 | — | — | 1 | — |
| சிலம்பு | — | 9 | — | 16 | — |
| மணி | — | — | — | — | — |

### 6.3.6 பட்டியல் 6 : -து

| | வினை முற்று | | வினையாலணையும் பெயர் | |
|---|---|---|---|---|
| | எதிர்மறை | குறிப்பு | எதிர்மறை | குறிப்பு |
| | -ஆ- | | -ஆ- | |
| பதி | 2 | 3 | — | 5 |
| ஐங் | 4 | 20 | — | 11 |
| அகம் | 9 | 40 | 4 | 46 |
| நற் | 12 | 39 | — | — |
| குறு | 14 | 44 | 1 | 25 |
| புறம் | 22 | 45 | 3 | 60 |
| பத்து | 2 | 6 | — | — |
| பரி | — | — | — | — |
| கலி | 22 | 11 | — | 41 |
| குறள் | 13 | 16 | — | 14 |
| சிலம்பு | 14 | 21 | — | 2 |
| மணி | 5 | 2 | — | — |

6.3.7 பட்டியல் 7: -டு



| | வினைமுற்று |
|---|---|
| | குறிப்பு |
| பதி | 1 |
| ஐங் | — |
| அகம் | 16 |
| நற் | 8 |
| குறு | 5 |
| புறம் | 18 |
| பத்து | 2 |
| பரி | 2 |
| கலி | 27 |
| குறள் | 17 |
| சிலம்பு | 41 |
| மணி | 29 |

# 7

# பலவின் பால்

## 7. 1 பலவின்பால் வினைமுற்றுக்கள்

பலவின்பால் பெயர்கள் எழுவாயாக வரும்போது அவற்றின் பயனிலையாக வருகின்ற வினைமுற்றுக்களும், வினையாலணையும் பெயர்களும் எழுவாயைப் பிரதிபலித்துப் பலவின்பால் விகுதிகளை ஏற்று நிற்கும். இப் பிரதிபலிப்பு பிற பால்களைப் போலவே காணப்படுகின்றன. வினையாலணையும் பெயர்கள் பயனிலையாக மட்டுமின்றி எழுவாயாகவும் வரும் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

### 7.1.1 பலவின்பால் பெயர்களும் பதிலிடு பெயர்களும்

தன்மை, முன்னிலை இடங்களைப் போலன்றிப் படர்க்கையில் வருகின்ற பெயர்களும், பதிலிடு பெயர்களும் எண் மட்டுமின்றித் திணை, பால் வேறுபாடுகளையும் சுட்டி நிற்கும் என்பது முன்னரே கூறப்பட்டது. இந்நிலையில் பலவின்பால் பெயர்களும், பதிலிடு பெயர்களும் இதற்கு விதிவிலக்கல்ல. இவை எண், திணை, பால் ஆகிய மூன்று இலக்கணக் கூறுகளையும் சுட்டி நிற்க வல்லன.

#### 7.1.1.1 பெயர்கள்

பண்டைத் தமிழ் மொழியில் காணப்படும் பல இயற்பெயர்களும், பொதுப் பெயர்களும், பிற பெயர்களும் பன்மை காட்டுவனவாக உள்ளன. இவற்றுள் மிகப் பெருவாரியான பெயர்கள் பன்மையாக இருந்த போதிலும் பன்மைக்குரிய விகுதிகள் எதுவுமின்றியே காணப்படுகின்றன. எடுத்துக்காட்டாக

"...........நீரழி பாக்கம்

..........................

...........பாழா யினவே" பதி 13-19

"பசப்பணிந் தனவான் மகிழ்நவென் கண்ணே" ஐங் 45-4

"புல்லென் றன வென் புரிவளைத் தோளே" ஐங் 133-3

"பயலை செய்தன பனிபடு துறையே" ஐங் 141-3

"........ பருவமு முளவே" அகம் 26-11

"பிரியும் நாளும் பலவா குவவே" குறு 104-5

"............ பிடவும் பூத்தன" குறு 251-3

போன்ற வரிகளில் காணப்படும் பலவின்பால் பெயர்கள் எந்த விதமான ஒட்டுக்களும் இன்றிப் பன்மை காட்டி நிற்கக் காண லாம். இத்தகைய நிலையைப் பண்டைத் தமிழ் இலக்கியங்கள் அனைத்திலும் காணமுடியும். பன்மை காட்டும் கள் விகுதி இன்றியே இவை அனைத்தும் பன்மை காட்டுகின்ற நிலையில் பன்மை காட்டும் வினைகளை ஏற்றுவரும்.

பன்மை விகுதி கொண்ட அஃறிணைச் சொற்களாக ஒரு சிலவே பண்டைத் தமிழில் காணப்படுகின்றன. பண்டைத் தமிழ் இலக்கியங்கள் அனைத்தையும் நோக்கின் நூற்று அறுபது அஃறிணைச் சொற்களே கள் விகுதிபெற்று வந்துள்ளன. பதிற்றுப் பத்து (2), ஐங்குறுநூறு (2), அகம் (2), நற்றிணை (1), புறம் (2), பத்துப்பாட்டு (3), பரிபாடல் (3), கலித்தொகை (10), குறள் (5), சிலம்பு (56), மணிமேகலை (74) ஆகிய நூல்களில் இச் சொற்கள் காணப்படுகின்றன.

| | |
|---|---|
| நிரைகள் | பதி 27-10 |
| அரண்கள் | பதி 44-13 |
| மயில்கள் | ஐங் 291- 2, 292-1 |
| வழிகள் | அகம் 18-11 |
| பார்ப்பினங்கள் | அகம் 31-6 |
| பலிகள் | நற் 293-2 |
| யாண்டுகள் | புறம் 357-4 |
| அழிகள் | புறம் 399-10 |

| | |
|---|---|
| பொருள்கள் | பத்து 1-97 |
| இயங்கள் | பத்து 10-277 |
| களங்கள் | பத்து 10-454 |
| முடிகள் | பரி 2-39 |
| கண்கள் | பரி 7-52 |
| இழைகள் | பரி 10-92 |
| இடும்பைகள் | குறள் 347 |
| துன்பங்கள் | குறள் 1045 |
| பூதங்கள் | குறள் 271 |
| கைகள் | குறள் 1238 |
| சொற்கள் | குறள் 1100 |
| உயிர்கள் | சிலம்பு 10-175 |
| கருவிகள் | சிலம்பு 3-139 |
| இடங்கள் | மணி 6-199 |
| அணுக்கள் | மணி 27-126[1] |

போன்ற சொற்கள் கள் விகுதி பெற்றுப் பன்மை காட்ட, ஆயிரக் கணக்கான சொற்கள் கள் விகுதி பெறாமல் பன்மை சுட்டுதல் காணலாம்.

"ஆண்ட வன்றே யாண்டுகள்............" புறம் 357-4

"......... தூ மலர்க்கண்கள்
அமைந்தன............" பரி 7-52

"கண்ணோடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்
கள் என்ன பயனும் இல" குறள் 1100

"பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு" குறள் 347

"..........ஆனிரைகள்
..........
...... முன்றில் நிறைந்தன" சிலம்பு 12-16-2

---

1. சிலம்பு 12-15-2, 12-16-2, 12-17-2, 16-20, 2:-38, 27-33 .......... (56)

மணி 3-129, 6-199, 10-7, 12-90, 13-60, 24-121, 25-107, 109, 114, 29-290, 30-62, ....... (74)

"ஆதி யில்லாப் பரமா ணுக்கள்
– ... சிதைவது செய்யா" மணி 27-125

போன்றவற்றில் வரும் கள் விகுதிச் சொற்கள் பலவின்பால் காட்டும் விகுதிகளைக் கொண்டுள்ளன.

இவ்வாறு கள் விகுதி பெற்றும் பெறாமலும் அஃறிணைப் பெயர்கள் வரும் நிலையில்தான் தொல்காப்பியர்

"கள்ளொடு சிவணும் அவ்வியற் பெயரே
கொள்வழி யுடைய பலஅறி சொற்கே" (654)

எனக் கூறிப் போந்தார். இதற்குப் பலவேறு வகையான உரைகள் காணப்படுகின்றன. இவை பற்றி இங்கு ஆராயப்படுவதில்லை. பொதுவாக அஃறிணைப்பெயர்கள் அதிலும் பதிலிடுபெயர்களும் (அவை, இவை போல்றவை) இன்னும் இவை போன்ற வேறு பெயர்களும் (பல, சில போன்றவை) வினையாலணையும் பெயர் களும் (வந்த, வந்தன, வந்தவை, நல்லவை, நல்லன போன்றவை) ஒழிந்த பெயர்களும் (இவற்றையே இயற்பெயர் எனத்தொல்காப் பியம் குறிப்பிடுகின்றது போலும்) ஒருமைக்கும் பன்மைக்கும் பொது வாக உள்ளன என்பது இங்குக் குறிப்பிடத் தகுந்தது.

இந்நிலையில்தான் ஏராளமான பெயர்கள் கள் விகுதி பெறா மலே பன்மையை உணர்த்துகின்றன. ஆனல் காலம் செல்லச் செல்ல இப்பெயர்கள் கள் விகுதி பெற்று நிற்கத் தலைப்பட்டன என்பது இங்கு நினைவு கூரத்தக்கது. பதிற்றுப்பத்தில் இரண்டு சொற்களே கள் விகுதி பெற்று வர, சிலப்பதிகாரத்தில் ஐம்பத்தாறு சொற்கள் உள்ளமை காணத்தக்கது.

ஆனால் வினைமுற்றிலும் வினையாலணையும் பெயர்களிலும் இத்தகைய நிலைமை இல்லை. எழுவாய் ஒருமையாயின் ஒருமை விகுதிகளைக் கொண்டும் பன்மையாயின் பன்மை விகுதி களைக் கொண்டும் வருதல் வேண்டும். இதற்கு விதிவிலக்கே இல்லை. எழுவாயாக வரும் பெயர்களை இட்டு வாக்கியத்தை அமைப்போனுக்கு அச்சொல் ஒருமையைக் குறிப்பதா அல்லது பன் மையைக் குறிப்பதா என்பது நிச்சயமாகத் தெரியும். ஆனால்

கேட்போனுக்கோ அல்லது வாசிப்போனுக்கோதான் தெரிவதில்லை. இந்நிலையில்தான் விகுதிகள் ஒருமை, பன்மையைக் காட்டி நிற்கின்றன எனக் கூறுகிறோம். இந்நிலையில் விகுதிகள் எழுவாயின் பிரதிபலிப்பாகவே உள்ளன.

கேட்போன் அல்லது வாசிப்போனை மனதில் கொண்டே தொல்காப்பியமும்

''தெரிநிலை யுடைய அஃறிணை இயற்பெயர்
ஒருமையும் பன்மையும் வினையொடு வரினே'' (656)

எனக் கூறிப்போந்தது. இதற்கு உரை எழுதப் போந்த இளம் பூரணர் ''கள்ளொடு சிவணாத அஃறிணை யியற்பெயர் ஒருமையும் பன்மையும் விளங்குதலையுடைய, அதற்கேற்ற வினையொடு தொடர்ந்த வழி'' எனக் கூறுவது காண்க. ''விளங்குதலையுடைய'' என்ற சொல் உணர்ந்து மகிழ்தற்குரியது. இதற்கு உதாரணம் தரப்போந்த அவர்

ஆ வந்தது
ஆ வந்தன
குதிரை வந்தது
குதிரை வந்தன

ஆகியவற்றைத் தருவார்.

இவற்றையே பின்னர் வந்த இலக்கண ஆசிரியர்கள் 'பால்பகா அஃறிணைப் பெயர்' (நன்னூல் 28) என்றழைத்தனர்.

''பால்பகா வஃறிணைப் பெயர்கள் பாற்பொதுமைய''

என்பது நன்னூல். இதற்கும்

பறவை பறந்தது
பறவை பறந்தன

போன்ற உதாரணங்களையே தருவர் உரைகாரர்கள்.

### 7.1.1.2 பதிலிடு பெயர்கள்

பிற பதிலிடு பெயர்களைப் போலவே பலவின்பால் பதிலிடு பெயர்களும் பழந்தமிழ் இலக்கியங்களில் ஏராளமாக உள்ளன.

இவை பெயர்களைப் போலல்லாமல் பன்மை காட்டும் உருபுகளைக் கொண்டே காணப்படுகின்றன. பன்மை காட்டும் பெயர்கள் பன்மை உருபுகளைக் கொண்டிராவிடினும் பதிலிடு பெயர்கள் கொண்டுள்ளமை குறிப்பிடத்தக்கது. அவை, இவை போன்ற பெயர்கள் பன்மை காட்டும் உருபுகளைக் கொண்டுள்ளன.

"... ... ... .... குன்ற நாடன்
உடுக்குந் தழைதந் தனனே அவையாம்
உடுப்பின் யாயஞ் சுதுமே ... ..." நற் 359-4

"கழைவளர் சாரல் துஞ்சும் நாடன்
அணங்குடை அருஞ்சூள் தருகுவன் எனநீ
நும்மோர் அன்னோர் துன்னார் இவையென"
நற் 386-5

"புல்லா ரினநிரை செல்புற நோக்கிக்
கையிற் சுட்டிப் பையென வெண்ணிச்
சிலையின் மாற்றி யோனே யவைதாம்
மிகப்பல வாயினும் ......... " புறம் 257-8

"சீர்கெழு வெண்முத்த மணிபவர்க் கல்லதை
நீருளே பிறப்பினும் நீர்க்கவைதா மென்செய்யும்"
கலி 9 15

"கடிந்த கடிந்தொரார் செய்தார்க் கவைதாம்
முடிந்தாலும் பீழை தரும்" குறள் 658

"இவைநுமக் குரிய வல்ல இழிந்த
கொழுமீன் வல்சி ... ... ..." அகம் 110-16

" .... ... இவை
ஒத்தன நினக்கெனப் பொய்த்தன கூறி" குறு 223-4

போன்றவற்றில் காணப்படும் அவை, இவை ஆகியவை பன்மைப் பதிலிடு பெயர்களாகும். இப்பதிலிடுபெயர்கள் எழுவாயாக வர அவற்றைப் பிரதிபலித்துப் பலவின்பால் விகுதிகள் வருதல் காணலாம்.

அவை, இவை போன்ற பதிலிடு பெயர்களைப் போன்றே தாம் என்ற பதிலிடு பெயரும் பலவின்பால் விகுதி ஏற்று வருதல் காணலாம்.

"...........அளிய தாமே" பதி 22-38

"...................தாம்
...... அழுதன தோழி
......
...... எங் கண்ணே" குறு 241

"கதுமெனத் தாநோக்கித் தாமே கலுழும்
இதுநகத் தக்க துடைத்து" குறள் 1173

### 7.1.2 பலவின்பால் விகுதிகளும் தொல்காப்பியமும்

பலவின்பால் விகுதி பற்றிப் பேசவந்த தொல்காப்பியம் கிள வியாக்கத்தில்

"அ ஆ வ என வருஉம் இறுதி
அப்பால் மூன்றே பலவறி சொல்லே" (492)

என்றும் வினையியலில்

"அ ஆ வ என வருஉம் இறுதி
அப்பால் மூன்றே பலவற்றுப் படர்க்கை" (701)

என்றும் கூறுதல் காணலாம். இந்நிலையில் அ, ஆ, வ என்ற மூன்றையும் பலவின்பால் விகுதிகளாகத் தொல்காப்பியர் கொண் டமை காணலாம். மேலும் இவர்,

"பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை
அவ்வயின் மூன்றும் நிகழுங் காலத்துச்
செய்யும் என்னும் கிளவியொடு கொள்ளா" (712)

எனக் கூறுவார். இதனால் செய்யும் என்னும் வினைமுற்றும் பலவின்பால் காட்டும் எனக் கருதலாம்.

தொல்காப்பியர் அ, ஆ, வ என்ற மூன்று விகுதிகளைக் குறிப் பிட்டுள்ளார். இவற்றுள் வகரம் அகரத்துள் அடங்குமா எனஅன்று முதல் இன்று வரை பலவேறு இலக்கணிகள் ஆராய்ந்து வந்துள்ள னர். வகரம் அகரத்துள் அடங்கும் என்பதே நம் முடிபு. இதுபற்றிப் பின்னர்க் காணலாம். இதுபோன்றே ஆகாரமும் ஒரு விகுதியா என்ற வினவும் இல்லாமல் இல்லை. செய்யா போன்றவற்றில் வரும் ஆகாரம் பன்மை காட்டும் விகுதி என்பது பண்டைத் தமிழ்

இலக்கண அறிஞர்களின் எண்ணம். இது எதிர்மறையைக் காட்டுவதே என்றும் -Ø பன்மை காட்டுவது என்பதும் நம்முடைய எண்ணம். இதுபற்றியும் பின்னர்க் காணலாம்.

தொல்காப்பியர் ஐகாரம் பற்றிப் பேசுவதில்லை. ஆனால் வந்தவை சென்றவை போன்றவற்றில் காணப்படும் -ஐ பன்மை காட்டுவது இங்கு உணரற்பாலது. இது பற்றியும் பின்னர்க் காண்போம். இந்நிலையில் -அ, -ஐ, -Ø ஆகிய மூன்று உருபுகள் அஃறிணைப் பன்மை காட்டும் விகுதிகள் எனக் கருதலாம்.

### 7.1.3 தொல்காப்பியப் பயிற்சி

தொல்காப்பியத்தில் -அ, -ஐ, -Ø ஆகிய மூன்று விகுதிகள் பலவின்பால் காட்டுவனவாக உள்ளன.

இவற்றுள் அ விகுதி

1. -அன்- சாரியைக்குப் பின்னரும்
2. இறந்தகால இடைநிலைக்குப் பின்னரும்
3. இறப்பில்கால இடைநிலைக்குப் பின்னரும்
4. குறிப்பு வினையடிகளுக்குப் பின்னரும்
5. வினையாலணையும் பெயர் விகுதிகளுக்குப் பின்னரும்

வருதல் காணலாம்.

| | | | |
|---|---|---|---|
| உள்ளன | பொ 200-2 | தகுவன | பொ 227-1 |
| நிலையின | எழுத்து 100-2 | யாத்த | பொ 592-2 |
| கிளப்ப | சொல் 116-2 | புல்லுவ | பொ 217-4 |
| அறிவின | பொ 572-1 | அல்ல | எழுத்து 483-1 |
| காலன | பொ 630-1 | அடுக்குந | சொல் 245-7 |

-ஐ

1. வினையாலணையும் பெயர் விகுதி -அவ்-வுக்குப் பின்னர் வரும்.

| | |
|---|---|
| அணிந்தவை | பொ 259-1 |
| நிற்பவை | பொ 99-8 |
| அல்லவை | பொ 567-1 |

-∅

1. எதிர்மறை -∅-க்குப் பின்னரும்

2. இறப்பில் கால இடைநிலை -உம்-முக்குப் பின்னரும் வரும்

| | | | |
|---|---|---|---|
| கொள்ளா | சொல் 121-2 | செப்பும் | சொல் 434-2 |
| கூடா | சொல் 11-3 | நிகழும் | பொ 94-2 |

### 7.1.4 பெரும்பான்மை விகுதி

பழந்தமிழ் நூல்களில் அஃறிணைப் பன்மையைச் சுட்ட -அ, -∅, -ஐ ஆகிய மூன்று விகுதிகள் காணப்படுகின்றன. இவற்றுள் அகரமே பெரும்பான்மை விகுதியாகக் காணப்படுகிறது. இதனை அடுத்து ∅ விகுதியும் அதனை அடுத்து ஐகாரமும் வருதல் காணலாம். எடுத்துக்காட்டாகப் பதிற்றுப்பத்தில் நாற்பத்துஆறு இடங்களில் அகரம் வரப் பதின்மூன்று இடங்களில் மட்டுமே -∅ காணப்படுகின்றது. ஐகாரம் மூன்று இடங்களிலேயே உள்ளது. மேலும் அகரமே பலவேறு சூழ்நிலைகளுக்குப் பின்னர் வருவதும் பிற விகுதிகள் குறிப்பிட்ட ஓரிரு சூழல்களில் மட்டுமே வருவதும் நினைவு கூரத்தக்கது.

| | -அ | ஐ | -∅ |
|---|---|---|---|
| பதி | 46 | 3 | 13 |
| ஐங் | 77 | 0 | 9 |
| அகம் | 174 | 12 | 52 |
| நற் | 86 | 0 | 8 |
| குறு | 106 | 0 | 35 |
| புறம் | 152 | 7 | 35 |
| பத்து | 55 | 0 | 0 |
| பரி | 35 | 17 | 7 |
| கலி | 176 | 50 | 16 |
| குறள் | 146 | 30 | 37 |
| சிலம்பு | 85 | 11 | 21 |
| மணி | 35 | 5 | 27 |

## 7.2 விகுதிகள்

### 7.2.1 -அ

#### 7.2.1.1 தொல்காப்பியமும் அகர வகரமும்

தொல்காப்பியம் அ, வ, ஆ என மூன்று உருபுகள் பற்றிக் கூறும் என்பது முன்னரே கூறப்பட்டது. இவற்றுள் ஆ என்பதைப் பலவின்பால் உருபாகக் கொள்ள வேண்டுமா என்பது பற்றிப் பின்னர் ஆராயப்படும். வகரம் அகரத்துள் அடங்குமா என்பதே இங்கு ஆராயப்படுவது.

இதுபற்றி இளம்பூரணர் எதுவும் கூறுவதில்லை. ஆனால் சேனாவரையரோ தம்முடைய உரையில் இதுபற்றி விளக்கி நிற்பார்.

இதன் உதாரணமாக, உண்குவ, தின்குவ என்பவற்றைத் தந்து பின்னர்

"அன் பெறாது எதிர்காலத்து வரும் வகர ஒற்று ஊர்ந்து நின்ற அகரமாய் வகர ஈறு அடங்கும் எனின், வினை கொண்டு முடிதல் ஒழிந்து மார் ஈற்றிற்கு உரைத்தது உரைக்க. அவ்வாறு உரைக்கவே, குகரம் பெற்ற வழி அன் பெறற்கு ஏலாமையின் உண்குவ, தின்குவ என்னுந்தொடக்கத்தின் வகர ஈறேயாம் (சூத். 9) என்பார்.

எனவே சேனாவரையர் கருத்துப்படி குகரம் பெற்று வரும் உண்குவ, தின்குவ, கொடுக்குவ, செய்குவ போன்றவையே வகர ஈறு எனக் கொள்ளுதற்குரியவை என்பது பெறப்படும்.

மேலும் சேனாவரையர் வருவ, செல்வ போன்றவை எந்த ஈறினுள் அடங்கும் என எண்ணி

"வருவ, செல்வ எனக் குகரம் பெறாத வழி வகர ஈறாதலும் அகர ஈறாதலும் என இரு நிலைமையும் உடையவாம். என்னை? எல்லா வினைக்கண்ணும் சேறன் மாலைத்தாகிய வகர ஈறு ஆண்டு விலக்கப்படாமையானும், அத்தன்மைத்தாகிய அகர ஈறும் ஆண்டு வந்து அன் பெறாத வழிக் கால வகரம் ஊர்ந்து அவ்வாறு நிற்றலுடைமையானும் என்பது''

எனக் கூறுவார் (சூத். 9). எனவே வருவ, செல்வ என்பவை வகர ஈறாகவும் அகர ஈறாகவும் கொள்ளத்தக்கன என்பது அவருடைய எண்ணம்.

வகர ஈறு வகரம் பெறும் மெல்வினைகளில் மட்டுமன்றி உண்குவ, தின்குவ, கொடுக்குவ போன்றவற்றிலும் வருவதால் இதனை வகர ஈறாகவே கொள்ளவேண்டும் என்பதே சேனா வரையர் கருத்து. இதைத்தான் மாரீற்றுக்கு உரைத்தது உரைக்க என்பார் அவர்.

இதனையே நச்சினார்க்கினியரும்

"இவை அன் பெறாது எதிர்காலத்து வரும் வகர ஒற்று ஊர்ந்து நின்ற அகர ஈறு ஆகாவோ? எனின் குகரம் பெறுதலின் வகர ஈறேயாம்" (சூத். 9) என்பார். எனவே குகரம் பெறுதலே வகர ஈறு எனக் கொள்ளுதற்குரிய காரணம் என்பது விளங்கும்.

தெய்வச்சிலையார் 'உண்கு' என்பது எதிர்காலச் சொல் என்றும் அதனுடன் அ என்பதை இணைத்தால் 'உண்க' என மாறி வியங்கோளாக நிற்குமேயன்றி அஃறிணைப் பன்மையாக வராது எனவும் எனவே அதனுடன் வகரத்தை இணைத்தால் தான் உண்குவ என வரும் எனவும் எனவே வகரமே பன்மை காட்டும் விகுதி என்றும் கூறுவார்.

"உண்கு என நின்ற எதிர்காலச் சொல் பன்மை உணர்த்தும் அகரம் ஏறிய வழி உண்க என வியங்கோட் பொருண்மைப்படும் ஆகலின், ஆங்கு உண்குவ என வகரவுயிர்மெய் கொடுக்க வேண்டுதலின் வகரமெனவோதல் வேண்டுமென்க" என்பது தெய்வச்சிலையார் உரை (சூத். 9). தெய்வச்சிலையார் கருத்துப்படி இங்குவரும் ககர வொற்றே எதிர்காலம் காட்டும். வகரம் அஃறி ணைப் பன்மை காட்டும் எனக் கொள்ளலாம்.

சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் உண்குவ, தின்குவ ஆகியவற்றில் காணப்படும் 'கு' எதைக் காட்டும் எனக் குறிப்பிட்டு வதில்லை. வகரம் பன்மை காட்டும் உருபு எனவே குறிப்பிட்டுள் ளனர்.

ஆனால் இத்தகைய குகரம் அஃறிணைப் பன்மையில் மட்டுமன்றி வேறு விகுதிகளுடனும் வருதல் பழந்தமிழ் இலக்கியங்களில் காணப்படுகின்ற ஒரு பண்பாகும்.

| | |
|---|---|
| அமைகுவன் | ஐங் 36-2 |
| தருகுவன் | அகம் 280-11 |
| பெறுகுவன் | நற் 119-10 |
| துணிகுவன் | குறு 230-2 |
| செய்குவன் | புறம் 28-13 |

போன்ற ஆண்பால் மெல்வினைச் சொற்களில் (காண்க, பிரிவு 2. 2. 1. 2. 3) மட்டுமன்றி

| | |
|---|---|
| தூர்க்குவன் | பத்து 9-271 |

போன்ற வல்வினைகளுக்குப் பின்னரும் வருதல் காணலாம். இந்நிலையைப் பிற இட, திணை, எண், பால்களிலும் காண முடியும்.

| | |
|---|---|
| செல்குவள் | பரி 19-164 |
| அறிகுவள் | நற் 317-6 |
| உவக்குவள் | அகம் 144-11 |
| செல்குவள் | பரி 19-164 |

போன்ற பல இடங்களில் (காண்க, 3. 2. 1. 2. 4) காணமுடிகின்றது. இவ்விடங்களில் எல்லாம் குகரம் வருவது சிந்தித்தற்குரியது.

| | |
|---|---|
| தெளிதுவர் | பரி 73-15 |
| பார்க்குவர் | அகம் 283-5 |
| கொட்குவர் | புறம் 25-6 |

போன்ற பலர்பால் சொற்களிலும் (காண்க, 4. 2. 1. 2. 3)

| | |
|---|---|
| இழக்குவென் | ஐங் 269-5 |
| தகைக்குவென் | ஐங் 118-3 |
| விடுக்குவென் | அகம் 396-11 |
| பெயர்க்குவென் | நற் 362-9 |
| மறக்குவென் | புறம் 175-5 |
| நிறுக்குவென் | கலி 58-23 |

போன்ற தன்மை ஒருமை -என் ஈற்றுச் சொற்களிலும் (அகத்திய லிங்கம், 1983 b: 51)

| | |
|---|---|
| காண்குவல் | பதி 73-16 |
| தருகுவல் | ஐங் 474-4 |
| கிளக்குவல் | பத்து 6-207 |
| செய்குவல் | மணி 23-40 |

போன்ற -அல் ஈற்றுச் சொற்களிலும் (மேற்படி: 54)

| | |
|---|---|
| அமைகுவன் | அகம் 74-14 |
| நடக்குவன் | மணி 13-36 |

போன்ற -அன் ஈற்றுச் சொற்களிலும் (மேற்படி: 67)

| | |
|---|---|
| செல்குவம் | பதி 46-14 |
| காண்குவம் | ஐங் 419-4 |
| தவிர்க்குவம் | நற் 79-10 |

போன்ற தன்மைப் பன்மை -அம் ஈற்றுச் சொற்களிலும் (மேற்படி 96)

| | |
|---|---|
| தீர்க்குவோம் | புறம் 381-16 |

போன்ற -ஓம் ஈற்றுச் சொற்களிலும், (மேற்படி: 87) முன்னிலை ஒருமையில்

| | |
|---|---|
| செல்குவை | பதி 53-5 |
| இறக்குவை | ஐங் 301-3 |
| காண்குவை | குறு 379-5 |

போன்ற சொற்களிலும் பன்மையில்

| | |
|---|---|
| கேட்குவிர் | பத்து 10-297 |
| படர்குவிர் | சிலம்பு 27-239 |

போன்ற சொற்களிலும் (மேற்படி: 139) இன்னும் இத்தகைய பல ஈற்றுச் சொற்களில் குகரம் வரக் காண்கிறோம். இதனைப் பட்டியல் ஐந்து நன்குக் காட்டும். வல்வினையில் மட்டுமன்றி மெல்வினையிலும் இப்பண்பைக் காணலாம்.

இவற்றையெல்லாம் (குகரம் வருவதால்) -வன், -வள், -வர், -வென், -வல், -வன், -வம், -வெம், -வேம், -வை, -விர், -வீர் என்

றெல்லாம் கொள்ளுவதில்லை. இவற்றை -அன், -அள், -அர், -என், -அல், -அன், -அம், -எம், -ஏம், -ஐ, -இர், -ஈர் எனவே கொள்கிறோம். இந்நிலையில் தின்குவ, உண்குவ போன்றவற்றில் வருவதை மட்டும் ஏன் -வ எனக் கொள்ள வேண்டும்?

மேலும் அவர்கள் தரும் உண் என்ற வினையே பல இடங்களில் குகரம் பெற்று வருதல் காணலாம்.

| | |
|---|---|
| உண்குவம் | பதி 52-7; புறம் 136-27 |
| உண்குவர் | மணி 24-140; 30-81 |
| உண்குவாய் | சிலம்பு 12-20-2, 12-21-2, 12-22-2 |
| உண்குவை | புறம் 260-9 |

இதுபோன்றே காண்குவம் (ஐங் 112-3, 446-2) போன்ற சொற்களும் உள்ளன.

மேலும் இவ்வுரையாசிரியர்கள் -என், -ஆம் போன்ற விகுதிகளுக்கு உதாரணங்கள் தரும்போது

| | |
|---|---|
| உண்குவென் | உண்குவேன் |
| உண்குவம் | உண்குவாம் |
| உண்குவெம் | |

போன்றவற்றைத் தருவதோடு "அவை எதிர்காலம் பற்றிவருங்கால் பகரமும் வகரமும்பெற்று வரும். வகரமேற்புழிக் குகரமும் உகரமும் அடுத்து நிற்கும்" (சே. னா. சூத். 202) எனவும் கூறுதல் காண்க.

உண்பெம், உண்குவெம் ஆகியவற்றை -எம் ஈற்றின் உதாரணங்களாகவே இவர்கள் தந்துள்ளனர். -வெம் எனக் கொள்ள வில்லை. இந்நிலையில் வகரத்தைத் தனியொரு ஈறாகக் கொள்ளுவது பொருந்துமா என்பது ஆராய்தற்குரியது.

உண்கு என்பதுடன் அகரத்தை இணைத்தால் உண்க என ஆகிவிடும் என்றும் எனவே வகரமே இணைதல் வேண்டும் என்றும் தெய்வச்சிலையார் குறிப்பிடுவார். அவருடைய வாதமும் பொருந்துவதாகத் தெரியவில்லை. அங்ஙனமாயின் உண்குவர், உண்குவம் போன்றவற்றிலும் வர், வம் என எடுக்க வேண்டிய நிலை ஏற்படும். அவ்வாறு யாரும் கருதுவதில்லை.

தெய்வச்சிலையாரே தன்மைப் பன்மை விகுதிகளுக்கு உதாரணங்கள் தரும்போது உண்குவேம், உண்குவெம், உண்குவம் போன்றவற்றைத் தராதபோதிலும் ஒருமைக்குத் தரும்போது

உண்குவென்

என்பதையும் முன்னிலைக்கு

உண்குவை

ஆகியவற்றையும் தருவார். இங்கு -என், -ஐ எனவே விகுதி களைக் கருதுவார் தெய்வச்சிலையார். இதே நிலையை அகரத் துக்கும் பொருந்தாதது ஏன் என்ற வினா எழும்பாமல் இருக்க முடியாது.

இந்நிலையில் தொல்காப்பியர் வகரம் எனக் கூறியது ஏன் என்ற வினா எழுவது இயற்கையே. பலர்பாலில் பகரத்தை ஏற்று கொண்ட நிலையில்தான் ஒற்றுமை (uniformity) கருதி வகரம் எனக் கொண்டார் என எண்ணலாம். எல்லா வினையுடனும் பகரம் வரும் நிலையில் (வருப, வருவர்) 'ப' என்றும் அதே போன்று எல்லா வினையுடனும் வகரமும் வருதலின் (உண்குவ, தின்குவ) வகரம் என்றும் ஒரே நிலையில் கொண்டார் எனக் கருதலாம்.

எனினும் உண்குவ, தின்குவ போன்றவற்றில் காணப்படும் வகரத்தை வ + அ எனப் பிரித்து அகரம் பன்மை காட்டுவதாகக் கொள்ளுவதே பொருத்தம் எனத் தோன்றுகின்றது.

வகரத்தைத் தனியாகக் கொண்டால் கூடுதலாக ஒரு மாற்றுருபினைக் கொள்ளுதல் வேண்டும். இவ்வாறு பிரித்துக் கொண்டால் அகரத்திலேயே இதனை அடக்கிவிடலாம்.

ஆனால் பலர்பாலில் ப் + அ எனப் பிரிப்பதால் பயன் எதுவும் இல்லை. புதிதாக அகரத்தைத் தனியொரு உருபாகக் கொள்ள வேண்டும். அந்நிலையில் பகரத்தையே கொள்ளுவது நலம் பயக்கும் என்ற நிலையில்தான் பகரம் ஏற்றுக் கொள்ளப் பட்டது.

இந்நிலையில் அகரமே பன்மை உருபாகக் கொள்ளப்படு கின்றது. குகரம் பெறினும் பெறாத வழியும் வருவ, செல்வ

போன்றவற்றிலும் உண்குவ, தின்குவ போன்றவற்றிலும் அகரமே பன்மை உருபாகக் கொள்ளப்படுகின்றது.

வகரத்தைத் தனியொரு விகுதியாகக் கொண்டால்தான் ''வருவ செல்வ எனக் குகரம் பெறாத வழி வகர ஈறாதலும் அகர ஈறா தலும் என இரு நிலைமையும் உடையவாம்'' எனச் சேனா வரையர் கூறுதற்குரிய நிலை ஏற்பட்டது.

இந்நிலை பகர இறுதிக்கு இல்லை. அங்கு அகர ஈறு இல்லாததால் வருவது அனைத்தும் பகர ஈறே. உண்ப என்பதில் உள்ளது போன்று பகரத்தை இயற்கையாகக் கொண்டு வருவன ஆயினும் வருப போன்றவற்றில் வருவன ஆயினும் பகர ஈறே.

அஃறிணைப் பன்மை பற்றிப் பேசும் நன்னூலார்

''அ ஆ ஈற்ற பலவின் படர்க்கை
ஆ வே யெதிர்மறைக் கண்ணதாகும்''

என்பார். இவர் வகரத்தைத் தனியொரு விகுதியாகக் கருத வில்லை என்பது தெளிவாகும்.

மேலும் உகரம் பெற்று வரும் வகர இறுதியைக் கொண்ட சொற்கள் மிக மிகக் குறைவாகவே உள்ளன. பழந்தமிழ் நூல்களில்

| | |
|---|---|
| பருகுவ | அகம் 11-15 |
| முனிகுவ | நற் 360-11 |
| பசக்குவ | கலி 142-22 |

ஆகிய மூன்று சொற்களே காணப்படுகின்றன. ஆனால் பிற விகுதிகளைக் கொண்ட சொற்கள் பலவாக உள்ளமை முன்னரே கூறப்பட்டது. அவை அகரத்தைக் கொண்ட பலவேறு (அ,ன் அன், ஆர், அ) ஈறுகளாகவே கொள்ளப்படுகின்றன. ஆனால் அஃறிணைப் பன்மையில் மட்டும் அகர, வகரமாகப் பிரிக்கப் படுவது பொருத்தமாக இல்லை.

### 7.2.1.2 உரையாசிரியர்கள்

இவ்விகுதிக்கான (வகரமும் பகரமும் இணைக்கப்படுகின்றன) எடுத்துக்காட்டுக்களைக் காட்டிச் செல்லுகின்ற இளம்பூரணர் (சூத். 210, 212)

| | |
|---|---|
| உண்டன | கோடுடைய |
| உண்ணாநின்றன | செவியுடைய |
| உண்பன | உழுந்தல்ல |
| உண்குவ | பயிறல்ல |
| தின்குவ | கரிய |
| கோடில | உழுந்துள |
| செவியில | பயிருள |

ஆகியவற்றையும், சேனாவரையர் (சூத். 9, 213, 220)

| | |
|---|---|
| தொக்கன | உண்ணாநின்றன |
| தொக்க | உண்ணா நின்ற |
| உண்டன | உண்கின்ற |
| உண்ட | உண்பன |
| வந்தன | உண்ப |
| வந்த | வருவன |
| சென்றன | வருவ |
| சென்ற | உரிஞுவன |
| அஞ்சின | உரிஞுவ |
| போயின | உண்குவ |
| போயன | தின்குவ |
| போய | ஓடுவ |
| பாடுவ | உள |
| திருமுவ | கோடில |
| இல | கரிய |
| உடைய | செய்ய |
| அல்ல | நெடுஞ்செவிய |
| பொன்னன்ன | |

ஆகியவற்றையும், நச்சினார்க்கினியர் (சூத். 9, 218, 222)

| | |
|---|---|
| தொக்கன | போயின |
| தொக்க | சேரின |
| தொக்கில | சொல்லின |
| உண்டன | மேவின |

| | |
|---|---|
| உண்ட | துள்ளின |
| உண்டில | போயின |
| வந்தன | போய |
| வந்த | உண்ணுநின்றன |
| வந்தில | உண்ணுநின்ற |
| சென்றன | உண்ணுநின்றில |
| சென்ற | உண்கின்றன |
| சென்றில | உண்கின்ற |
| அஞ்சின | உண்கின்றில |
| தப்பின | உண்பன |
| உரிஞின | உண்ப |
| பொருநின | உண்ணல |
| நண்ணின | வருவன |
| செருமின | வருவ |
| துன்னின | உரிஞுவன |
| உரிஞுவ | உண்குவ |
| தின்குவ | உண்ணல |
| ஓடுவ | தாவுவ |
| | செருமுவ |

போன்றவற்றையும், தெய்வச்சிலையார் (சூத். 9, 209, 213)

| | |
|---|---|
| உண்டன | உண்குவ |
| உண்கின்றன் | அன்ன |
| உண்பன | அனைய |
| உண்ணல | குறுந்தாள |

போன்றவற்றையும், கல்லாடனார் (சூத். 9, 218, 222)

| | |
|---|---|
| உண்டன | தின்ற |
| உண்டில | வந்த |
| உண்ணுநின்றன | போய |
| உண்ணுநின்றில | கோடில |
| உண்கின்றன | கோடுடைய |
| உண்கின்றில | உழுந்தல்ல |
| உண்ட | |

